# கம்பரின்
# கடவுட்கோட்பாடு

டாக்டர் **ப. சுப்பிரமணியன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச். டி., பி.டி.,
*தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு),*
*பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி,*
*திருச்சிராப்பள்ளி.*

*This book is published with the financial assistance of Thirumalai Tirupathi Devasthanams under their Scheme, Financial Assistance for Religions Publications.*

**இசையரசி பதிப்பகம்,**
**25, பெரியார் நகர்,**
**திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி - 620 005.**

## நூல் விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | கம்பரின் கடவுட்கோட்பாடு |
| நூற்பொருள் | : | ஆய்வு நூல் |
| ஆசிரியர் | : | டாக்டர் ப.சுப்பிரமணியன் |
| வெளியீடு | : | இசையரசி பதிப்பகம்,<br>25, பெரியார் நகர்,<br>திருவானைக்கா,<br>திருச்சிராப்பள்ளி - 620 005.<br>தொலைபேசி : 431035 |
| பதிப்பு நாள் | : | திசம்பர் 2001 |
| புத்தகத்தின் அளவு | : | டெம்மி |
| அச்சின் அளவு | : | 11 |
| படிகள் | | 1000 படிகள் |
| விலை | : | ரூ 100/- |
| லேசர் அமைப்பு | : | ரிசர்ச் எய்டு சென்டர்,<br>திருச்சிராப்பள்ளி - 620 023. |
| அச்சியற்றியவர் | : | தி பிரிண்டிங் ஹவுஸ்,<br>6, காஜாமலை மெயின் ரோடு,<br>திருச்சிராப்பள்ளி - 620 023. |

# காணிக்கை

இளம்பிராயத்தில் வயல வரப்புக்களில்
நடத்தி அழைத்துச் சென்றபோதும்
தமிழ் போதித்த என்முதல் ஆசான்;
அறம் வெல்லும்; பாவம் தோற்கும் என்னும் உண்மையை
நெஞ்சில் விதைத்தவர்; என் துன்பங் கண்டபோது
நெஞ்சம் பதைத்தவர்; சத்தியம் தவறா
உத்தமர்; மக்கள் நலத்தில் மாறா வேட்கையர்;
முந்தை யான்செய்த தவத்தால் எனக்கு வாய்த்த
தந்தை - **அமரர் ரெ. பழநிவேலுப்-புண்ணாக்கியார்** அவர்கள்;

கடமை அவரின் உடைமை; கண்ணியம் காத்த திண்ணியர்;
சுற்றம் தழுவிய நற்றவர்; நன்கு கற்றவர்;
ஏர் முனையன்றியும் போர் முனை கண்டவர்;
தத்துவத்தின் மகத்துவம் அறிந்தவர்;
காலன் விரைவாய்க் கூட்டிச் சென்றது
காலம் செய்த கோலமோ?;
அல்ல; அல்ல; அலங்கோலம்.
பொருட்செல்வம் தேடும் பூரியர் அனேகர்
அருட்செல்வம் தேடிய அன்பு இளவல் **அமரர் ப. திருநாவுக்கரசு** அவர்கள்;

மருமகன் அவர் தான்; மருவில்லா மகன்;
மாமா என்றவர் அழைப்பார்; தேனாய் இனிக்கும்;
கன்னலைப் போலப் புன்னகை
காட்டினார்; மின்னலைப் போல மறைந்தெமை
வாட்டினார்; அவர் மரணம்
என்றும் என் நெஞ்சில் ஆறா ரணம்;
ஞாயிறு மறைந்தது; எங்கள் இதயத் தாமரை
கூம்பிக்கிடக்கிறதே; என் செய்வோம்?
மாப்பிள்ளை **அமரர் பி. செந்தில் குமார்** அவர்கள்;

நட்பிற்கு அவர் ஓர் இலக்கணம்; அவரை
நினையாதிருப்பது எக்கணம்?
பிறர் துன்பம் துடைத்த தூயவர்;
பாசம் பொழிவதில் தாயவர்;
அருள் சுரந்திடும் அவர் நெஞ்சம்;
அவர் அறியாதது என்றும் வஞ்சம்;
அவரது உள்ளம் வெள்ளை;
உடுத்திய உடையும் வெள்ளை; பிறரிடம் காட்டிய
அன்போ கொள்ளை; கொள்ளை;
ஆருயிர் நண்பர் **அமரர் ந. தனக்கோடிச்செட்டியார்** அவர்கள்:
ஆகிய நல்லவர் நால்வரின் நினைவிற்கு இந்நூல் காணிக்கை.

\- ஆசிரியன்.



திருமதி. **சாருபாலா. ஆர். தொண்டைமான்,**
எம்.ஏ.,எம்.பில்.,
**மேயர், திருச்சிராப்பள்ளி மாநகராட்சி.**

பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் ப. சுப்பிரமணியன் அவர்கள் **கம்பரின் கடவுட் கோட்பாடு** என்னும் தலைப்பில் அமைந்த தம் முனைவர் பட்ட ஆய்வேட்டினை நூலாகப் படைத்து வழங்கியுள்ளார்.

இந்நூலில் கம்பரின் சமயக் கொள்கை நன்கு ஆராயப்பட்டுள்ளது. நூலாசிரியரின் உழைப்பினையும், பன்னூற் புலமையினையும், நடுவு நிலை தவறா நெஞ்சத்தினையும் நூலில் காணமுடிகிறது.

நூலாசிரியர் முனைவர் ப.சுப்பிரமணியன் அவர்களின் அரிய முயற்சியினைப் பாராட்டி மகிழ்கிறேன். அவர் மேலும் பல நல்ல நூல்களைப் படைத்துத் தமிழன்னைக்கு அணி சேர்க்க வேண்டும் என விழைகிறேன். வாழ்த்துக்கள்.

அன்புடன்,
**சாருபாலா ஆர். தொண்டைமான்.**

திருச்சி.
27.11.2001.

‘கல்விக்கடல்’ ‘கம்பராமன்’

புலவர் எஸ்.கே. இராமராசன்

# அணிந்துரை

கருங்கடலைக் கைநீத்துக் கொள எளிது முந்நீர்க்
கடற்கரையின் நொய் மணலை எண்ணி அளவிடலாம்;
பெருங்கடல்மேல் வருந்திரையை ஒன்றிரண்டென்றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடையிலக்கம் வரித்துவிடலாகும்;
தருங் கடலின் மீனை அள விடலாகும்; வானத்
தாரகையை அளவிடலாம்; சங்கரன் தாள் தமது
சிரங்கொள் திருத்தொண்டர் புராணத்தை அளவிடநஞ்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே

என்று உமாபதிசிவம் திருத்தொண்டர் புராண வரலாற்றில் அருமையாகப் பாடுகிறார். அப்பாடலை எப்பொழுதோ படித்து என் உள்ளம் மறந்துவிட்டது அப்பாடலை நினைப்பூட்டும் சந்தர்ப்பம் தற்போது வந்துள்ளது.

கடலின் மணலை அளவிடலாம்; கடலின் அலைகளையும் அளவிடலாம்; ஆனால் தொண்டர் வரலாற்றை அளவிடுவது எவருக்கும் இயலாத காரியம். அச்செயலைச் செய்ய வல்லவர் சேக்கிழார் பெருமானே என்பது அப்பாடலின் திரண்டகருத்து.

சேக்கிழாரைப் போலவே, அளவிட முடியாத பேராற்றல் படைத்த பெருமகனார் நம்மதிப்பிற்குரிய திருவாளர் முனைவர். ப.சுப்பிரமணியம் ஆவார் என்பதை யான் இங்கே குறிப்பிடுவது உண்மை வழக்காகும். யான் இவ்வாறு எழுதுவதைச் சில அதிமேதாவிகள் மறுக்கக்கூடும். உணர்விலிருந்து எழுதுகிற உண்மை உரைக்குக் கட்டுப்பாடு இல்லை. கவிச்சக்கரவர்த்தி கம்பன்,

பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ

என்றான். எளியேனை இந்நூல் பித்தனாகவும், பேதையனாகவும், பக்தனாகவும் ஆக்கிவிட்டது. இந்நூலைப் பயிலுந்தோறும் என் உள்ளத்து எழுந்த உணர்ச்சிகளைச் சில பக்கங்களால் எழுத இயலாது. முற்றவும் எழுதுவதற்கேற்ற சூழ்நிலையும் இல்லை.

கவிச்சிக்கரவர்த்தி கம்பனின் சமயக் கோட்பாட்டை எழுதுவது மிகவும் கடினமான செயல். கம்பன் வேதாந்தியா, சித்தாந்தியா என்பதை இன்னும் முடிவுகட்ட முடியவில்லை. பெரும்பாலான கவிதைகள் அவன் வேதாந்தி என்பதையே முழக்குகின்றன. ஆனால் அவன் வேதாந்தம் சித்தாந்தத்தை முடிமணியாகக் கொண்டுள்ளது என்பதை மறுக்க இயலாது. இங்கே அடியேனுக்குத் தோன்றிய சில வரிகளைக் குறித்துச் செல்வதனால் நான் வைணவத்திற்கோ, திருமாலுக்கோ முரண்பட்டவனல்லன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குமரகுருபரர் தம்முடைய பண்டார மும்மணிக் கோவையில்

பல்லுயிர்த் தொகுதியும் பயங்கொண்டுய் கெனக்
குடிலை யென்னுந் தடவய னாப்பண்
அருள் வித்திட்டுக் கருணை நீர்பாய்ச்சி
வேதமென்னும் பாதவம் வளர்த்தனை;
பாதவ மதனிற் படுபயன்பலவே, அவற்றுள்
இலை கொண்டுவந்தனர் பலரே, யிலை யொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே, தளிரொரீஇ
அரும் பொடுமலர் பிஞ்சு அருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே;
அவ்வாறுறுப்பு மிவ்வாறு பயப்ப
ஓரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆராவின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே; யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய னாயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கியத்
தீம்புன லமுத மார்ந்தன னதனால்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே.

என்று பாடினார். இப்பாடலுக்கு விளக்கம் எழுதிய மகா மகோபாத்தியாய உ.வே.சாமிநாதையர் அவர்கள் கீழே சிலவரிகள்தான் குறிப்பிட்டார். அவ்வரிகள் ஆழ்ந்த கருத்துடையன. வைதீக சைவத்தின் பிரிவுகளைச் சார்ந்தார் தத்தம் பக்குவத்திற்கேற்றவாறு பயனைப் பெற்றனர் என்பது கருத்து என்றும், சைவ சித்தாந்தத்தின் உண்மையை அறிவித்தப்படி என்றும் உரைத்து அதற்கு மேல் ஒரு படி மேலே சென்று வேதாந்தம் - உபநிடதம் என்று குறிப்பிட்டார். இச்சிறு குறிப்பே டாக்டர் ஐயர் அவர்களின் புலமையை நமக்கு உணர்த்துகிறது.

இதனால் வேதாந்தத்தின் சிகரமே சித்தாந்தம் என்பதையும், சித்தாந்தமே விசிட்டாத்துவைதம் என்பதையும் கூற வேண்டாம்; உண்மையும் அதுவே.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் பாரதப் பண்பாடு முழுமையும் நன்கறிந்தவன். அவனறியாத வேதங்களோ, உபநிடதங்களோ, திவ்வியப் பிரபந்தங்களோ, திருமுறைகளோ இல்லை. கவிச்சக்கரவர்த்தியின் மேதாவிலாசம் நூலில் அங்கங்கே பளிச்சிடுகிறது.

இராமபிரானைக் கவிச்சக்கரவர்த்தி கம்பன்,

> மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர், மும்மைத்தாய
> காலமும் கணக்கும் நீத்த காரணன், கைவில்லேந்திச்,
> சூலமும் திகிரிசங்கும் கரகமும் துறந்து, தொல்லை
> ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி வந்தான்

என்றும்,

> அறந்தலை நிறுத்திவேதத் தருள் சுரந்தறைந்த நீதித்
> திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
> இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத் தேகவீண்டு
> பிறந்தனன் தன்பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்

என்றும் பேசியது அவனின் ஆழ்ந்த புலமையையும் பரந்த நோக்கத்தையும் நமக்குத் தெரிவிக்கிறது. இப்பாடல்களை நன்கு பயின்ற பிறகும் ஒருமனிதன் சமயப் போராட்டம் செய்வானேயானால் அவன் மதிப்புக்குரியவன் அல்லன்.

கவிச்சக்கரவர்த்தியின் தத்துவச்செறிவும், கலைநுணுக்கமும், வேதாந்தப் புலமையும், சித்தாந்தத் தெளிவும் ஒருங்கே கண்ட நம் முன்னோர்கள் கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம் என்று பாடினர்; பரவினர்; புகழ்ந்தனர்.

இன்று நாம் காணும் கம்பரின் கடவுட்கோட்பாடு என்னும் இந்நூல் கவிச்சக்கரவர்த்தியினுடைய பரந்துபட்ட அறிவைத் தெரிவிக்கிறது.

கம்பன், இராமாயணம் முழுமையும் தன் கவிதா விலாசத்திற்குப் போதவில்லையென்று கருதி, இரணிய வதைப் படலம் பாடியுள்ளான். 'மடங்கலாய் மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே' என்ற இளங்கோவின் சொற்கள் அவனை ஈர்த்தனபோலும். இப்படலம் பாடுவதன் மூலம் கம்பன்

தன் விஸ்வரூபத்தைக் காட்ட முனைகிறான். அவன் தன் விஸ்வரூபத்தைக் காண்பித்ததோடு நில்லாமல் தன்திருமேனியில் இலக்கியம் முழுமையும் 'பார் பார்' என்கிறான்.

'பக்தனே என்னுடைய திருமேனியின் வலத்தோளில் சிந்தாமணியைப் பார்; இடத்தோளில் சிலம்பினைப் பார்; என் முடியில் திருமங்கை மன்னனின் கவிதை நடமாடுவதைப் பார்; என் இதயத்தில் திருவாய்மொழியையும் திருவாசகத்தையும் பார்; என் உடல் முழுமையும் சங்க இலக்கியங்கள், குருதிவடிவாகச் சுழன்று வருவதைப் பார்; நானே தமிழ்; தமிழே நான்;' என்று கவிச்சக்கரவர்த்தி முழங்குவதைக் கேட்க முடிகிறது.

இந்நூலாசிரியர் கம்பனின் கடவுட்கோட்பாட்டை ஆய்வதன் மூலமாக தமிழ் இலக்கியங்களையே நமக்கு வடித்துத் தருகிறார்.

இந்நூலாசிரியர் சிறப்பாலும் பிறப்பாலும் சைவரே. ஆயினும் இவருடைய உள்ளம் கம்பனை ஆராயும்போது விரிந்து விரிந்து பரந்து திருமால் வடிவத்தைக் கொள்கிறது.

திருமால்தானே மும்மூர்த்தியாக இருக்கிறான். அம்மூர்த்திகளுக்குள் பேதம் பாராட்டுவது அறியாமையே. இராமபிரானும் திருமாலின் அமிசம்தானே! இராமபிரானைப் புகழ்வதனால் திருமால் உயர்த்தப்படுகிறான். அதுபோலவே சிவபெருமானும் உயர்த்தப் பெறுகிறான்.

இந்தச் சாதாரணமான செய்தியைக் கூட அதிமேதாவிகள் உணராதிருப்பது தமிழர்களின் தவக்குறைவே.

ஆனால் இவ்வாசிரியர் கம்பனுடைய கடவுட்கோட்பாட்டை ஆராய்ந்து ஆராய்ந்து சமரசப்பெரு நிலையை அடைந்துவிட்டார். சைவ சித்தாந்தம் உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாகுமென்பர். அதற்கு இவ்வாசிரியரே எடுத்துக்காட்டு.

இவ்வாசிரியர் பலலாற்றானும் சிவபரம்பொருளையே போற்றுபவர். இவருடைய மரபு திருமங்கை மன்னன் மரபாகும். திருமங்கை மன்னன் தன்னுடைய பெரிய திருமொழியில், தில்லைத் திருச்சித்திர கூடம் பாடும் பதிகத்தில்,

> **திருமால் திருமங்கையோடு ஆடு தில்லை**
> **திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்களே**

என்று பாடியது நடராசமூர்த்தத்தைக் குறிக்குமோ என்ற ஐயம் தோன்றுகிறது. ஆனால் பெரிய திருமடல் பாடுகிற காலத்தில் சிவபெருமானின் ஊர்த்துவதாண்டவத்தைச் சைவப்பெருமக்கள் கூட இங்ஙனம் விவரித்துப் பாடியதில்லை என்னும்படி விவரித்துப் பாடியுள்ளார்.

மன்னு மலை அரையன் பொற்பாவை, வாள்நிலா
மின்னும் அணி முறுவல் செவ்வாய் உமை என்னும்
அன்ன நடையஅணங்கு, நுடங்குஇடைசேர்
பொன் உடம்புவாட, புலன் ஐந்தும் நொந்தகல,
தன்னுடைய கூழைச் சடாபாரம் தான் தரித்து, ஆங்கு
அன்ன அருந்தவத்தின் ஊடுபோய் ஆயிரந்தோள்
மன்னு கரதலங்கள் மட்டித்து, மாதிரங்கள்
மின்னி எரிவீச, மேல் எடுத்த சூழ்கழற் கால்
பொன்னுலகம் ஏழும் கடந்து உம்பர் மேல் சிலும்ப,
மன்னு குலவரையும் மாருதமும் தாரகையும்
தன்னின் உடனே சுழல, சுழன்று ஆடும்
கொல் நவிலும் மூவிலை வேல் கூத்தன், பொடிஆடி,
அன்னவன் தன் பொன்னகலம் சென்றாங்கு அணைந்திலளே?

மேற்கண்ட வரிகள் திருமங்கை மன்னனின் ஆழ்ந்த புலமையையும், பரந்த சமயப்பொதுமையையும் புலப்படுத்துவதாகும்.

இந்தத்திருமங்கை மன்னன் மரபில் பிறப்பதற்குப் பெரும் புண்ணியம் செய்திருக்க வேண்டும். அப்புணணியத்தினால் தான், இந்நூலாசிரியர் கம்பரின கடவுட் கொள்கையை எழுத முறபட்டார் என்பது என் எண்ணம்.

இவ்வாசிரியர் ஒவ்வொரு இயலின் முடிவிலும் தொகுத்து வழங்கும் தொகுப்புரை அமுதாகத் தேனாக இனிக்கிறது. சிலவற்றைப் பார்ப்போம்.

**‘கம்பரின் தமிழ்ப்பற்றும் புலமை நலனும் நூலில் நன்கு வெளிப்படுகின்றன. அவரது மொழி பெயர்ப்புத்திறன் ஆங்காங்கே பளிச்சிடுகிறது.’**

என்றும்,

**‘கம்பரின் காலத்து நிலவிய சமயப் பூசலே, அவர் சமயப் பொதுமைக் கருத்துக்கள் நிரம்பிய காப்பியம் படைக்கக் காரணமாயிற்றெனலாம்;’**

என்றும்,

'மும்மூர்த்திகளைக் குறிப்பிடுகையில், சிவனுக்கு முதலிடம் தந்துள்ளமையால், பெரும்பாலோரின் வழிபாட்டு நெறியினைக் கம்பர் மதித்துப் போற்றுகிறார் என்பது புலனாகிறது;'

என்றும்,

'கம்பர் கண்ணனின் பாலப்பருவ விளையாட்டுக்களைக் குறிப்பிட்டுப்பாடியுள்ளார். அவர் இவ்வவதாரத்திற்குப் பின்னர் வாழ்ந்தாராதலின், கண்ணனின் அவதாரத்தைத் தம் நூலில் சிறப்பித்துப் பேச அவருக்குத் தடையேதும் இருக்கவில்லை எனலாம்.'

என்றும்,

'முத்தேவரில் பிரமனும் சிவனும் இராமனைத் திருமாலெனவும் பரம்பொருளெனவும் பிறர்க்கு விளங்க உரைக்கின்றனர். இதனால் இராமாவதாரச் சிறப்பினை வலியுறுத்துவதே கம்பரின் காப்பிய நோக்கம் என்பதை உணரலாம்'

என்றும்,

'............. காப்பிய மாந்தர்கள் காப்பியத் தலைவனிடம் சரணடைதல் சுட்டப்படுவதோடு, இக்காப்பியம் ஒரு சரணாகதிக் காப்பியம் எனவும் நிறுவப்பெறுகிறது.'

என்றும்,

'சிவன் பெரியவனா? திருமால் பெரியவனா? என வினாக்களை எழுப்பிவாதிடுவோர், பரம் பொருளின் தன்மையை உணராது வியூக நிலையிலுள்ள இரு மூர்த்திகளுள் பெரியவன் யாவன் என வாதிடுவோராவர்.'

'கம்பர் சிவன் பிரமன் ஆகிய கடவுளரைத் தம் நூலில் இழித்துரைக்காது, திருமாலின் பரத்துவம் தோன்ற நூல் புனைந்திருப்பது அவரது நடுநிலைதவறா நெஞ்சத்தைத் தெள்ளிதின் புலப்படுத்தும்.'

'கம்பர் திருமாலையும் திருமாலின் அவதாரமாகிய இராமனையும் பரம்பொருளெனக் கருதினார். இதனால் ஆழ்வார்களின் கடவுட்கொள்கையே கம்பரின் கடவுட் கொள்கை என்னும் முடிவுக்கு வரலாம்.'

என்றும் எழுதியுள்ளார்.

மேல்குறிப்பிட்டுள்ள தொக்குபுரைகளை நோக்கின் ஆசிரியர் முனைவர் ப. சுப்பிரமணியன் அவர்களின் புலமைச் செல்வத்தையும் நடுவுநிலைப் பாங்கையும் ஆராய்ச்சித் திறனையும் நாம் உணர்கிறோம்.

மற்றைய சமயத்திற்கும் வைணவ சித்தாந்தத்திற்கும் ஒரு சிறு வேறுபாடு உண்டு; மாறுபாடல்ல.

சைவ சித்தாந்தம் அட்டமூர்த்தத்தைப்பற்றிப் பேசும். ஈண்டு மூர்த்தம் என்பது திருமேனியையே. சிவபெருமானுக்குச் சூரியன், சந்திரன், ஆன்மா ஐம்பெரும் பூதங்கள் ஆகியவை உடம்பு என்பதே அதன் பொருள்.

இந்த உயிர்களையெல்லாம் உடலாகக் கொண்டிருக்கின்ற நான் உயிர்களுக்குள் உயிராகப் புகுந்து இவற்றிற்குப் பெயர்களையும் உருவங்களையும் உண்டுபண்ணுகிறேன் என்பது சாந்தோக்கிய உபநிடதம் (6:3).

ஆன்மாக்களை உடம்பாகவும் இறைவனை உயிராகவும் கூறுகின்ற முறையை வேதாந்த தேசிகர் தம்முடைய ஸ்ரீமத் ரகசியஸ்திரையசாரத்தில் பிராதன-ப்ரதிதந்த்ராதிகாரத்தில் விளக்கியுள்ளார்.

இக்கருத்தினையே நம்மாழ்வார் 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்று பேசினார். இத்தத்துவம் திருக்கச்சிநம்பி மூலமாக இராமனுசரின் இதயத்தில் பாய்ந்து கற்பக மரமாக வளர்ந்தது. அதனைத் தான் இன்று விசிட்டாத்துவைதம் என்கிறோம். இதனையே கவிச்சக்கரவர்த்தி கம்பன் தன் நூலில் விரித்துரைக்கிறான் என்பதை இந்நூலாசிரியர் நன்கு எடுத்துக்காட்டுகிறார்.

சடகோபர் அந்தாதிக்குச் சிறப்புப்பாயிரம் பாடிய ஒரு சான்றோர் தேவுக்குத்தக்க கவிஞன் சடகோபன் என்றும், அச்சடகோபனுக்குத் தக்க கவிஞன் கம்பன் என்றும் குறிப்பிடுகிறார். அதுபோல கம்பனுடைய கடவுட் கொள்கையை நடுவுநிலைமையோடு ஆராய்ந்து சொல்ல வல்லவர் முனைவர் ப. சுப்பிரமணியன் என்பதை நூல் நன்கு விளக்குகிறது.

எளியேன் இதுவரை முனைவர் பட்டம் பெற்றவர்களையும் அறிவேன். அவர்கள் வரைந்த நூல்களையும் அறிவேன். அந்நூல்கள் ஒவ்வொரு வகையில் சிறப்புப் பெற்றவையே. அதுபோன்றே திருவாளர். ப.சுப்பிரமணியன் அவர்கள் இந்நூலை நமக்கு வழங்கி உண்மையான டாக்டர் என்பதை நிரூபித்துள்ளார்.

பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர்
உற்றோரெல்லாம் உறவினரல்லர்

என்பது போல முனைவரெல்லாம் முனைவரல்லர். இவரே முனைவர் என்பதை இந்நூல் நன்கு தெளிவுபடுத்துகிறது.

'காவிரியென்னத் தப்பாக்
கருணையர்; மங்கை மன்னன்
பாவிரி குலத்தர்; அன்புப்
பண்பினர்; உயர்ந்த நோக்கர்'

என்று இவரைப் பற்றி அடியேன் எப்பொழுதோ பாடியது தற்போது நினைவுக்கு வருகிறது. இவ்வாசிரியர் மேன்மேலும் பலவித நூல்களை யாத்துத் தமிழன்னையின் சிறப்பை வளர்க்க வேண்டுமென விழைகின்றேன்; வாழ்த்துகிறேன்; வணக்கம்.

அன்புடன்,
**எஸ்.கே.இராமராசன்.**

கம்பன் நிலையம்,
12, சுப்பிரமணியபுரம்,
திருவரங்கம்.

**டாக்டர் பிரேமா நந்தகுமார்**
**ஆங்கில - தமிழ் இலக்கியத் திறனாய்வாளர்**

# அணிந்துரை

கம்பரது இராமாவதாரம் ஒரு பாலாழி. இதில் கடவுட்கோட்பாடு உடல்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துள்ளது. நிதானமாகக் கடைந்து கடைந்து கடவுட்கோட்பாடு என்னும் வெண்ணெயை எடுத்துத் தரவேண்டும். முனைவர் ப. சுப்பிரமணியம் பொறுமையாக இவ்வருஞ்செயலை நிறைவேற்றியிருக்கிறார். கம்பரின் கடவுட்கோட்பாடு படிப்பதற்கு எளிதாகவும், கூர்ந்து நோக்குமிடத்து ஆழமாகவும், தமிழ் மொழியை ஆள்வதில் மென்மையாகவும், தாம் ஏற்ற கருத்தினைத் திருத்தமாக முன் வைப்பதில் திண்மையாகவும் மலர்ந்திருக்கிறது.

கம்பரது காலத்தை ஆழ்வார்களுக்கும், சீவக சிந்தாமணி, சூளாமணி காப்பியங்களுக்கும் பிந்தையதாக வரையறை செய்து நூல் தொடங்குகிறது. இராமாவதாரத்தின் மூலநூலான வால்மீகி, காப்பியத்தில் இராமனை ஒரு இலட்சிய மானுடனாகவே காண்கிறோம். தெய்வமாக வளர்ந்த அரசகுமாரன் (The Prince Who Became God) என்று சொல்கிறோம். கம்பருக்குப் பின் வந்த துளசிதாசர் அவதி மொழியில் எழுதிய இராமசரித மானஸத்தில் இராமன் முழுக்க முழுக்கக் கடவுளே.

> ஸுக ஸந்தோஹ மோஹபர் க்யான கிரா கோதீத
> தம்பதி பரம ப்ரேம் பச் கர் ஸிஸு சரித புனீத

(மாயைக்கும், அறிவுக்கும், சொல்லுக்கும், இந்திரியங்களுக்கும் அப்பாற்பட்ட இன்பமே வடிவான கடவுள் அந்த (தசரதன் - கௌசல்யை) தம்பதியருக்காக ஒரு பச்சிளங்குழந்தையாக விளையாடி அன்பைப் பொழிந்தான்.)

எங்கே இராமகாதையில் லயித்து, இராமன் பரம்பொருள் என்பதை மறந்து விடுவோமோ என்று அவருக்குத் தவிப்பு. அதனால் இராமரின் கவலை, வருத்தம், சினம் எனும் உணர்ச்சிகளைக் காட்டும்போது வெளியுலகத்திற்காகக் காட்டப்படுகிறது என்பார்.

> **பூரனகாம ராம ஸுக ராஸி**
> **மனுஜ சரித கர் அஜ அவிநாஸீ**

(ஸ்ரீராமர் பேரின்பவடிவானவர். ஆசைகள் நிறைவேறப்பெற்றவர். பிறப்பற்றவர். அமரர். ஆயினும் சாதாரண மனிதனைப்போல நடந்து கொண்டார்.)

வால்மீகியின் காவியத்திலிருந்து இப்படியொரு முழுமையான திருப்பத்தைத் துளசிதாசர் ஏற்படுத்தியதற்குக் கம்பனே காரணம் என்பர். குமரகுருபரர் சகலகலா வல்லி மாலை பாடி இந்தி மொழியறிவினைப் பெற்றுக் கம்பனது காவியத்தைப்பற்றி காசியில் கம்பராமாயணச் சொற்பொழிவுகள் செய்ததாக அறிகிறோம். துளசிதாசர் இச்சொற்பொழிவுகளால் தாக்கமுற்றிருக்கக்கூடும். ஏனெனில், கம்பன் மிக லாகவமாக இராமனை மானுடனாகவும் தெய்வமாகவும் காட்டும் இரட்டைக்காட்சியை (two-fold vision) ஏற்படுத்தியிருக்கிறார். முனைவர் சுப்பிரமணியம் அவர்கள் இராமனில் தெய்வவடிவே அனைவருக்கும் தீர்க்கமாகத் தெரிகிறது என்பதைத் தமது ஆய்வின் அஸ்திரமாக அமைத்திருக்கிறார்.

இராமாவதாரமெங்கும் கரந்துள்ள கடவுட் கோட்பாட்டினைப் பிரித்துப் பார்க்கும்போது, வைணவத்தின் இன்றியமையாத அவதாரம் என்னும் கொள்கையை ஆய்வாளர் தெளிவாக்குகிறார். கம்பன் திருமாலின் பல அவதாரங்களைச் செழுந்தமிழ்ப் பாக்களால் செதுக்கி அமைப்பதை எடுத்துக்காட்டுகிறார். அவதாரங்கள் ஏன் என்பதற்கு

> தீக்கவும் தீயோர் தம்மைச் செய்வினை நலத்தினோரைக்
> காக்கவுமன்றோ கோடி கடவுளின் உருவமம்மா

என்ற பாகவதச் செய்யுளை முன் வைத்துப் பல செய்திகளை விரிக்கிறார். மச்சம், கூர்மம், வராகம், வாமனன், பரசுராமன், பலராமன் மற்றும் கண்ணன் அவதாரங்களைக் கம்பர் குறிப்பிடுகிறார். கல்கியைப் பாடவில்லை. இராமாவதாரமே காவியம். இக்காவியத்தின் ஒளிவீசும் மகுடமோ நரசிம்மாவதாரத்தைச் சிறப்பிக்கும் இரணியவதைப் படலம். வால்மீகி பாடாத இப்படலம் கம்பரின் நூலில் இடம் பெற்றது ஏன்? வைணவச் செம்மலான கம்பர் திருவெட்டெழுத்தின் பெருமையை உணர்த்த இப்படலத்தை ஆக்கினார் போலும். பிரகலாதன் தந்தையிடம் கூறுகிறானே:

> காமம் யாவையும் தருவதுமப்பதங்கடந்தால்
> சேமவிடுறச் செய்வதும் செந்தழல் முகத்த
> ஓம வேள்வியினுறுபத முய்ப்பது மொருவன்
> நாமமன்னது கேள் நமோ நாராயணாய

இப்படலத்தைச் சின்ன ராமாயணம் என்பார்களாம். மேலும், கம்பர் நரசிம்மத்தை உவமைகளில் கொண்டுவருவதைப் பட்டியலிடுவது ரசமான ஆய்வு.

கம்பர் இராமனைத் தெய்வமாகவே காட்ட முனைந்தாலும், அவரது சமய நோக்கையும் மீறி கவிதா ரசனை இராமனை மனிதனாகவே காட்டுகிறது. அதனால்தான் அவனது உணர்ச்சி வெளிப்பாடுகள் நம் இதயத்தை அசைக்கின்றன. இராமனைக் குறித்துப்பல பாத்திரங்கள் துதித்தாலும், கம்பரது தமிழ் அவனை ஒரு இளம்வீரனாகவே நம் மனத்தில் பதிக்கின்றது :

தயரதன் புதல்வனென்பார்
தாமரைக்கண்ணனென்பார்
புயலிவன் மேனியென்பார் பூவையும்
பொருவுமென்பார்
மயலுடைத் துலகமென்பார்
மானுடனல்லனென்பார்
கயல் பொரு கடலுள்வைகும் கடவுளே
காணுமென்பார்

என்றெல்லாம் இருந்தாலும், நம் மானுடக்கண்கள் அவனை பொம்மெனப்புகுந்து மொய்த்தன என்று கம்பர் கூறியதுதானே மனதில் பதிந்துள்ளது. இப்பதிவை மீறி, அந்தச்செய்யுள், இந்த வரி எனாதபடி, காவியமெங்குமே இராமனைத் திருமாலாகக் கவி காட்டுகிறார் என்பது முனைவர் சுப்பிரமணியத்தைப் படிக்கும்போதுதான் தெளிவாகத் தெரிகிறது. வாலி உண்மையை உணர்ந்தபின்,

மூவர்நீ முதல்வன்நீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ உறவுநீ

எனக்கூறுவதுபோல் இராமன் திருமாலே என்று நமது நெஞ்சில் ஞானமின்னல் பளீரிட, நாமும்

நன்மையும் செல்வமும் நாளும் மல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே இராம வென்றிரண்டெழுத்தினால்

என்று காப்புச்செய்யுளைக் கூறிக் கைகூப்புகிறோம்.

கம்பரின் விசிட்டாதுவைதம் பற்றிய சிறப்பான இயல் இதில் இணைந்திருக்கிறது. தவிர, நூல் முழுவதுமே ஆழ்வார்கள், வைணவ ஆச்சாரியர்களின் தெய்வத்தமிழ் இடம் பெற்றிருக்கிறது.

நிறைவாக, நூலின் தலைப்பில் தோன்றும் இயல் சிறப்பாக அமைந்திருக்கிறது. கடவுளின் முழுத்தோற்றத்தையும் சக்தியையும் எந்த ஒரு சமயமும் முழுமையாகக் கண்டறிந்துவிட்டதாகக் கூறமுடியாது என்பதை 'தோள்கண்டார் தோளே கண்டார்' செய்யுள் மூலமும், பல உருவங்களால் போற்றப்படினும் பரம்பொருள் ஒன்றே என்பதை 'கல்லிடைப்பிறந்து போந்து' செய்யுள் மூலமும், இராமன் மூவர்க்கும் முதல்வன் என்பதை 'முப்பரம் பொருளிற்குண் முதலை' செய்யுள் மூலமும், மும்மூர்த்திகளும் இராமனாக ஒருருக்கொண்டார் என்பதை 'முளரியல் வைகுவான்' செய்யுள் மூலமும், கம்பர் திருமாலன்றி பிற தெய்வங்களை இழித்துப்பாடவில்லை என்றும், அவர் காட்டும் சமயப்பொதுமை அறிஞர்களைக் கவர்ந்துள்ளது என்றும் மிக வண்ணமாக முனைவர் சுப்பிரமணியம் எழுதியிருக்கிறார்.

சாதாரணமாக ஆய்வேடுகள் படிப்பதற்கு கரடுமுரடாக இருப்பதுண்டு. ஆனால்,ஆழ்ந்த, பரந்த படிப்புடன், ஆசிரியரது ஆர்வமும் பக்தியும் கம்பரின் கடவுட்கோட்பாட்டை ரசிகரஞ்சனமாக்கியுள்ளது. இந்நூலுக்கு முன்னுரை எழுத எனக்குத் தமிழறிவு போதாதுதான். அதனால் என்ன? தமிழைப் போற்றுகிறேன். கம்பரை வணங்குகிறேன். இனிய தமிழில் கம்பரைப்பற்றிச் சிறந்ததொரு நூலை வடித்துள்ள ஆசிரியருக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்.

பிரேமா நந்தகுமார்

முதல் திருமாளிகை,
91, தெற்குச்சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம் 620 006.
11.11.2001

**Lion Prof. T.V. Periaswamy**

T.P Veluswamy & Co
23 N.S.B. Road, Trichy - 620 002
✆ 700913

Residence
36, Sankaran Pillai street,
Trichy - 620 002
✆ 701201

ௐ

# கருத்துரை

மெய்ப்பொருள் தன்னை இருநிலைப்படுத்திக் கொள்கிறது. இருநிலைகளாவன: அனைத்தையும் கடந்த நிலை-விச்வ உத்தீர்ண பாவம்; அனைத்திலும் உள்ளார்ந்த நிலை - விச்சவ மயபாவம்.

மனிதன் தன் இயல்புகள் அனைத்தையும் கடந்து "அதுவே-நான்"- ஸோஹம்- என்று உணரும் போது மெய்ப்பொருளுடன் இரண்டறக் கலந்து விடுகிறான். இதுவே ஸமாவேசம் எனப்படும் முக்தி. மெய்ப்பொருளின் பஞ்சகிருத்தியங்களில் அனுக்கிரஹம் ஒன்றாகும். மனிதன் உய்ய வேண்டி இறை மானுட வடிவம் ஏற்கிறது. அவதார புருடர்கள் தோன்றி, வாழ்ந்து காட்டினர். இராமன் என்பதற்கு அனைவராலும் விரும்பப்படுபவன் என்பது பொருளாகும். இராமனைக் கதைத்தலைவனாக் கொண்ட இராம காதையைக் கம்பன் விரித்துப் பாடியுள்ளான். என் அருமைத் தம்பி முனைவர் ப. சுப்பிரமணியன், கம்பரின் கடவுட்கோட்பாட்டை, இராம காதை வழி நின்று ஆய்வு செய்துள்ளார் அனைவருக்கும் பயன்படும் வண்ணம் இந்நூல் சிறப்பாக எழுதப்பட்டுள்ளது.

இன்றைய இயற்பியலின் அடிப்படைக் கோட்பாடான காரண-காரிய சித்தாந்தத்தை [Theory of caucation] கம்பனின் இராமகாதை குறிப்பிட்டுள்ளது. இதனை இந்நூலாசிரியர் எளிய முறையில் விளக்கியுள்ளார்.

மேலை நாட்டுப் பரிணாமக் கோட்பாடுகளில் ஒன்று "Creatio ex nihilibus". இதனை மறுத்து "அவை அவை தொறும் உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்னும் திருவாய்மொழிப்பாடல வரிகளை மேற்கோள் காட்டி விளக்கமளித்துள்ளார்.

தத்துவத்திரைய வாக்கியத்தை மேற்கோள் காட்டி இந்தியப்பரிணாமக் கோட்பாட்டை விளக்குகின்றார். "நான்" [அஹம்], "இது" [இதம்] என்ற வேறுபாடுகளை அறிந்து அவற்றை நீக்கிவிட்டு, "நான் இது" என்ற நிலை வழியாக "நான்" என்ற நிலையை அடுத்து அடைவது முக்தி. இந்த மூன்று நிலைகளையும் துவைதம், விசிட்டாதுவைதம், அத்வைதம் என்று திரிகம் விளக்கும். இந்த மூன்று சித்தாந்தங்களையும், பஞ்சராத்திரம் கூறும் ஐந்து நிலைகளையும் ஆசிரியர் மிகச் சிறப்பாக விளக்குகிறார்.

மனிதன் தன்னுடைய பிறப்பின் குறிக்கோளை அறிந்து கொள்ளுதல் முதல் வெற்றி; பிறகு அந்தக் குறிக்கோளை அடைதல், சிறப்பு நிலை. நன்றாகக் கற்று, கற்றவற்றை மற்றையோருக்கு விளக்கும் வகையில் பேராசிரியராகப் பணியாற்றிச் சிறப்புற்றார். தாம் கற்றவை மற்றவர்க்கும் பயன்படவேண்டும் என்னும் குறிக்கோளுடன் நூலாக உருவாக்கித் தந்துள்ள தம்பி முனைவர் ப. சுப்பிரமணியன் அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து, எழுத்துப் பணியைத் தொடர்ந்து மேற்கொள்ள அருள்புரியுமாறு மெய்ப்பொருளை வேண்டுகிறேன்.

திருச்சி,
27.11.2001

அன்பன்,
**டி.வி. பெரியசாமி.**

# நன்றியுரை

**கம்பரின் கடவுட் கோட்பாடு** என்னும் இந்நூல் இசையரசி பதிப்பகம் வெளியிடும் இரண்டாவது நூல் ஆகும். திருவரங்கப் பெருநகருள் அறிதுயில் கொண்டுள்ள அரங்கனின் புகழ்பாடிய **திருவரங்க ராஜகோபுரம்** முதல் நூலாகும். 1987-இல் இராஜகோபுரச் சம்புரோட்சணத்தின் போது வெளியிடப்பெற்ற அந்நூலின் மூவாயிரம் படிகளும் மூன்று திங்களில் விற்றுத் தீர்ந்தன. அந்நூல்களைப் பெருமாளவில் வாங்கிப் பேராதரவு நல்கிய இந்து சமய அறநிலையத்துறை அலுவலர்களுக்கும், குறிப்பாக அறநிலையத்துறைச் செயல் அலுவலர் சங்கத் தலைவரும் எங்கள் சம்பந்தியுமான திருவாளர் **சி. இராசப்பா** அவர்களுக்கும் என் நெஞ்சம் நிறை நன்றியினை உரித்தாக்குகிறேன்.

கம்பராமாயணக் கடவுட்கோட்பாடு என்னும் தலைப்பில் முனைவர் **அ. இராமரத்தினம்** அவர்களின் வழிகாட்டுதலில் திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு ஆய்வேட்டினை அளித்து 1995-இல் முனைவர் பட்டம் பெற்றேன். அவ் ஆய்வேடு என் நூற்பேழையில் முடங்கிக் கிடந்தது. செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருவேங்கடவனே 'உன் ஆய்வேட்டினை நூலாக வெளியிடுக' என்று ஆணை பிறப்பித்தாற் போன்று திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து நிதியுதவி தருவதாக அறிவிப்பு வந்தது. அதன் பின்னரே நூல் வெளிக் கொணரும் முயற்சியில் இறங்கினேன். செம்பவளவாயான் திருவேங்கடத்தானின் அருட்டிறம் தான் என்னே!

என் ஆய்வேட்டினை நூலாக வெளியிட அனுமதியளித்த திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தினருக்கு என் நன்றி. நான் ஆய்வேடு எழுதுங்கால் என்னை நெறிப்படுத்தி ஆய்வேடு செம்மையாக அமைய உதவியதோடு, இந்நூலின் பின்அட்டையில் என் வாழ்க்கைக் குறிப்பினைத் தந்து அணி சேர்த்துள்ள ஆய்வுநெறியாளர் என் கெழுதகை நண்பர் **முனைவர் அ. இராமரத்தினம்** அவர்களுக்கு நன்றி கூற என்னால் இயலுமோ?

'வட நூற்கடலை நிலை கண்டுணர்ந்தவர்' என்று சேனாவரையரைச் சிவஞான முனிவர் பாராட்டுவர். அதுபோன்றே தமிழ்நூற்கடலை நிலை கண்டுணர்ந்த பெருமகனார் **கல்விக்கடல், கம்பராமன் புலவர் எஸ்.கே.இராமராசனார்** என்று கூறுவது சற்றும் மிகையன்று. கடந்த சில திங்களாக அவரோடு பழகுவதற்கும், அவரின் நுண்மாண் நுழைபுலத்தினையும், பரந்து பட்ட நூலறிவினையும் அறிவதற்கும் அடியேனுக்கு வாய்த்துள்ளது. இவ்வாய்ப்பினைப் பெரும் பேறாகக் கருதுகிறேன். நான் முப்பது ஆண்டுகள் கல்லூரிப் பேராசிரியராகப் பணிபுரிந்துள்ளேன். எனினும் அவர் முன்னேயமர்ந்து இலக்கியம் பற்றிப் பேசும் போது என்னை ஒரு மாணவனாகவே உணர்கிறேன்.

அவர்பால் யான் கொண்டுள்ள கேண்மை பற்றி எண்ணுங்கால்,

**தாமரைத் தண்டா தூதி மீமிசை**
**சாந்தின் தொடுத்த தீந்தேன் போல**
**புரையமன்ற புரையோர் கேண்மை**

என்னும் நற்றிணைப்பாடல் வரிகளே நினைவுக்கு வருகின்றன. அச்சான்றோரின் அணிந்துரை நூலிற்கு அழகு சேர்க்கிறது. அவர் கூறியுள்ள புகழ் மொழிகளுக்கு யான் தகுதியுடையேனல்லேன். அவர் என்னை மேலும் தகுதியுடையவனாக்கும் நோக்குடனே இவ்வாறு பாராட்டியுள்ளார் போலும். அவரின் அன்பு நெஞ்சத்திற்கு யான் யாது கைம்மாறு அளிக்க வல்லேன்? **கல்விக்கடல் கம்பராமன்** அவர்கள் நூறாண்டுகட்கு மேல் வாழ்ந்து தமிழை மேன்மேலும் வாழ வைக்க வேண்டுமெனப் பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கத்துறை அமுதினையும், தில்லைவாழ் ஆடல் வல்லானையும் மனம், மொழி, மெய்களால் இறைஞ்சுகிறேன்.

பன்மொழி அறிஞரும், நூல்கள் பலயாத்துள்ளவரும், தலை சிறந்த சமூகச் சிந்தனையாளரும், அறிஞர் போற்றும் சொற்பொழிவாளரும், தின, வார, மாதத் தமிழ் மற்றும் ஆங்கில இதழ்களில் கட்டுரைகள் பல எழுதி இலக்கியத் தொண்டாற்றி வருபவருமான **டாக்டர் பிரேமா நந்தகுமார்** அவர்களை நான் நன்கு அறிவேன். எனினும் அவர் என்னை அறியார். 'என் கடன் தமிழ்ப் பணியே' என வாழ்ந்து வரும் அன்பர் **திரு. க. தமிழழகனார்** அவர்கள் என்னை அம்மையாரின் இல்லம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்து வைத்தார். நூலுக்கு அணிந்துரை தர வேண்டினோம். நூல் முழுமையும் முற்ற வாசித்து, அரியதோர் அணிந்துரையினை வழங்கி என்னை வாழ்த்தியுள்ள அன்னையார் **டாக்டர் பிரேமா நந்தகுமார்** அவர்களை நன்றியறிதலுடன் வணங்கி மகிழ்கிறேன்.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள திருச்சிராப்பள்ளி மாநகராட்சி மேயர் **திருமதி சாருபாலா ஆர். தொண்டைமான்** அவர்களுக்கு என் நெஞ்சம் நிறை நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

தத்துவ ஆராய்ச்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தமிழ், வடமொழி மற்றும் ஆங்கில நூல்களைக் கற்றுச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வரும் அன்புச் சகோதரர், என் உறவினர் **பேராசிரியர் தி.வே. பெரியசாமி** அவர்கள் இந்நூல் பற்றிய கருத்துரையினை வழங்கியுள்ளார். அவருக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

கணினி அச்சில் நேர்ந்த பிழைகளைத் திருத்தி நூலைச் செம்மையாக்க உதவிய பேராசிரியர்களை என்னால் மறக்க வியலாது. அப்பணியில் எனக்கு உதவிய திருச்சி பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி முன்னாள் **பேராசிரியர் பேரா. த.சாமி. நடராசனாருக்கும்** என் தலைமாணக்கரும், என்பால் என்றும் மாறா அன்புடையவரும், முசிறி அறிஞர் அண்ணா அரசு கல்லூரிப் பேராசிரியருமான **முனைவர் சு.செயலாபதி** அவர்களுக்கும், எனக்குப்பின் பெரியார் நகரிலிருந்து என் வாரிசாகப் பெரியார் கல்லூரியில்

பணியாற்றி வரும் பேரா ப. **வெங்கடேசன்** அவர்கட்கும் நன்றி தெரிவிப்பது என் கடமையன்றோ?

என் கெழுதகை நண்பரும், இராமநாதபுரம் மன்னர் சேதுபதி அரசு கல்லூரிப் பேராசிரியருமான **பேரா. மை. அப்துல் சலாம்** அவர்கள் இல்லம் வந்திருந்த போது என் ஆய்வேடு முழுவதையும் வாசித்து நூலாக வெளியிடுமாறு வற்புறுத்தினார். அவ்வப்போது கடிதங்கள் மூலம் என் மனப்புண்ணிற்கு மருந்திட்டு வரும் அவ்அன்பு நெஞ்சத்தைப் போற்றக் கடமைப்பட்டுள்ளேன்.

என் ஆய்வேடு நூலாக வெளிவருவதில் ஆர்வம் காட்டிப் பல்லாற்றான் உதவிய பேராசிரிய நண்பர்கள் பலராவர். எனினும் **பேரா. ஆ. வேணுகோபாலன், பேரா. உ.ஆ. செகந்நாதன், முனைவர் பொ. அழகுகிருட்டினன், முனைவர் நாஞ்சில் ஆனந்தன், முனைவர் கா.வாசுதேவன், முனைவர் கு.ப. கணேசன், பேரா. ப. இராமச்சந்திரன், முனைவர் சா. குமுதம், முனைவர் கே. சூரியமூர்த்தி, முனைவர் ஆ.நாராயணசாமி, பேரா. சி.கி. இலக்குமணன், முனைவர் கு. திருமாறன், திருவாளர் என்.பி.கே.எஸ். தருமராசன்** ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர். அனைவருக்கும் என் நன்றி.

நூல் வெளிவருவதில் பெரிதும் ஆர்வம் காட்டிய என் மனைவி **திருமதி எஸ். வள்ளியம்மை**, என் மகன் **பொறிஞர். எஸ். செந்தில் குமரன்**, மருமகள் **திருமதி. எஸ். சித்திரைச் செல்வி**, மகள்கள் **திருமதி. எஸ்.செந்தாமரை, திருமதி. எஸ். மலர்விழி**, நூலின் மேல் அட்டையினை கணினியில் வடிவமைத்துத் தந்த மகள் **செல்வி. எஸ். இசைபாரதி** ஆகியோரைக் குறிப்பிடுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

என் கல்லூரிப் படிப்பிற்குப் பேருதவி புரிந்த என் தாத்தா அடஞ்சியூர் **அமரர் திருமிகு. ஆ. சிங்காரவேல் விருதுள்ளார்** அவர்களையும், மாமா **திருமிகு. சி. சுந்தரராஜு விருதுள்ளார்** அவர்களையும், திருச்சி புனித வளனார் உயர்நிலைப்பள்ளி முன்னாள் தமிழாசிரியர் என் மாமனார் முதுபெரும் புலவர் **வி.அ. பரிமேலழகர்** அவர்களையும், நான் கல்லூரிப் பணியில் சேரத் துணை நின்ற புலவர் **த. மாணிக்கம்** அவர்களையும் இந்நூல் வெளிவரும் இவ்வேளையில் நன்றியறிதலுடன் நினைவு கூர்கிறேன்.

நூலைச் சிறந்த முறையில் வடிவமைத்துத் தருவதில் பேரார்வம் காட்டிய அன்பு நண்பர் **முனைவர் கே. முஸ்தபா கமால்** அவர்களுக்கும், **தி பிரிண்டிங் ஹவுஸ்** பணியாளர்களுக்கும், என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் வெளியிடும் பணியில் என்னை ஈடுபடுத்தி இயக்கிய எல்லாம் வல்ல பரம்பொருளைப் பணிந்து மகிழ்கிறேன். இந்நூல் கம்ப நாடரின் நடுவு நிலை தவறா நன்னெஞ்சினைத் தமிழ் கூறு நல்லுலகத்திற்கு உணர்த்தும் என்று நம்புகிறேன். வாழ்க கம்பரின் புகழ்! வணக்கம்.

அன்பன்,
**ப. சுப்பிரமணியன்.**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத்திணை | - | அகத்திணை இயல் |
| அ.ப | - | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| ஆய்ச்சியர் | - | ஆய்ச்சியர் குரவை |
| இந்திரவிழவு | - | இந்திரவிழவூரெடுத்த காதை |
| ஈஸ்வரப் | - | ஈஸ்வரப் பிரகரணம் |
| உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| ஊர்காண் | - | ஊர்காண் காதை |
| கடலாடு | - | கடலாடு காதை |
| கிட்கிந்தா | - | கிட்கிந்தா காண்டம் |
| சூ | - | சூத்திரம் |
| த.சி.பா | - | தற்சிறப்புப் பாயிரம் |
| நச் | - | நச்சினார்க்கினியர் |
| நாடுகாண் | - | நாடுகாண் காதை |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பெரும்பாண் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மொ.பெ.ஆ | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| வரந்தரு | - | வரந்தருகாதை |
| வை.மு.கோ | - | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் |
| Ibid | - | Ibidam-in the same work |
| p | - | page |
| pp | - | pages |

சான்றெண் விளக்கத்தில் கம்பராமாயணப் பாடல் எண்கள் வை.மு.கோ பதிப்பின் அடிப்படையில் தரப்பட்டுள்ளன. காண்டத்திற்கு உரோமன் எண்ணும், படலம், பாடல் ஆகியவற்றிற்கு அரபு எண்ணும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, *IV:3:5* என்பது கிட்கிந்தா காண்டத்தில் மூன்றாம் படலத்தில் ஐந்தாம் பாடலைக் குறிப்பதாகும்.

பெரியாழ்வார் திருமொழி, பெரிய திருமொழி, திருவாய்மொழி ஆகியவற்றில் முதல் எண் பத்தினையும், அடுத்த எண் திருமொழியினையும், இறுதி எண் பாட்டையும் குறிக்கும். எடுத்துக்காட்டாக 4.3.2 என்பது நான்காம் பத்தில் மூன்றாந் திருமொழியில் இரண்டாம் பாடலைக் குறிக்கும்.

# உள்ளுறை

# முன்னுரை

கம்பராமாயணம் தமிழிலக்கியங்களுள் குறிப்பிடத்தக்க சிறப்பினையுடைய ஒரு நூலாகும். இந்நூலை இயற்றிய கம்பர் கவிச் சக்கரவர்த்தி எனப் போற்றப்படுகிறார். அவர் இயற்றிய இராமாயணம் வான்மீகியைத் தழுவிய வழிநூலாகும். இந்நூலில் இலக்கிய நயங்களும், தத்துவக் கருத்துக்களும் செறிந்து விளங்குகின்றன. காப்பியத் தலைவனாகிய இராமன் திருமாலின் அவதாரமாவான். ஆதலின் திருமால் மற்றும் பிற கடவுளர் பற்றிய செய்திகள் தொடக்கம் முதல் இறுதிவரை மிகுதியும் நூலில் இடம்பெற்றுள்ளன. ஆதலின் கம்பர் காட்டும் கடவுளருள் முதன்மை இடத்தைப் பெறத்தக்க முழுமுதற் கடவுளை - பரம்பொருளைக் கண்டறியக் 'கம்பரின் கடவுட் கோட்பாடு' என்னும் தலைப்பில் இந்நூலில் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## தலைப்பு விளக்கம்

கோட்பாடு என்னும் சொல் கொள்கை என்பதனினும் விரிந்த பொருளை உடையது. கருத்துப் படிமம், பொதுக்கருத்து, கொண்டிருக்கும் தன்மை ஆகியன அச்சொல்லின் பொருள்களாம். ஆதலின் கம்பரின் கடவுட் கோட்பாடு என்னும் தலைப்பு நூலில் கடவுள் பற்றிய கருத்துப் படிமத்தினையும், எல்லையில்லாப் பரம்பொருள் சுட்டப்படும் தன்மையினையும் தன்னுள்ளடக்கியதாகும்.

## ஆய்வின் நோக்கம்

திருமால் அறத்தை நிலைநிறத்தவும், மறத்தை வீழ்த்தவும் இராமனாக அவதரித்தான். இந்நூலில் திருமாலன்றிச் சிவன், பிரமன், இந்திரன், வருணன், முருகன் போன்ற கடவுளர் தொடர்பான செய்திகள் கூறப்பட்டுள்ளன. இக்கடவுளருள் பரம்பொருள் என்று குறிப்பிடத்தகும் மேலான இடம் யாருக்குத் தரப்பட்டுள்ளது என்பதை நூலின் வழிநின்று ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வின் எல்லை

பலதரப்பட்ட செய்திகள் கம்பராமாயணத்தில் கூறப்பட்டுள்ளன. ஆயினும் இறைத்தொடர்பான கருத்துக்கள் மட்டுமே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு மூலங்கள்

கம்பராமாயணத்திற்குப் பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. அவற்றிற்கிடையே பாடபேதங்கள் உள்ளன. அவற்றுள் வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியர் உரை எழுதிப் பதிப்பித்துள்ள ஆறு காண்டங்களும் ஆய்வின் முதன்மை மூலங்களாகும். அண்ணாமலைப் பல்கலைக்கழகக் கம்பராமாயணப் பதிப்புக்களும், கம்பராமாயணம் பற்றி எழுதப்பெற்ற திறனாய்வு நூல்களும் துணை மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வின் கருதுகோள்கள்

1. கம்பர் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு.
2. பல கடவுளருள் திருமாலுக்கு முதன்மை.
3. திருமாலின் பிற அவதாரங்கள் நூலில் இடம்பெறல்.
4. இராமாவதாரத்திற்கு முதன்மை அளித்தல்.
5. விசிட்டாத்துவைதக் கருத்துக்கள் நூலில் விளக்கமுறல்.
6. திருமால் பரம்பொருளாக விளங்குதல்.

## ஆய்வின் முன்னோடிகள்

கம்பராமாயணம் பற்றி எம்ஃபில், பிஎச்.டி., பட்ட ஆய்வுகள் பல நிகழ்த்தப்பெற்றுள்ளன. எனினும் நூல் உணர்த்தும் கடவுட் கோட்பாடு பற்றி விரிவான ஆய்வுகள் மேற்கொள்ளப்பெறவில்லை. 'கம்பராமாயண சாரம்' என்னும் நூலில் 'கம்பரது கடவுட் கொள்கை' என்னும் தலைப்பில் வெ.ப. சுப்பிரமணிய முதலியார் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். ம.பொ. சிவஞானம் 'கம்பரின் சமயக் கொள்கை' என்னும் தலைப்பில் ஒரு நூல் எழுதியுள்ளார். முரு.பழ. இரத்தினம் செட்டியார் 'கம்பன் உணர்த்தும் பரம்பொருள் நிலை' என்னும் நூலைப் படைத்துள்ளார். இந்நூல்களும் கம்பராமாயணக் கடவுட் கோட்பாட்டை முழுமையாக ஆராயவில்லை. ஆதலின் இத்தலைப்பில் நிகழ்த்தப்பெறும் இவ் ஆய்வு விரிவான, முழுமையான முயற்சி எனக் கொள்ளலாம்.

## ஆய்வு முறை

இவ் ஆய்வு பகுப்பாய்வு (Analytical) முறையில் அமைந்துள்ளது. ஆதலின் இவ் ஆய்வில் நூலில் கூறப்படும் கடவுளர், அவதாரங்கள் தொடர்பான செய்திகள் பகுக்கப்பட்டு விளக்கப்படுகின்றன.

## ஆய்வின் அமைப்பு

இவ் ஆய்வு, முன்னுரை முடிவுரை நீங்கலாக ஏழு இயல்களாகப் பகுக்கப்பெறுகிறது. அவையாவன :

| | | | |
|---|---|---|---|
| இயல் | 1 | - | கம்பராமாயணம் - நூலமைப்பும் சிறப்பும் |
| இயல் | 2 | - | கம்பரின் காலமும் வரலாற்றுப் பின்புலமும் |
| இயல் | 3 | - | கம்பராமாயணக் கடவுளர் |
| இயல் | 4 | - | கம்பராமாயணத்தில் இடம்பெறும் அவதாரங்கள் |
| இயல் | 5 | - | கம்பரும் இராமாவதாரமும் |
| இயல் | 6 | - | கம்பராமாயணத்தில் விசிட்டாத்துவைதம் |
| இயல் | 7 | - | கம்பரின் கடவுட் கோட்பாடு |

முதல் இயல் கம்பரைப் பற்றிய செய்திகளையும் நூலின் அமைப்பையும், கவியின் புலமைத் திறத்தையும் விரிவாக ஆராய்கிறது. கம்பரது காலம், அவர் வாழ்ந்த காலத்தில் நிலவிய அரசியல், சமூக, சமயப் பின்புலன்கள் ஆகியன இரண்டாம் இயலில் ஆராயப்படுகின்றன.

மூன்றாம் இயல் கம்பராமாயணத்தில் இடம்பெற்றுள்ள கடவுளர் பற்றி மிக விரிவாக ஆராய்கிறது. கடவுள் என்னும் சொல்லின் விளக்கம், திருமால் வழிபாட்டின் தொன்மை, திருமாலின் பல்வேறு இயல்புகள், திருமால் எழுந்தருளியிருக்கும் தலங்களின் சிறப்புக்கள் ஆகியவையும், சிவன், நான்முகன், இந்திரன், வருணன், முருகன், திருமகள், உமை, கொற்றவை ஆகியோர் நூலில் இடம்பெற்றுள்ளமையும் இவ்வியலில் விளக்கப் பெறுகின்றன.

இராமாவதாரம் பற்றிப் பாடியுள்ள கம்பர், நூலில் பிற அவதாரங்களைப் பாடியுள்ளதன் நோக்கம் நான்காம் இயலில் ஆராயப்படுகிறது.

ஐந்தாம் இயல் கம்பரும் இராமாவதாரமும் என்பதாகும். இவ் இயல், ஆழ்வார்கள் இவ் அவதாரத்தின் மீது கொண்டிருந்த பக்தி, கவியின் ஈடுபாடு ஆகியவற்றை விளக்குகிறது. மேலும் இராமன் திருமாலின் அவதாரமென்பதைக் கவிக் கூற்றுக்களாலும், பாத்திரக் கூற்றுக்களாலும் வெளிப்படுத்துவதை இவ் இயல் கண்டறிய முயல்கிறது. சிவன், பிரமன், தேவர்கள் ஆகிய கடவுளர்கள் இராமனது அவதாரச் சிறப்பை உணர்ந்து போற்றியமையும் விளக்கப்படுகிறது.

விசிட்டாதுவைதம் பற்றி விரிவாக ஆறாம் இயல் ஆராய்கிறது. இத்தத்துவம் கம்பராமாயணத்தில் ஆளப்பெற்றிருக்கும் திறத்தினை இவ் இயல் எடுத்துரைக்கிறது. தண்டகவன முனிவர்கள், சுக்கிரீவன், காகாசுரன், வீடணன் ஆகியோர் இராமனைச் சரணடைந்து உய்ந்தாராதலின் இந்நூல் சரணாகதிக் காப்பியம் என்னும் பெயரினைப் பெற்றுள்ள தன்மையும் இதில் விளக்கப்படுகிறது.

ஏழாம் இயலில் கடவுள் என்ற சொல்லின் விளக்கமும், கடவுளின் உண்மையும், பரம்பொருள் ஒன்று என்பதும், திருமாலின் முதன்மையும், பரத்துவமும் ஆராயப்படுகின்றன. மேலும் இவ் இயல் கம்பரின் பொதுமை நோக்கை விரிவாக விளக்குகிறது. திருமாலின் அவதாரமாகிய இராமனைக் கம்பர் பரம்பொருளெனக் குறிப்பிடுகிறார். திருமாலைப் பரம்பொருளாகக் கருதும் ஆழ்வார்களைப் போன்று கம்பரும் திருமாலின் பரத்துவத்தைத் தம் நூலில் வெளிப்படுத்தியுள்ளமை விளக்கப்படுகிறது.

# இயல் 1

## கம்பராமாயணம் - நூலமைப்பும் சிறப்பும்

### முன்னுரை

கம்பர் முத்தமிழ்த்துறையின் முறைபோகிய கவிஞருள் ஒருவர். அவரது படைப்பாகிய இராமாயணம் உலகப் பேரிலக்கியங்களின் வரிசையில் வைத்து எண்ணத்தக்க சிறப்பினை உடையது. தமிழுக்குக் கதி என்று சொல்லத்தக்க இருவருள் அவர் ஒருவர்; திருவள்ளுவர் மற்றொருவர். **'கல்வியிற் பெரியவர் கம்பர்', 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்', 'விருத்தமெனும் ஒண்பாவில் உயர் கம்பன்', 'கம்பனாரிடைப் புலமை உடைத்து'** ஆகிய முதுமொழிகள் இப்பெருங்கவிஞரின் புகழுக்குச் சான்றாக அமைவன. **'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை வெறும் புகழ்ச்சி இல்லை'** என்றும் **'கம்பன் பிறந்த தமிழ்நாடு'** என்றும் இக்காலக் கவிஞரான மகாகவி சி. சுப்பிரமணிய பாரதியார் கம்பரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். கம்பரின் காவியம் கற்பனை நயம் செறிந்து நவில்தொறும் இன்பம் பயப்பது. எனவே அவரியற்றிய நூலின் அமைப்பினையும் சிறப்பினையும் விளக்க இவ்வியலில் முயற்சிமேற் கொள்ளப்படுகிறது. அவரது கடவுட் கொள்கையை மதிப்பிட இது துணைபுரியும்.

### 'கம்பர்' – பெயர்க் காரணம்

கம்பர் தமிழில் இராமாயணத்தை இயற்றி இறவாப் புகழ் பெற்றவர். அவர் கம்பர் எனப் பெயர் பெற்றமைக்கான காரணத்தைப் பலரும் பலவாறாகக் கூறுவர். அவற்றைத் தி. செல்வகேசவராய முதலியார் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

> **"கம்பர் என்பது ஏகாம்பரமுடையாரது பெயரின் மரூஉ என்பர் சிலர். காளிவரம் பெற்றுக் கவிபாடும் முன்னே அறிவிலாச் சிறியராய்க் கம்பம் போல் இருந்தவராதலின் ஏனைச் சிறார்கள் இவரைக் 'கம்பன் கம்பன்' என்று அழைத்துவந்த காரணத்தால்**

**'கம்பர்' எனப்படுவாராயினர் என்பர் வேறுசிலர். இவருக்கு இளமையில் கல்வி பயில்வித்த கணக்காயரது கம்பங் கொல்லையைக் காத்துவந்த காரணத்தால் 'கம்பர்' எனப்பட்டார் என்பாருமுளர். காளிங்கராயன் குதிரையைச் சாவவும் வாழவும் பாடியதைக் கேட்டு அரசன் இவரை வருவித்தவளவில், இவரும் கம்பங்கொல்லையைக் காத்திருந்த கம்பத்துடனே சென்றாராக இவரைக் கண்ட அரசன் இந்தக் கம்பனோ அது செய்தவன்? எனக் கேட்டதனால் எழுதலான பெயர் என்றும் உரைப்பர்..[1]**

மேலே காட்டப்பட்ட பெயர்க் காரணங்கள் செவிவழிச் செய்திகளாகும். மேலும் பிற்காலத்தெழுந்த நூல்களில்தாம் அவை காணப்படுவனவாக உள்ளன. எனவே அவை ஏற்குமாறில்லை.

கம்பநாடு என்னும் நாட்டில் பிறந்தமையின் அவர் கம்பர், கம்பநாடர் எனப் பெயர் பெற்றார் என்று கொள்வாருண்டு. அவரைப் புகழ்ந்து பாடப்பட்ட தனியன்கள் என்னும் பெயரில் அமைந்த தனிப் பாட்டுக்களில் **கம்ப நாட்ட ாழ்வான் கவி**[2], **கம்பநாடுடைய வள்ளல்**[3] என்ற தொடர்கள் இடம் பெற்றுள்ளன. அவர் ஆழ்வார்களோடு சரிசமமாக வைத்து எண்ணத்தக்க அளவில் திருமால் பக்தியிலும் இராம பக்தியிலும் ஈடுபட்டிருந்தார் எனக் கொள்ளலாம். ஆனால் கம்பநாடு என்ற ஒரு நாடு இருந்தமைக்கான சான்று வரலாற்றில் யாண்டும் காணப்படவில்லை. இதனால் கம்ப நாட்டில் பிறந்தமையின் கம்பர் எனப் பெயர் பெற்றார் என்பதும் பொருந்துமாறில்லை.

இரணிய வதைப் படலம் மூலநூலான வான்மீகத்தில் இல்லை. கம்பர் அதனைப் புதிதாகப் புனைந்தார். இதனால் நரசிம்ம அவதாரத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடும் பக்தியும் புலனாகும். திருமாலே நரசிம்மமாக அவதாரமெடுத்தார். கம்பத்திலிருந்து வெளிப்பட்ட நரசிம்மத்தை அவர் வழிப்பட்டாராதலின் கம்பர் எனப் பெயர் பெற்றார் எனக் கூறுவாருமுண்டு.[4] இக்கூற்றுக்கு வலுவான வேறு ஆதாரங்களின்மையின் ஏற்க இயலவில்லை.

கம்பரது குலம் உவச்சர் குலமென்றும், உவச்சர் ஆவார் பாரசவர் என்ற சாதியினர் என்றும், இவர்கள் கோயில் பூசகராகவும், ஆடல் பாடல் முதலிய கலைகளில் வல்லவராகவும் நாடகம் கற்பிக்கும் ஆசிரியராகவும் விளங்கியதோடு அரசரால் பெரிதும் மதிக்கப்பட்டார்களென்றும் அறியமுடிகிறது.[5] இவ் உவச்சர் குலத்தினரை **'ஓச்சர்'** என்றும் **'கம்பர்'** என்றும் தென்பாண்டி நாட்டினர் இன்றும் அழைக்கின்றனர். மேலும்

இவர்கள் தற்போது நாயனம் வாசித்தல் போன்ற கலைகளில் ஈடுபட்டு வருகின்றனர்.[6] இக்கம்பர் மரபில் தோன்றியதால் ஆதித்தன் என்ற இயற்பெயரினையுடைய ஆதித்தன் என்பார் மகன்[7] கம்பர் என அழைக்கப்பட்டார் எனக் கொள்ளலாம்.

**ஊரும் நாடும்**

*சீரணி சோழ நாட்டுத் திருவழுந்தூரில் வாழ்வோன்*[8] எனத் தனியனிலும்

*மன்றே புகழுந் திருவழுந்தூர் வள்ளல்*[9]

எனச் சடகோபரந்தாதியிலும் குறிப்பிடப்பட்டுள்ளதால் கம்பரது ஊர் திருவழுந்தூர் என்றும், அவர் வாழ்ந்த நாடு சோழ நாடு என்றும் அறியலாம். இவரது ஊர் தற்போது தேரழுந்தூர் என வழங்குகிறது. இது மயிலாடுதுறைக்கு அருகில் அமைந்துள்ளது. இவ்வூரில் தற்போது 'கம்பர் மேடு' என்ற ஓர் இடமும் உள்ளது. இத்தகவல் கம்பர் பிறந்த ஊர் இதுவே என்பதை மேலும் உறுதிப்படுத்துகிறது.

நூற்று எட்டு வைணவத் தலங்களுள் திருவழுந்தூர் ஒன்றாகும். இது திருமங்கை ஆழ்வாரால் பாடப்பெற்ற சிறப்பினை உடையது.[10] மேலும் இது ஒரு சிவத்தலமாகவும் விளங்குகிறது. திருஞானசம்பந்தரின் பாடல்களைப் பெற்ற சிறப்பினை உடையது.[11] வைணவமும் சைவமும் தழைத்தோங்கிய இத்திருத்தலத்தில் பிறந்த கம்பர் ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள் பாடல்களில் மிகுந்த ஆர்வம் கொண்டு விளங்கினார். குலசேகர ஆழ்வார் இராமாவதாரத்தை மூன்று பதிகங்களில் பாடியுள்ளார். இப்பாசுரங்களே கம்பர் இப்பெரு நூலை இயற்றத் தூண்டுகோலாக அமைந்தன எனலாம்.

> **"சேக்கிழார் பெருமானுக்குப் பெரியபுராணம் பாடச் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் 'தில்லைவாழ் அந்தணர்' என்னும் பதிகம் கிடைத்தது. அதுபோல இராமாவதாரம் பாடத் திருவுள்ளம் பற்றிய கவிச்சக்கரவர்த்திக்கு 'அங்கணெடுமதில்' என்னும் பதிகம் கிடைத்தது. இப்பதிகத்தை வழங்கியவர் குலசேகராழ்வார். குலசேகரரால் கவிச்சக்கரவர்த்தி இராமாயண நுட்பங்களைத் தெரிந்துகொள்கிறான்"**[12]

என்னும் கூற்று இதனை அரண் செய்வதாக உள்ளது. தற்சிறப்புப் பாயிரத்தில் கம்பர் **'ஆசைபற்றி அறையலுற்றேன்'**[13] என்பதாலும் இராம பக்தியே இப்பெருங்காப்பியம் உருவாகக் காரணமாக அமைந்தது என்பது உறுதியாகிறது.

## ஆதரித்த வள்ளல்

கம்பரை ஆதரித்தவர் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளல் ஆவார். கம்பர் அவ்வள்ளலைத் தம் நூலில் பத்து இடங்களில் பாராட்டிப் பாடியுள்ளார். இவர் அவ்வள்ளலை அகலிகைப் படலத்தில் '**வெண்ணெய் வாழ்கண்ணன்**' எனவும், நாகபாசப் படலத்தில் **மழையென்று ஆசங்கை கொண்டகொடைமீளி அண்ணல் சரராமன் எனவும் கூறியிருப்பதால் அவருக்குக் கண்ணன், சரராமன் என்ற வேறு பெயர்களும் வழங்கியுள்ளன என்று தெரிகிறது.**[14] கம்பர் சடையப்ப வள்ளல் ஆதரவில் வெண்ணெய்நல்லூரில் தங்கிப் பிற மொழிகளிலுள்ள இராமாயணத்தையும், வடநூல், தென்னூல்களையும் ஆராய்ந்து தமிழில் இராமாயணத்தைப் பாடினார். இப்பெருஞ் செயல் சடையப்ப வள்ளலின் ஆதரவால் இனிதே முடிந்தமையின்,

> '............................ இராமாவதாரப் பேர்த்
> தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
> **சடையன் வெண்ணெய் நல்லூர் வயின் தந்ததே'**[15]

எனப் பாயிரத்தில் பெருமிதத்தோடு அவர் கூறியுள்ளார்.

சடையப்ப வள்ளல் சொன்ன சொல் தவறாதவர் எனக் கம்பர் குறிப்பிடுகின்றார். கோசிகன் இராமனுக்குப் படைக்கலங்கள் வழங்கினான். இதனைக் கம்பர்,

> **மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தனச் சடையன் வெண்ணெய்**
> **அண்ணல் தன் சொல்லேயன்ன படைக்கலம் அருளினானே**[16]

என்பர். இதனைச் '**சடையவேள் என்னும் பாற்கடல் ஊட்ட உரம்பெற்று வளர்ந்தோங்கிய கம்பரென்னும் காளமேகம் பொழிந்த கவிமழையால் தமிழ் தழுவிய இராமாவதாரம் என்னும் அமுதப் பேராறு தென்னாடெங்கும் பரவி மக்கட்குப் பெரும் யோகம் விளைப்பதாயிற்று**'[17] எனப் பாராட்டுவர்.

## கம்பரிட்ட பெயர்

இராமாயணம் என்னும் வடசொற்றொடர்க்கு இராமபிரானுடைய வடிவழகினையும், குணநலன்களையும், சிறந்த செயல்களையும் அறிவிப்பது என்பது திரண்ட பொருளாகும் ..... இவ் இராமாயண நூலுக்குப் '**பௌலஸ்தியவதம்**' என்ற மற்றொரு பெயரும் உண்டு என்பர்.[18]

வான்மீகி தம் நூலுக்கு இராமாயணம் எனப் பெயர் இட்டிருந்தார். ஆயின் கம்பர் தாம் இயற்றிய இராம காதையை இராமாவதாரம் என அழைத்தார். இதைத் தற்சிறப்புப் பாயிரத்தில்,

**நடையினின்றுயர் நாயகன் தோற்றத்தின்**
**இடைநிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்**
**தொடை நிரம்பிய தோம்று மாக்கதை**[19]

என்று கூறுவதால் அறியலாம்.

கம்பர் இராமனை மானுடனாகக் கருதாமல் பரம் பொருளே மனிதனாகக் கீழிறங்கி வந்துள்ளதாகக் குறிப்பிடுகிறார். இராமன் இலக்குவன் முதலானோர் பிறப்பினைக் கூறும் படலம், '**திருவவதாரப் படலம்**' எனப் பெயர் பெறும்.

வசிட்டன் இராமனைப் பற்றித் தசரதனிடம் கூறுகையில்,

**'அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான்'**[20]

என்கிறான். வீடணன் இராவணனுக்கு ஆலோசனைகள் வழங்கும்போது

**தன்னின் முன்னிய பொருளிலா ஒருதனித் தலைவன்**
**அன்ன மானுடனாகி வந்து அவதரித் தமைந்தான்**[21]

என்கிறான். இவற்றால் கம்பர் இராமனை அவதாரமாகச் சித்திரிப்பதையே தம் நோக்கமாகக் கொண்டிருந்தார் எனத் தெளியலாம்.

கம்பர் தம் நூலுக்கு இட்ட '**இராமாவதாரம்**' என்ற பெயர் காஷ்மீர தேசத்தில் வழங்கும் '**ராம சரிதம்**' ஒன்றிற்கு வழங்கியிருப்பதும் அறியத்தக்கது[22] என்பர். அவர் தம் நூலுக்கு இராமாவதாரம் என்று பெயரிட்டிருந்தாலும் காலப்போக்கில் அப்பெயர் மறைந்து கம்பராமாயணம் என்ற பெயரே யாண்டும் வழங்கி வருகிறது.

### கம்பராமாயணத்தின் மூலம்

கம்பர் வான்மீகி இராமாயணத்தின் வழிநின்று தம் காப்பியத்தை உருவாக்கியுள்ளார். வான்மீகி இயற்றிய இராமாயணம் ஆதி காவியம் எனப் போற்றப்படுகிறது. கம்பர் தற்சிறப்புப் பாயிரத்தில்,

**'தேவபாடையினிக்கதை செய்தவர்**
**மூவரானவர் தம்முளுமுந்திய**

***நாவினார் உரையின்படி நான்தமிழ்ப்***
***பாவினாலிது உணர்த்திய பண்பரோ'***[23]

என்கிறார். வடமொழியில் இராமாயணம் இயற்றிய மூவர் வான்மீகி, வசிட்டர், போதாயனர் ஆகியோராவர்.[24] இம்மூவருள் முந்தியவரான வான்மீகி செய்தபடியே தாம் தமிழ்ப் பாவினால் இக்காப்பியத்தைச் செய்ததாகக் கம்பர் மேற்கண்ட பாடலில் குறிபிடுகிறார். ஆனால் அவர் வான்மீகி வழிநின்று காப்பியம் படைக்கவில்லையென்றும், மேற்குறித்த மூவருள்ளும் முந்திய தமிழ்ச் சான்றோர் நெறிநின்று காப்பியம் செய்ததாக அவர் இப்பாடல் மூலம் உணர்த்தினாரென்றும் கூறுவர்.[25]

**வான்மீகியிடம் ஈடுபாடு**

கம்பர், வான்மீகி பற்றிக் கூறுகிறார். நாட்டுப் படலத்தில்,

***வாங்கரும் பாதம் நான்கும் வகுத்தவான் மீகிஎன்பான்***
***தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்***[26]

என்பர். வான்மீகியின் காவியம் தேவர்களுக்குத் தெவிட்டாத தேனாக விளங்கியது என்பது இதன் பொருளாகும்.

நாகபாசப் படலத்தில் இந்திரசித்தின் சேனை எண்ணிக்கையைக் கூறத் தன்னாலியலாதென்றும், வான்மீகி அதனை நாற்பது வெள்ளமெனச் சொன்னானென்றும் வான்மீகியைப் பெருமைப்படுத்தும் வகையில்,

***அன்னானொடு போயின தானையறிந்து கூற***
***என்னா லரிதேனு மியம்பு வான்மீக னென்னும்***
***நன்னான் மறையாளன் அதுநாற்பது வெள்ளமெனச்***
***சொன்னான் பிறர்யார் அஃதுணர்ந்து தொகுக்க வல்லார்?***[27]

என்பர். இவற்றால் அவர் வான்மீகியிடத்துக் காட்டும் மதிப்பு புலனாகிறது.

**நூலின் வகைகள்**

தொல்காப்பியர் முதல்நூல், வழி நூல் என்னும் இருவகை நூல்களைச் சுட்டுகிறார். நன்னூலார் இவ்விரண்டோடும் சேர்த்துச் சார்பு நூல் என்னும் ஒன்றையும் குறிப்பிடுகிறார்.

***வினையின் நீங்கி விளங்கிய அறிவின்***
***முனைவன் கண்டது முதனூலாகும்***[28]

என்பது தொல்காப்பியம்.

வழிநூலை நான்கு அடிப்படையில் இயற்றலாமென்பதை,

> **'தொகுத்தல் விரித்தல் தொகை விரிமொழிபெயர்த்து**
> **அதர்ப்பட யாத்தலோ டனை மரபினவே'[29]**

எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். இதனால் மூல நூலாசிரியர் விரித்துச் சொன்னதைத் தொகுத்தும், தொகுத்துச் சொன்னதை விரித்தும், சிலவிடங்களில் தொகுத்தும் சிலவிடங்களில் விரித்தும் பிறமொழி நூலை மொழிபெயர்த்தும் செய்யப்படுவது வழிநூலாகும் என்பது தொல்காப்பியர் கருத்து என்பது விளங்குகிறது.

ஒரு மூல நூலைப் பின்பற்றிச் செய்யப்படும் வழிநூலை மேனாட்டார் தழுவல் என்றனர். நம் வழிநூல் மேனாட்டரின் தழுவலோடு ஒத்துள்ளது.

வழி நூலின் இலக்கணத்தைப் பவணந்தியார்,

> **'முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்**
> **பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி**
> **அழியா மரபினது வழிநூ லாகும்'[30]**

என வரையறுப்பார். ஏற்கத்தக்கனவற்றை ஏற்றும், ஏற்கத்தகாதனவற்றை விலக்கியும் புதுமைகளைப் புகுத்தியும் செய்யப்படுவதை வழிநூல் எனலாம்.

கம்பரின் இராமாயணத்திற்கு மூலம் வான்மீகி இராமாயணம். இவர் தம் நூலில் பல மாற்றங்களைச் செய்துள்ளார். இதனைத் தொகுத்தல், விரித்தல், மாற்றல், நீக்கல், படைத்தல் என ஐந்து பிரிவுகளில் அடக்கலாம்.

தொகுத்தலாவது மூல நூலாசிரியர் விரிவாகக் கூறியுள்ளதைத் தொகுத்துக் கூறுவதாகும்; விரித்தலாவது சுருக்கமாகக் கூறியதை விரித்துக் கூறுவதாகும்; மாற்றலாவது ஒருவர் கூற்றை மற்றொருவர் கூற்றாகவும், ஓரிடத்தில் கூறியுள்ளதை மற்றோரிடத்தில் கூறியுள்ளதாகவும் மாற்றுவதாகும்; முதல் நூலில் கூறியுள்ளதைப் பாடாது விடுதல் நீக்கல் ஆகும். படைத்தலாவது முதல் நூலில் காணப்பெறாத நிகழ்ச்சிகளையும் கூற்றுக்களையும் படைத்துக் கொள்வதாகும்.[31]

கம்பர் தாம் காப்பியம் படைத்த சூழல் கருதியும், தம் காப்பியத்தின் நோக்கம் கருதியும், தாம் படைத்துள்ள பாத்திரத்தின் இயல்பு கருதியும் மூல

நூலை இம்முறையில் அணுகுகிறார். மேற்கண்ட அடிப்படையில் நோக்கினால், கம்பரது காப்பியம் ஒரு சிறந்த வழி நூலாகத் திகழ்கிறது என்பது விளங்கும்.

கம்பரது காப்பியம் வழிநூல்; இது வான்மீகத்தைப் பின்பற்றி எழுந்தது. எனினும் இது ஒரு முதற் காப்பியம் என்று சொல்லத்தக்க பெருமையினை உடையது. இதனை அரண் செய்யும் வகையில் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை,

> **பொதுவகையில் வான்மீகியைப் பின்பற்றியபோதிலும், கட்டங்கள் தோறும் இவன் (கம்பன்) இராம சரித அமிசங்களை வேறுபடுத்திப் பேரழகுபட அமைத்திருக்கிறான். இவற்றையெல்லாம் ஊன்றி நோக்குமிடத்து, கம்பனது பெருநூலை ஓரளவு முதற்காவியம் என்றும் ஓரளவு வழிமுறைக் காவியம் என்றும் கொள்ளுதல் வேண்டும்**[32]

எனக் கூறுவது மனங்கொள்ளத் தக்கது.

நாட்டில் வழங்கியுள்ள இராமசரிதை முழுவதையும் துருவி ஆராய்ந்து கம்பர் தம் நூலை இயற்றியுள்ளார் என்பதை.

> **'எற்றாங்கு மேனி ரகுராம சரிதையாவும்**
> **கற்றார் கவியிற் பெரிதாந் தமிழ்க்கம்ப நாடன்**
> **உற்றாங் குரைத்தான்'**

என்ற இரகுவமிசம் இயற்றிய அரசகேசரியார் கூற்றாலும் அறியமுடிகிறது.[33]

கம்பர், வான்மீகி இராமயணத்திற்கு அழகூட்டி, மெருகேற்றிப் புதுமையாகத் தமிழில் படைத்தார். இதனை வலியுறுத்துவதாக,

> **மால் கடிந்த தவமுனி வால்மீகி என்பான்**
> **வனத் திடையேதான் கண்டுகொண் டுவந்த**
> **பால் படிந்து முள்ளடர்ந்து பருத்து நீண்டு**
> **பரிமளிக்கும் பலவின் கனி பாருக்கீந்தான்**
> **மேல்படிந்த பிசினகற்றி மெள்ளக் கீறி**
> **மெதுவாகச் சுளையெடுத்துத் தேனும்வார்த்து**
> **நூல்படிந்த மனத்தவர்க்கு விருந்து வைத்தான்**
> **கம்பர் என்ற தமிழ்த்தாயர் நோற்றமைந்தன்**[34]

என்னும் பாடல் உள்ளமை கருதத்தக்கது.

**கம்பர் பல நூல்களைக் கற்று ஆராய்ந்து அவற்றுள் காணப்படும் நல்லனவற்றையெல்லாம் சேர்த்துத் தம் நூலைச் செய்தார். இதனைக் கம்பர் பாடிய இராமசரிதை வால்மீகியின் கதை முதலியவற்றின் போக்கை அப்படியே தழுவியது என்று சொல்வதினும் வடநூல் தென்னூல்களிலும் ஏனைய நாட்டு மொழிகளிலும் உள்ள நூல்களையெல்லாம் கடைந்தெடுத்துக் கதாபாகங்களிலும், காப்பியக் கதிகளிலும் நல்லனவற்றைக் கொண்டது என்பதே பொருத்தமுடையது.**

**வடமொழி தென்மொழிக் காப்பிய நயங்களாகிய பொன்மையில் தம் சித்திரக் கோலைத் தோய்த்துத் தம் காப்பிய ஓவியத்தை வரைந்தவரே கம்பநாடர்[35] என்பர்.**

தமிழில் இராம சரித நூல்கள் பல இருந்தன. புறத்திரட்டிலுள்ள சில பாடல்களும், யாப்பருங்கல விருத்தி மற்றும் வீரசோழியத்துள்ளும் மேற்கோளாக எடுத்தாளப்படும் பாடல்களும் இராமசரிதம் கூறுவனாவாயுள்ளன. எனினும் முழுமையான இராமாயண நூலேதும் கம்பர் காலத்தில் இல்லாமையின் அவர் வான்மீகியைப் பின்பற்றித் தமிழில் தம் பெருங்காப்பியத்தைப் படைத்தளித்தார் என்பது புலனாகிறது.

## நூலின் அமைப்பு

தொல்காப்பியர் கூறும் வனப்புக்களுள் ஒன்று தோல் என்பதாகும். தோல் என்பதன் இலக்கணத்தை அவர்,

**'இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்**
**தோல்என மொழிப தொன்மொழிப் புலவர்'[36]**

எனக் கூறுவர். இச்சூத்திரத்தால் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் விழுமிய பொருள் பயப்பப் பழையதோர் கதை மேற்கூறின் அது தோலாம். **'தண்டியலங்காரம் போன்றவற்றின் காப்பிய இலக்கணம், நாற்பொருள் பயக்கும் நடையை நினைந்ததன் செல்வாக்கு இதில் புலப்படுவதாகக் கொள்ளலாம்'[37]** என்பர்.

## காப்பிய இலக்கணம்

காப்பியம், பெருங்காப்பியம், சிறு காப்பியம் என இருவகைப்படும். கம்பராமாயணம் பெருங்காப்பியம் எனக் கொள்ளத்தக்கது.

*பெருங்காப்பியத்தின் இலக்கணத்தைத் தண்டி ஆசிரியர் விரிவாக மொழிகின்றார்.*

> ***'பெருங்காப்பிய நிலை பேசுங்காலை***
> ***வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்று***
> ***ஏற்புடைத்தாகி முன்வரவியன்று***
> ***நாற்பொருள் பயக்கும் நடை நெறித்தாகித்***
> ***தன்னிகரில்லாத் தலைவனை யுடைத்தாய்***
> ***மலை கடல் நாடு வளநகர் பருவம்***
> ***இருசுடர்த் தோற்றமென்று இனையன புனைந்து***
> ***நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்***
> ***பூம்பொழில் நுகர்தல் புனல் விளையாடல்***
> ***தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்***
> ***புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்று***
> ***இன்னன புனைந்த நன்னடைத்தாகி***
> ***மந்திரந் தூது செலவிகல் வென்றி***
> ***சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்***
> ***பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி***
> ***நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்***
> ***கற்றோர் புனையும் பெற்றிய தென்ப'[38]***

*இத்தண்டியலங்காரச் சூத்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பெருங்காப்பிய இலக்கணம் கம்பராமாயணத்திற்குப் பொருந்துவதாக உள்ளது.*

**காப்பியம் - சொல்லின் பொருள்**

*காப்பியம் என்பது பொருள் தொடர்நிலை ஆகும். கவியால் பாடப்படுவன எல்லாம் காப்பியம் அன்றோ? பொருள் தொடர்நிலையைக் காப்பியம் என்றது என்னையெனின், சேற்றுள் தோன்றுவனவெல்லாம் பங்கயம் எனப் பெயர் பெறுமாயினும் அப்பெயர் தாமரை ஒன்றின் மேற்றே ஆயினவாறு போல் இப்பெயர் பொருள் தொடர்நிலைக்கே ஆயிற்று[39] என்பார் தண்டியின் உரையாசிரியர்.*

*காப்பியம் என்பது காவியம் என்ற வடசொல்லின் திரிபு என்பர். ஆயின் காப்பு என்பது **'காப்பு உடையது'** (இராவ் சாகேப் கு. கோதண்டபாணி பிள்ளை, நெடுநல்வாடை பா நலன், ப.102). முதற் குறள் உவமை (ப.10) ஆகிய நூல்களில் தரும் விளக்கம் சான்றாகின்றன. ஒரு மொழியைச் சிதையாது காப்பது காப்பியம். இலக்கணத்தின் இயல்பு மரபு*

வழாமல் காத்தல் .... காப்பு நூல் என அதற்குப் பெயரிட்டனர். காப்பு இயன்றது காப்பியம் என்றனர். தமிழர் நூல்கள் இலக்கியம், காப்பியம் என இருவேறு வகையின. இலக்கு இயன்றது - வாழ்க்கையின் இலக்கு அல்லது கலைகளின் இலக்கு இயன்றது - இவற்றின் இயல்பை உணர்த்துவது இலக்கியம். மொழியின் காப்பு இயன்றது காப்பியம் என்பது பொருந்தும்[10] என்பர்.

இந்நிலையில், மொழி இயல்பைக் காக்கும் இலக்கண நூலுக்குக் காப்பியம் என்பது பெயராகிப் பின்னர்க் கதைப் பொருளுடைய காவியத்திற்கு இப்பெயர் வந்தது எனலாம். இதனால் காப்பியம் என்பது தமிழ்ச் சொல்லே என்பது புலனாகிறது.

**காப்பியம் - உட்பிரிவுகள்**

காப்பியத்தின் பெரும் பிரிவுகளாகச் சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் என்னும் பெயர்களைத் தண்டியலங்காரம் குறிப்பிடுவது முன்னர்ச் சுட்டப்பட்டது. ஆயின் சிலப்பதிகாரத்தில் காண்டம் என்பது பெரும் பிரிவு; காதை என்பது உட்பிரிவு. மணிமேகலையில் காதை என்னும் பிரிவு உள்ளது. சீவகசிந்தாமணியில் இலம்பகம் என்னும் பிரிவு காணப்படுகிறது சூளாமணியின் பிரிவு சருக்கம். வில்லிபாரதத்தில் பெரும் பிரிவு பருவம்; உட்பிரிவு சருக்கம். பெருங்கதையில் காண்டம் என்னும் பெரும்பிரிவும் படலம் முதலாய பிரிவுப் பெயர் இன்றித் தலைப்பே உட்பிரிவாக உள்ளது. இவற்றால் தமிழ்க் காப்பியங்களில் ஒரு குறிப்பிட்ட வரையறையில் பிரிவுகள் அமைக்கப்படவில்லை எனலாம்.

**இராமாயணத்தில் காண்டம் - பெரும்பிரிவு**

வான்மீகி இராமாயணத்தில் பெரும் பிரிவு காண்டம். இந்நூலில் ஏழு காண்டங்கள் உள்ளன. கம்பர் பாடியுள்ளவை ஆறு காண்டங்களே. அவையாவன :

1. பாலகாண்டம்
2. அயோத்தியா காண்டம்
3. ஆரணிய காண்டம்
4. கிட்கிந்தா காண்டம்
5. சுந்தர காண்டம்
6. யுத்த காண்டம்

உத்தர காண்டம் ஒட்டக்கூத்தர் பாடியது.

**இராமாயணத்தில் படலம் - உட்பிரிவு**

*வான்மீகி இராமாயணத்தில் சிறு பிரிவு சருக்கம். அதிலுள்ள சருக்கங்களின் மொத்த எண்ணிக்கை 537. கம்பராமாயணத்திலுள்ள படலங்களின் எண்ணிக்கை 116 (பாலகாண்டம் - 22, அயோத்தியா காண்டம் - 12, ஆரணிய காண்டம் - 11, கிட்கிந்தா காண்டம் - 17, சுந்தர காண்டம் - 15, யுத்த காண்டம் - 39).*

**பாடல்கள்**

*கம்பர் பாடியுள்ள பாடல்களின் எண்ணிக்கை.*

| | |
|---|---|
| *பாலகாண்டம்* | *1385* |
| *அயோத்தியா காண்டம்* | *1282* |
| *ஆரணிய காண்டம்* | *1204* |
| *கிட்கிந்தா காண்டம்* | *1049* |
| *சுந்தர காண்டம்* | *1342* |
| *யுத்த காண்டம்* | *4322* |
| | ***10584*** |

*யுத்த காண்டத்தில் மிக அதிகமான பாடல்கள் உள்ளன. இது நூலிலுள்ள மொத்த பாடல்களில் ஐந்தில் இரண்டு பங்கிற்கு மேலாகும்.*

**காப்பு - தனியன்கள்**

*கம்பராமாயணக் காப்புப் பாடல்கள் மூன்று. கம்பர் தனியன்கள் 11. நூல் கூறும் செய்தி ஒரு பாடலிலும், நூற்பயன் எட்டுப் பாடல்களிலும் விளக்கப்பட்டுள்ளன. காப்பு என்பது கடவுளை வேண்டிப் பாடுவது. தனியன்கள் என்பவை நூலாசிரியர் மற்றும் நூலைப் பற்றிப் பிறரால் பாடப்பட்டுள்ள தனிப்பாட்டுக்கள். ஆக நூலுக்குப் புறம்பாக இடம்பெற்றுள்ள பாடல்களின் எண்ணிக்கை இருபதாகும்.*

**தற்சிறப்புப் பாயிரம்**

*தற்சிறப்புப் பாயிரம் கம்பர் இயற்றியுள்ளார். பாடல்களின் எண்ணிக்கை பன்னிரண்டு. இவற்றுள் கடவுள் வணக்கப் பாடல்கள் மூன்று. அவையடக்கப் பாடல்கள் ஆறு. நூல் வரலாறாக அமைந்தவை இரண்டு பாடல்கள். நூற் பயனாக ஒரு பாடல் அமைந்துள்ளது.*[41]

### பாடுபொருள்

பாடுபொருள் என்பது நூலின் மையப் பொருளாகும். கம்பராமாயணத்தின் பாடுபொருள் அரக்கரை அழித்தல் ஆகும். காப்பிய நிகழ்ச்சிகள் இதனை மையமாக வைத்தே பின்னப்படுகின்றன. காப்பியத்தின் பல்வேறு இடங்களில் இம் மையப் பொருளைக் கம்பர் கவிக் கூற்றாகவும், காப்பிய மாந்தரின் கூற்றாகவும் அமைத்துள்ளார்.

### கவிக் கூற்று - தாடகை வதம்

இராமன் தாடகையுடன் நிகழ்த்திய போர் அவனது கன்னிப் போராகும். இராமன் விட்ட அம்பு தாடகையின் மார்பினை ஊடுருவியது. அவள் வீழ்ந்தாள். தாடகையின் வீழ்ச்சி இராவணன் வீழ்ச்சிக்கு முன்னறிவிப்பாக இருந்ததாகக் கம்பர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> **'பொறியுடைக் கானமெங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த**
> **தடியுடை எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகள்தோறும்**
> **முடியுடை அரக்கர்க்கந் நாள் முந்தியுற் பாதமாகப்**
> **படியிடை அற்றுவீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்'[42]**

இப்பாடல் இராவணனது வெற்றிக்கொடி அறுந்து வீழ்ந்ததாகத் தெரிவிக்கிறது.

### கூனியின் சூழ்ச்சி

இராமனுக்கு முடிசூட்ட ஏற்பாடுகள் விரைவாக நடந்துகொண்டிருந்தன. அதனையறிந்த கூனி கைகேயியின் மனத்தைக் கலைக்க அவள் அரண்மனை நோக்கி விரைந்தாள். அவள் வருகையைக் கம்பர்,

> **'இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்**
> **துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினாள்'[43]**

என மொழிவர்.

கூனியின் போதனையால் கைகேயியின் தூய சிந்தை திரிந்தது. அவ்வாறு அவள் மனம் மாறியது அரக்கர் செய்த பாவத்தினாலும் நல்லவர் செய்த அறத்தினாலுமே எனக் கம்பர் காட்டுவார். இதை அவர்,

> **'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்**
> **துரக்க நன்மொழி துறந்தனள் தூ மொழிமடமான்'[4]**

என விளக்குவார்.

**சூர்ப்பணகை**

சூர்ப்பணகை தன் அண்ணனின் அழிவிற்கு மூலகாரணமாக அமைந்தாள். இதனைக் கம்பர் மூன்று நிலைகளில் அமைத்துக் காட்டுவர். இராவணன் அழிவிற்குக் காரணமாதலை,

> **'நீலமாமணி நிற நிருதர் வேந்தனை**
> **மூலநாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள்'[45]**

என்றும்,

> **'தன் கிளைக்கு இறுதி காட்டுவாள்'[46]**

என்றும் மொழிவர்.

அவளால் தேவர்கட்கும் முனிவர்கட்கும் காப்பு என்பதை,

> **'உம்பர் ஆனவர்க்கும் ஒண்தவர்க்கும் ஓதநீர்**
> **இம்பர் ஆனவர்க்கும் ஓர்உறுதி ஈட்டுவாள்'[47]**

எனக் குறிப்பிடுவர்.

சீதை பன்ன சாலையினின்று வெளியே வந்தாள். அவளைச் சூர்ப்பணகை கண்டாள். இதைக் கூறும்பொழுதும் கம்பர், அரக்கரின் அழிவை நினைவூட்டும் வகையில் மொழிவார்.

> **'மீன்சுடர் விண்ணும் மண்ணும் விரிந்தபேர் அரக்கர் என்னும்**
> **கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணிற் கண்டாள்'[48]**

என்பது அவரது வாக்காகும்.

**மாரீசன்**

இராவணன் ஏவலால் மாரீசன் மாயமானாக வந்தான். அரக்கர் செய்த மாயம் எனச் சிந்தையில் தெளிந்த தம்பி கூறியும் ஏற்காது மனைவியின் ஆவலை நிறைவு செய்ய இராமன் மாயமானைப் பின்தொடர்ந்தான். இதனைப் பின்வருமாறு கம்பர் குறிப்பிடுவர்:

> **'நோக்கிய மானை நோக்கி நுதியிடை மதியின் ஒன்றும்**
> **தூக்கிலன் நன்றிது என்றான் அதன்பொருள் சொல்லல் ஆகும்?**

> **சேக்கையின் அரவு நீங்கிப் பிறந்தது தேவர்செய்த**
> **பாக்கியம் உடைமை யன்றோ அன்னது பழுதுபோமோ'[49]**

இராமன் அறிவு தடுமாறியதும் தேவர் செய்த பாக்கியமே என்பது அவர் மதிப்பீடு.

### பாத்திரக் கூற்று-தேவர்கள்

இராமனை அயோத்தி அழைத்தேகப் பரதன் வனம் நண்ணி அவனை நாடு திரும்புமாறு வேண்டினான். அப்பொழுது அங்கிருந்த வசிட்டனும் பரதன் வேண்டுகோளை வலியுறுத்தினான். அந்நிலையில் வானிலுள்ள தேவர்கள்,

> **'இவ்வழி இராமனைஇவன் கொண்டு ஏகுமேல்**
> **செவ்வழித் தன்று நம் செயல்'[50]**

என எண்ணியதாகக் கம்பர் மொழிவர். பரதன் நாடாளட்டும், இராமன் பதினான்கு ஆண்டுகள் வனமாளட்டும் எனத் தேவர்கள் வானிலிருந்து கூறினர். தேவர்கள் குறுக்கீடு இராவண வதத்திற்கு ஏற்படவிருந்த இடையூற்றை நீக்கியது.

கம்பர் காப்பியத்தின் பாடுபொருளை ஆங்காங்கே நினைவூட்டத் தவறவில்லை. மேற்காட்டிய நிகழ்ச்சிகளை விளக்கும்போது கம்பர் அரக்கர்களின் அழிவினை மனத்தில் கொண்டே இந்நிகழ்ச்சிகளைக் கூறிச் செல்கிறார் என்பது தெளிவாகிறது.

### பாவிகம்

பாவிக அணி என்பது தண்டியலங்காரப் பொருளணி இயலின் இறுதியில் இடம்பெறும் ஓர் அணியாகும். அதனை,

> **'பாவிகம் என்பது காப்பியப் பண்பு'[51]**

எனத் தண்டி ஆசிரியர் விளக்குவர். அதற்கு உரையாசிரியர்,

> **'அஃது அத்தொடர் நிலைச் செய்யுள் முழுவதும் நோக்கிக்**
> **கொள்ளப்படுவதல்லது தனித்து ஒரு பாட்டால் நோக்கிக்**
> **கொள்ளப் புலப்படாதது'[52]**

என விளக்கமளிப்பர்.

காப்பியத்தில் ஊடுருவி நிற்கும் ஒருமைப்பாட்டுணர்ச்சியே பாவிகமாகும். கம்பராமாயணத்தின் பாடுபொருள் அரக்கரை அழித்தல் என்பது உணர்த்தப்பட்டது. இங்கு நூல் முழுவதும் இழையோடும் பொதுக் கருத்து **'அறம் வெல்லும்; பாவம் தோற்கும்'** என்பதாகும்.

அறத்தின் சார்பில் இறைவனின் அவதாரமாகத் தோன்றிய இராமனும் அவனைச் சார்ந்தோரும் விளங்க, பாவத்தின் பிரதிநிகளாக இராவணனும் ஏனை அரக்கர்களும் உள்ளனர். காப்பியத்தின் பாவிகத்தை நல்லோர் வாயிலாகச் சொல்ல வைப்பதன் மூலம் கம்பர் அதன் சிறப்பினை மீண்டும் மீண்டும் நினைவூட்டுகிறார்.

மறத்தை வீட்டி அறத்தை நிலைநாட்டுவதற்காகவே இறைவன் இராமனாகப் பிறந்தான். **"சத்தியமேவ ஜயதே ந அந்ருதம்"** என்னும் மாண்டூக்கிய உபநிடத வாக்கியத்தையே கம்பர் அறம் வெல்லும் பாவம் தோற்கும் எனத் தமிழாக்கம் செய்து காப்பியத்தில் பலவிடங்களில் இடம்பெறச் செய்கிறார்[53] என்பர்.

இராவணனிடம் சீதை,

**'மீள அருந்தவந் தன்னை வெல்லுமோ பாவம்'**[54]

என்றாள்.

இலங்கை மாதேவி அனுமனிடம்,

**'அறம் வெல்லும் பாவம் தோற்கும்'**[55]

என்றாள்.

அசோகவனத்தில் தவம் செய்த தவமாம் தையலாகிய சீதையைக் கற்பரசியாகக் கண்ட அனுமன்,

**'வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்'**[56]

என்றான்.

அங்கதன் சாம்பவானிடம்,

**'அத்தனை அறத்தை வெல்லும் பாவம் என்று அறிந்ததுண்டோ'**[57]

என்றான்.

அனுமன் மருந்து மலை கொணர்ந்து அனைவரையும் உயிர்ப்பிக்க அனைவரும்,

**'அறம் வெல்லும் பாவம் தோற்கும்'[58]**

என்று சொல்லிக் கொண்டு இராமன்பால் சென்றனர்.

இவற்றால் நூலின் பாவிகம் அறம் வெல்லும், பாவம் தோற்கும் என்பது தெற்றென விளங்குகிறது.

**'இந்தக் காப்பியத்தின் உயிரான நீதி அறத்தின் மாட்சியும் மறத்தின் வீழ்ச்சியும் என்பதைக் கற்போர் நெஞ்சில் நிறுத்த உதவுகிறது. இதனையே இக்காப்பியத்தின் பாவிகம் என்று கூறுலாம்'[59]** என்னும் கூற்று ஈண்டு மனங்கொளத் தக்கது.

### கம்பரும் தமிழும்

கம்பர் தமிழின் பல்வேறு துறைகளை முற்றக் கற்றுத் தெளிந்தவர். வடமொழியிலுள்ள வேத உபநிடதக் கருத்துக்களைத் தமிழ் மொழியில் பெயர்த்துத் தந்தவர். அவர் இராமனைத் **'தென் சொற் கடந்தான் வடசொற் கலைக்கு எல்லை தேர்ந்தான்'[60]** எனக் குறிப்பிடுவது அவருக்கும் பொருந்தும்.

கம்பர் தமிழைத் தமிழெனும் அளப்பரும் சலதி என்பார். வண்டுகள் ரீங்காரமிடுவதை,

**'தன்பால் தழுவும் குழல்வண்டு**
**தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே'[61]**

எனக் குறிப்பிடுவர். சுயம்பிரபை நகரில் கள்ளும் தமிழ் போன்றிருந்ததாம். இதனைத் **'தமிழ் நிகர் நறவம்'[62]** என்பர். இராவணன் மேல் வீசிய தென்றல் **'தண்டமிழ்ப் பசுந்தென்றல்'[63]** எனப்பட்டது. கம்பர் கங்கையை

**'பொன்னியைப் பொருவும் கங்கையென்னுமக்**
**கரைபொரு திருநதி'[64]**

என்றும், பரதன் வயல்கள் நிறைந்த கோசல நாட்டைக் கடந்து கங்கைக் கரைக்கு வந்தான் என்பதைக்,

**'காவிரி நாடன்ன கழனி நாடு ஒரீஇ'[65]**

என்றும் குறிப்பிடுகிறார்.

காவிரியைப் புனல் பரந்து பொன் கொழிக்கும்[66] என்பார் பட்டினப்பாலை ஆசிரியர். கம்பரும் கடைத்தெருவைக் குறிப்பிடுகையில்,

**'பரப்பிய பொன்னியன்ன ஆவணம் பலவுங் கண்டார்'**[67]

என்கிறார்.

நாடவிட்ட படலத்தில் தமிழை வளர்த்த அகத்திய முனிவனுக்கு இருப்பிடமான பொதிகை மலையை வணங்கிச் செல்லுமாறு சுக்கிரீவன் வானரர்க்குக் கட்டளையிட்டான்.

> **"கம்பர் கோசல நாட்டைத் தமிழ் நாடாகவே காண்கிறார். கங்கை அவருக்குக் காவிரியாகத் தோற்றமளிக்கிறது. நூலில் இடம்பெறும் கதை மாந்தர்கள் தமிழ்ப் பண்பாட்டோடு விளங்குகின்றனர். ஓர் இரசவாதியின் கைப்பட்டதும் இரும்பு பொன்னாவது போல் கம்பன் கவியொளி பட்டதும் வான்மீகத்தின் மொழிபெயர்ப்பு கம்பராமாயணம் ஆகிவிட்டது. அதில்வரும் கதாபாத்திரங்கள் எல்லாரும் தமிழ்நாட்டவராகித் தமிழரின் மேன்மைக் குணங்களையும் வழக்க பழக்கங்களையும் கொண்டு காட்சியளிக்கின்றனர். கோசல நாடே தமிழ்நாடாக, ஏன், சோழ நாடாக மாறிவிடுகிறது"**[69]

என்பாரது கூற்றினால் கம்பரின் தமிழ்ப் பற்றும், தமிழ் நாட்டுப் பற்றும் நன்கு புலனாகிறது எனலாம்.

**கம்பரது புலமை நலம்-சொல்லாட்சி**

கம்பர் தம் கவிதையின் அழகு மேம்படுமாறு நயமிக்க சொற்களையும், தொடர்களையும் பயன்படுத்துகிறார். ஐம்புலன்களை அவித்த வசிட்டனை,

> **"கசட்டுறு வினைத் தொழில் கள்வராயுழல்**
> **அசட்டர்கள் ஐவரை அறுவராக்கிய**
> **வசிட்டனும்"**[70]

என்பார். இது அவரது சொல்லாட்சித் திறனை வெளிப்படுத்தும்.

தசரதன் **'இன்ப மென்றளக்கரும் அளக்கர் எய்தினான்'**[71] என்பதில் **'அளக்கரும் அளக்கர்'** என்பது அளத்தற்கரிய கடல் என்னும் பொருளை உணர்த்தும்.

'ஒப்பனை ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ'[72]

என்பதில் முதலில் இடம்பெறும் ஒப்பனை என்பது ஒப்பானவனை என்ற பொருளிலும், அடுத்துவரும் 'ஒப்பனை' ஒப்பனைக் கலையையும் குறிக்கும்.

அகத்தியன்,

'நாகமது நாகமுற நாகமென நின்றான்'[73]

என்பது மலை பாதாளத்தில் அழுந்துமாறு யானைபோல் நின்றான் என்ற பொருளைத் தரும்.

'பெண்ணை நண்ணினார் பெண்ணை நாடுவார்'[74]

என்பது பெண்ணாகிய சீதையைத் தேடும் வானரர் பெண்ணை ஆற்றை அடைந்தனர் என நயந்தோன்ற அமைத்துள்ளார்.

'மாய மானாயினான் மாயமானா யினான்'[75]

என்பது மாய்வதற்காக மாயமானான் மாரீசன் என்ற பொருளைத் தருவதாகும்.

கோசலை, 'அஞ்சும் அஞ்சும் என் ஆருயிர் அஞ்சுமால்'[76] என்பதில் முதலில் இடம்பெறும் அஞ்சும் என்பது ஐந்தும் என்பதன் போலியாகும். அடுத்து இடம்பெறும் அஞ்சும் என்பது அச்சப்படும் எனப் பொருள்படும்.

**மொழிபெயர்ப்பாளர்**

கம்பர் வட சொற்கள் தொடர்கள் பலவற்றையும், பெயர்களையும் அழகு தமிழில் மொழி பெயர்த்துத் தருகிறார். அவற்றுள் சில சான்றுகள் வருமாறு :

| | | |
|---|---|---|
| சத்திரம் | - | ஊட்டிடம் |
| தர்மாத்மா | - | அறமூர்த்தி |
| புத்திர காமேஷ்டி யாகம் | - | மைந்தரையளிக்கும் மாமகம் |
| அசகாய சூரன் | - | கூட்டொருவரை வேண்டாக் கொற்றவன் |
| இருசிய சிருங்கி முனி | - | கலைக்கோட்டு முனி |
| வாமனன் | - | குறளன் |
| நரசிங்கம் | - | மானுடமடங்கல் |
| திரிசிரா | - | முத்தலைக் குரிசில் |

| | | |
|---|---|---|
| கவாக்ஷன் | - | ஆன் பெயர்க் கண்ணன் |
| இரணியன் | - | பொன்னன் |
| இரணியாக்ஷன் | - | பொற்கண்ணன் |
| கிருஷ்ணா | - | கரிய பெண்ணை |
| மகாபார்சுவன் | - | மாபெரும் பக்கன் |
| மகராக்ஷன் | - | மகரக் கண்ணன் |
| ரக்தாக்ஷன் | - | குருதிக் கண்ணன் |

இருமொழிப் புலமையாளரே சிறந்த மொழிபெயர்ப்பாளராகத் திகழ முடியும். இதன் மூலம் கம்பரின் இருமொழிப் புலமையும், தமிழின் மீதுள்ள ஈடுபாடும் புலனாகும்.

**கவிச்சக்கரவர்த்தி**

கல்வியிற் பெரியவராகிய கம்பர் கவிச்சக்கரவர்த்தி எனப் போற்றப்படுகிறார். தமிழ்நாட்டில் கவிச்சக்கரவர்த்திகள் மூவர் இருந்தனர். கலிங்கத்துப்பரணி பாடிய ஜெயங்கொண்டார் ஒருவர். ஒட்டக்கூத்தர் மற்றொருவர். கம்பர் இன்னொருவர். ஜெயங்கொண்டாரும், ஒட்டக்கூத்தரும் மன்னர்களால் போற்றி ஆதரிக்கப்பட்டவர்கள்.[77] எனினும் கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டம் கம்பர் ஒருவருக்கே இன்றும் வழங்கி வருகிறது. கம்பருக்கு இப்பட்டம் பொருந்துமாற்றைப் பின்வருமாறு விளக்குவர்:

> தமிழ் நாட்டுப் பெருமக்கள் தாம் இப்பட்டத்தைக் கம்பனுக்குச் சூட்டியவர்கள். இவனது பேரிதிகாசத்தை அரங்கேற்றும்போது அதனைக் கேட்டு உவந்த பொதுமக்கள் அதன் சுவையில் மிகவும் ஈடுபட்டு, அது அமிர்தம் போன்று இனிமையாய் இருப்பதை உணர்ந்து, மண்ணுலகத்-திலுள்ள தங்களுக்கு இந்தப் புத்தமிர்தத்தைத் தமிழாகிய பாற்கடலிலிருந்து கடைந்தெடுத்துத் தந்த வள்ளலுக்கு இப்பட்டத்தைச் சூட்டியது சிறிதேனும் வியப்பாகுமா?

> கம்ப நாடுடைய வள்ளல்
> கவிச் சக்ரவர்த்தி பார்மேல்
> நம்பு பாமாலையாலே
> நரருக் கின்றமுதம் ஈந்தான்

என்றார் ஓர் அபியுக்தர்[78]. இன்று தமிழகத்தில் கவிச் சக்கரவர்த்தி எனப்

போற்றப்படுபவர் கம்பர் ஒருவரே என்பதனாலும் அவரது பெருமையை அறியலாம்.

கம்பர் ஆற்றல் மிக்க புலவர். அவர் இரவு முழுதும் பல நூல்களை ஆய்ந்தார். பகலில் ஒரு நாளில் எழுநூறு பாடல்களை இயற்றினார். இதனை,

**'விழுந்த நாயிறெ ழுவதன்முன் மறைவேதிய ருடனாராய்ந்து**

**எழுந்த நாயிறு விழுவதன் முன் கவிபாடின தெழுநூறே'[79]**

என்னும் பாடல் தெரிவிக்கிறது.

தெய்வ அவதாரத்தைப் பாடிய கம்பர் தெய்வ நிலையில் வைத்துப் போற்றப்படுகிறார்.

**'கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம்'[80]**

**'கம்பநாடன் கழல் தலையில் கொள்வாம்'[81]**

**'ஞானக் கம்பன் செங்கமலப் பாதம் கருத்துற இருத்துவோமே'[82]**

**'மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்'[83]**

**'தெய்வப் புலவர் கம்பநாட்டாழ்வார் பதத்தைச்**
**சிந்திப்பார்க்கு யாதும் அரியது அன்றே'[84]**

ஆகிய புகழ் மொழிகள் கம்பரை இறைநிலைக்கு உயர்த்துகின்றன.

**'படிகொண்ட சீர்த்தி ராமாயணம் என்னும் பக்திவெள்ளம்**
**குடிகொண்ட கோயில்'[85]**

என்று இராமானுசப் பெருமானின் இராமபக்தியைத் திருவரங்கத்தமுதனார் போற்றியுள்ளார். இக்கூற்று கம்பருக்கும் பொருந்துவதாகும்.

**உலகப் பெருங்கவிஞர்**

கம்பர் உலகப் பெருங்கவிஞருள் ஒருவர். வான்மீகி, ஓமர், மில்டன் ஆகியோருக்கு ஒப்பானவர். **'ஓமரால் கிரேக்கம் உயர்வு பெற்றது. வான்மீகி முனிவரால் வடமொழி வளம் நிறைந்தது. மில்டனால் ஆங்கிலம் மேன்மையுற்றது. அதுபோலக் கம்பரால் தமிழ் கவின் சிறந்தது'[86]** என்னும் கூற்று இதனை அரண்செய்கிறது.

### சொல்லின் செல்வன்

கம்பர் காப்பியத்தின் கவிநயமும், பொருள் நயமும், பாநயமும், ஓசை நயமும், ஈடும் எடுப்பும் இன்றித் திகழ்கின்றன. அவரது காப்பியம் ஒரு சொற் களஞ்சியமாகும். ஒவ்வொரு சொல்லின் ஆற்றலையும் பொருளியையையும் கம்பர் நன்கு ஆய்ந்தறிந்தவர் என்பதை அவர் கவி யாத்துள்ள விதத்திலிருந்து நன்கு உணரலாம்.

### முன்னோர் மொழி போற்றல்

கம்பர் முன்னோர் மொழியைப் பொன்னேபோல் போற்றுபவர். அவரது படைப்பில் சங்க நூல்கள், திருக்குறள், ஆழ்வார் மற்றும் நாயன்மார் பாடல்கள் ஆகியவற்றின் சாயல்களைக் காணலாம்.

வாமனன் மாவலியிடம் மூன்றடி மண் கேட்டான். மாவலி தர இசைந்தான். அப்போது வெள்ளி தடுத்தான். மாவலி வெள்ளியை நோக்கி,

> **'கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்**
> **உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி ஒழியுங்காண்'**[87]

என்றான். இது,

> **'கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
> **உண்பதூஉம் இன்றிக் கெடும்.'**[88]

என்னும் குறட்பாவை நினைவூட்டுவது.

> **'மைந்த நீ கோடியெங்கள்**
> **வாழ்க்கை நாள் யாவுமென்பார்'**[89]

என முனிவர்கள் இராமனிடம் கூறினர். இது,

> **'யான் வாழுநாளும் பண்ணன் வாழிய'**[90]

என்னும் புறநானூற்றின் சாயலாகும்.

செய்ந்நன்றி மறத்தலினால் வரும் கேட்டினைக் கம்பர்,

> **'சிதைவகல் காதல் தாயைத்**
> **தந்தையை குருவைத் தெய்வப்**
> **பதவி அந்தணரை ஆவை**
> **பாலரைப் பாவைமாரை**
> **வதை புரிகுநர்க் குண்டாம்**

**மாற்றலாம் ஆற்றல் மாயா**
**உதவி கொன்றார்க்கு ஒன்றாலும்**
**ஒழிக்கலாம் உபாயம் உண்டோ'[91]**

எனக் கூறுகிறார். இப்பாடல்,

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு[92]**

என்னும் திருக்குறளையும்,

**'ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்**
**மாணிழை மகளிர்க் கருச் சிதைத் தோர்க்கும்**
**குரவர் தப்பிய கொடுமை யோர்க்கும்**
**வழுவாய் மருங்கிற் கழுவாயுள**
**நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்திஇல்லென**
**அறம் பாடிற்றே ஆயிழை கணவ'[93]**

என்னும் புறநானூற்றுப் பாடலையும் அடியொற்றி அமைந்துள்ளதை அறியலாம்.

**'இமையவில் வாங்கிய ஈசன்'[94]**

என்பது கம்பராமாயணம்.

**'இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்'[95]**

என்பது கலித்தொகை

**'ஆண்பாலோ பெண்பாலோ அப்பாலோ எப்பாலோ'[96]**

என்னும் கம்பரின் கூற்று

**'ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்'[97]**

என்னும் நம்மாழ்வார் கூற்றினைத் தழுவி அமைந்தது.

**'துன்புள தெனினன்றோ சுகமுளது'[98]**

என்பது இராமாயணம்.

**'துன்ப முற்றவர்க் கலால்**
**இன்பமில்லை யாதலின்'[99]**

என்பது சிந்தாமணி.

கம்பர் இயற்றிய காப்பியத்தில் சிலப்பதிகாரத்தில் காணும் முத்தமிழ்த் திறமும் அமைந்துள்ளது. சீவகசிந்தாமணியிலுள்ள காவிய அமைதியும், திவ்வியப்பிரபந்தங்கள், திருமுறைகள் முதலிய அருள் நூல்களில் அமைந்துள்ள பக்திச் சுவை முதலிய பல நலன்களும் திருக்குறளில் காணும் அறங்களும் இந்நூலில் ஒரு சேர அமைந்துள்ளன என்பதை உணர்ந்து மகிழலாம்.

## ஒருமைப்பாட்டுக் காப்பியம்

இந்திய நாட்டில் பல்வேறு இனங்கள் உள்ளன. பல மொழிகள் பேசப்படுகின்றன. பல்வேறு நாகரிகங்களும் பழக்க வழக்கங்களும் கடைப் பிடிக்கப்பட்டு வருகின்றன. எனினும் இந்திய நாகரிகத்தினை வடபுலத்திற்குரிய நாகரிகம் ஆரிய நாகரிகம் என்றும் தென்புலத்திற்குரிய நாகரிகம் திராவிட நாகரிகம் என்றும் இரு பிரிவுகளில் அடக்கலாம். ஆனால் இவ் இருவேறு நாகரிகங்களும் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே ஒன்றோடொன்று கலந்துவிட்டது என்பதைப் பழமையான நூல்களின் வாயிலாக அறியமுடியும். இவ்விரு நாகரிகங்களையும், பண்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும் ஏற்று, இவற்றிற்கிடையே ஒற்றுமை காண முயல்வதே ஒருமைப்பாடாகும். **'இவ் ஒருமைப்பாட்டினைச் 'சகோதர அறம்' என்றார் வள்ளலார். தேசிய ஒருமைப்பாடு'** என்றார் காந்தியடிகள்.[100]

கம்பரியற்றிய இராமாயணம் ஓர் ஒருமைப்பாட்டுக் காப்பியமாகத் திகழ்கிறது. வடபுலத்திற்குரிய கதை தமிழில் மறுவடிவம் பெற்றுத் தமிழ்க் காப்பியமாக விளங்குகிறது. இந்தியப் பண்பாட்டின் இருவேறு கூறுகளான ஆரிய திராவிடப் பண்பாடுகள், பழக்க வழக்கங்கள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைவதைக் காப்பியம் முழுவதும் காணலாம்.

கண்ணொடு கண்ணிணை நோக்கிக் காதல் வயப்பட்டு இராமன் சீதை ஆகிய இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்துகின்றனர்.[101] இது பண்டைய தமிழரின் களவுக் காதலைக் காட்டுகிறது. இக்களவுக் காதல் வான்மீகத்தில் இல்லை. இராமன், சீதை திருமணத்தின்போது சனகன் தாரைவார்த்துக் கொடுக்க, மாமுது பார்ப்பான் மறை வழி காட்ட வேத முறைப்படி திருமணம் நிறைவேறுகிறது.[102] இத்திருமண முறை சிலப்பதிகாரத்திற்கு முந்திய பழந்தமிழர் திருமண முறைக்குப்புறம்பானது. ஆரியரின் மணச் சடங்கை அடியொற்றியது. இவற்றால் கம்பர் இருவேறு பிரிவினரின் இருவேறு பழக்க வழக்கங்களை இணைத்து ஒருமைப்பாடு காண முயல்வதை அறியலாம்.

கம்பர் தம் நூலை ஓர் ஒருமைப்பாட்டுக் காப்பியமாக அமைத்துள்ளார் என்பதைப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை பின்வருமாறு விளக்குகிறார்.

> **தமிழும் வடமொழியும் இனிது கலந்து வேற்றுமை-யுணர்ச்சி சிறிதுமின்றி அழகு நிரம்பிச் செல்லும் பேராறுபோல விழுமியதாய் ஒழுகுகின்றது. தென்னாட்டுப் பண்பாடும் வடநாட்டுப் பண்பாடும் ஒன்றுபடக் கலந்து அறிவையும் உள்ளத்தையும் ஒருங்கு மகிழ்வித்து உயர்ந்த இலட்சியங்கள் பலவற்றைக் குன்றின் மேலிட்ட விளக்கெனத் தோற்றுவித்துத் தமிழ் மக்களுக்கும் கவிதை உணர்ச்சியையுடைய அனைவருக்கும் வற்றாத இன்பச் சாகரமாக இப்பெருங்காப்பியம் காம்பீர்யத்தோடு அமைந்து கிடக்கின்றது.**[103]

இதனால் கம்பரின் ஒருமைப்பாட்டுணர்ச்சியை அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

கம்பர் தம் குடிப் பெயரினையே தம் பெயராகக் கொண்டிருந்தார். தற்சிறப்புப் பாயிரத்தில், இராமாவதாரம் என நூற்பெயரைச் சுட்டுவதாலும், காப்பிய நாயகன் அவதரித்தான் எனக் குறிப்பிடுவதாலும் கம்பர் நூலுக்கு இட்ட பெயர் இராமாவதாரம் என்பது போதரும்.

கம்பரியற்றிய இராமாயணம் வழிநூல் எனினும், அது ஒரு முதல் நூல் என்று சொல்லத்தக்க சிறப்பினை உடையது. இந்நூல் பெருங்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்கிறது.

கம்பர் நூலின் பாடுபொருளை அடிக்கடி நினைவூட்டுகிறார். நூலின் பாவிகமாகிய **'அறம் வெல்லும்; பாவம் தோற்கும்'** என்பதைக் காப்பிய மாந்தர் கூற்றாக அமைத்துள்ளார்.

கம்பரின் தமிழ்ப் பற்றும் புலமை நலனும் நூலில் நன்கு வெளிப்படுகின்றன. அவரது மொழிபெயர்ப்புத் திறன் ஆங்காங்கே பளிச்சிடுகிறது.

கவிச்சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெற்ற கம்பர் தெய்வக் கவியாகப் போற்றப்படுகிறார். முன்னோர் மொழி போற்றும் பாங்கினை அவரிடம் காணமுடிகின்றது. அவர் ஓர் ஒருமைப்பாட்டுக் கவிஞராகவும் திகழ்கிறார்.

## சான்றெண் விளக்கம்


1. செல்வகேசவராய முதலியார், தி., **கம்பநாடர்,** ப.9.
2. **கம்பராமாயணம்,** தனியன். 4.
3. மேலது, 11
4. ராதாகிருஷ்ண பிள்ளை, எம்., கம்பர், **கம்பன் கவி அமுதம்,** ப.6.
5. இராகவையங்கார், மு., **தெய்வப் புலவர் கம்பர்,** ப.2.
6. நேரடியாகக் கேட்டு அறிந்தது, தகவல் அளித்தவர் ஆனந்தம் பிள்ளை, சு., முனைவர்.
7. **கம்பராமாயணம்,** தனியன் 12-இன் மேலது.
8. மேலது-10
9. **சடகோபரந்தாதி,** த.சி.பா., ப.20.
10. **நாலாயிர திவ்விய பிரபந்தம்,** நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஆழ்வார் பாடல், குறிப்பு, ப.3.
11. **மூவர் தேவாரம், தலமுறை,** திருவழுந்தூர்ப் பதிகம், ப. 624.
12. இராமராஜன், எஸ். கே., **ஆழ்வார்களும் கம்பனும்,** ப.19.
13. **கம்பராமாயணம்,** த.சி.பா., 4.
14. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** சுந்தர காண்டம், அ.ப.க. வெளியீடு, முன்னுரை, ப.IX
15. **கம்பராமாயணம்,** த.சி.பா., 11.
16. I : 8 : 1
17. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** சுந்தர காண்டம், அ.ப.க. வெளியீடு, முன்னுரை, ப. V
18. மேலது, ப. ii
19. **கம்பராமாயணம்,** த.சி.பா., 11.
20. II : 1 : 39
21. VI : 2 : 111
22. இராகவையங்கார். மு., **தெய்வப் புலவர் கம்பர்,** ப. 10.
23. **கம்பராமாயணம்,** த.சி.பா. 10.
24. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார், **கம்பராமாயணம்,** த.சி.பா, ப.24
25. Thirumeni, C., ***An Exploration of the Origin of Kamba Ramayanam,*** pp.331-332.
26. I : 2 : 1
27. VI : 18 : 24
28. **தொல்காப்பியம்,** பொருள், மரபியல், சூ. 640.
29. மேலது, சூ. 643.
30. **நன்னூல்,** பொதுப் பாயிரம், சூ. 7.
31. பாண்டுரங்கன், அ., **காப்பிய நோக்கில் கம்பராமாயணம்,** பக். 46-74.

32. வையாபுரிப்பிள்ளை, எஸ்., **கம்பன் காவியம்,** *ப. 18.*
33. இராகவையங்கார், மு., **தெய்வப் புலவர் கம்பர்,** *ப. 11.*
34. இராமலிங்கம் பிள்ளை, நாமக்கல், **கம்பரும் வால்மீகியும்,** *ப. 274.*
35. இராகவையங்கார், மு., **தெய்வப் புலவர் கம்பர்,** *ப. 11.*
36. **தொல்காப்பியம்,** பொருள், செய்யுளியல், சூ. 539.
37. சுப்பிரமணியன், ச.வே., **காப்பியப் புனைதிறன்,** *ப. 14.*
38. **தண்டியலங்காரம்,** பொதுவணிவியல், சூ. 8.
39. மேலது, சுப்பிரமணிய தேசிகர் உரை, சுந்தரமூர்த்தி, கு., பதிப்பு ப. 8.
40. சுப்பிரமணியன், ச.வே., **காப்பியப் புனைதிறன்,** பக். 4-5.
41. **கம்பராமாயணம்,** வை.மு.கோ. பதிப்பின்படி இவ்வெண்ணிக்கை.
42. I : 7 : 73
43. II : 2 : 39
44. II : 2 : 78
45. III : 5 : 8
46. III : 5 : 9
47. III : 5 : 11
48. III : 5 : 58
49. III : 7 : 227
50. II : 12 : 130
51. **தண்டியலங்காரம்,** பொருளணியியல், பாவிக அணி, சூ. 90.
52. மேலது, சுப்பிரமணிய தேசிகர் உரை, சுந்தரமூர்த்தி, கு., பதிப்பு, ப. 173.
53. ஞானசுந்தரம், தெ., காப்பிய விருந்து, ப. 163
54. III : 8 : 59
55. V : 2 : 95
56. V : 3 : 76
57. VI : 30 : 49
58. VI : 31 : 44
59. ஞானசுந்தரம், தெ. **காப்பிய விருந்து,** ப. 71.
60. II : 4 : 141
61. IV : 1 : 28
62. IV : 14 : 37
63. V : 2 : 210
64. I : 9 : 32
65. II : 11 : 1
66. **பட்டினப்பாலை,** அடி. 7.
67. II : 10 : 10
68. IV : 13 : 31

69. *சுப்பிரமணிய பிள்ளை, ஜி., வித்துவான்,* **கம்பர் விருந்து,** *ப. 7.*
70. I *: 5 : 76*
71. I *: 5 : 115*
72. I *: 21 : 69*
73. III *: 3 : 39*
74. IV *: 15 : 12*
75. IV *: 3 : 11*
76. II *: 4 : 10*
77. *வையாபுரிப் பிள்ளை, எஸ்.,* **கம்பன் காவியம்,** *ப. 136.*
78. *மேலது, பக். 136- 137.*
79. **கம்பராமாயணம்,** *தனியன் - 9.*
80. *மேலது - 6.*
81. *மேலது - 7.*
82. *மேலது - 7இன் மேல்.*
83 *மேலது - 7இன் மேல்.*
84. *மேலது - 5.*
85. *திருவரங்கத்தமுதனார்,* **இராமானுச நூற்றந்தாதி,** *37.*
86. *ஞானசுந்தரம், தெ.,* **காப்பிய விருந்து,** *ப.1.*
87. I *: 8 : 33*
88. **திருக்குறள்,** *அறத்துப்பால், அழுக்காறாமை - 4.*
89. II *: 3 : 88*
90. **புறநானூறு.** *173*
91. IV *: 11 : 62*
92. **திருக்குறள்,** *அறத்துப்பால், செய்ந்நன்றியறிதல், 10.*
93. **புறநானூறு.** *34*
94. I *: 12 : 12*
95. **கலித்தொகை,** *குறிஞ்சிக்கலி, 35*
96. III *: 10 : 44*
97. **திருவாய்மொழி,** *2.5.10.*
98. II *: 6 : 74*
99. **சீவகசிந்தாமணி,** *காந்தருவதத்தையார் இலம்பகம், 579.*
100. *சிவஞானம், ம.பொ.,* **வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு,** *ப. 352.*
101. I *: 107 : 37*
102. I *: 21 : 90-92*
103. *வையாபுரிப் பிள்ளை, எஸ்.,* **கம்பன் காவியம்,** *பக். 18-19.*

# இயல் 2

## கம்பரின் காலமும் வரலாற்றுப் பின்புலமும்

### முன்னுரை

ஓர் இலக்கியம் அது தோன்றிய காலச் சமூக, அரசியல், சமயச் சூழல்களைத் தெளிவாகத் தெரிவிக்கும் இயல்புடையது. இப்பெற்றி பற்றியே அதனைக் காலக் கண்ணாடி என்பர். அதைக் காலத்தின் படைப்பு என்றும் கூறலாம். இம் மெய்ம்மைக்கிணங்கக் கம்பர் வாழ்ந்த காலத்தை அறிதல் இன்றியமையாததாகிறது. இவ்வியல் அவரது காலத்தைக் கண்டறிய முற்படுகிறது. மேலும் அக்காலச் சமூக, சமய, அரசியல் பின்புலத்தை நிறுவ முயல்கிறது. இவை அவரது கடவுட்கொள்கையை மதிப்பிட உறுதுணையாகும்.

### பல்வேறு கருத்துக்கள்

கம்பர் வாழ்ந்த காலத்தைப் பற்றி அறிஞரிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. அவை வருமாறு :

**'எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின் மேல்'** எனத் தொடங்கும் பாடலை முதன்மை ஆதாரமாகக் காட்டி அறிஞர்கள் மு. அருணாசலம்,[1] அ.ச.ஞானசம்பந்தன்[2], எம். இராதாகிருஷ்ண பிள்ளை[3] ஆகியோர் கம்பரது காலம் கி.பி. 9ஆம் நூற்றாண்டு என நிறுவ முயல்கின்றனர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாகிய கம்பர் இயற்றிய இராமாயணச் சுந்தரகாண்ட முன்னுரையில், கம்பரது காலம் உத்தம சோழன் காலமாகிய கி.பி. 10ஆம் நூற்றாண்டு எனக் கூறப்பட்டுள்ளது.

கம்பரது காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு என்றும், அவர் மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் தம் நூலை இயற்றினாரென்றும் அறிஞர்கள் மு. இராகவையங்கார்[5], எஸ். வையாபுரிப் பிள்ளை[6] மா. இராசமாணிக்கனார்[7], கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி[8] ஆகியோர் கருதுகின்றனர்.

கம்பருடைய காலத்தை 9-ஆம் நூற்றாண்டெனச் சிலரும், 12ஆம் நூற்றாண்டெனப் பலரும் கூறுவர் என்பார் மு. வரதராசனார்[9].

இனி இக்கூற்றுக்களின் பொருத்தப் பாட்டினை ஆராய்ந்து கம்பரது காலத்தை நிறுவலாம்.

**ஒன்பதாம் நூற்றாண்டு**

சகாப்தம் என்பது கி.பி. எஅ(78)ல் தொடங்கும் சாலிவாகனன் ஆண்டுக் கணக்கு ஆகும்.[10] கம்பராமாயணம் சக ஆண்டு 807-இல், அதாவது கி.பி. 885-ஆம் ஆண்டு திருவரங்கர் முன்னிலையில் அரங்கேற்றப் பட்டதெனக் கூறுவோர் பின்வரும் பாடலை ஆதாரமாகக் காட்டுவர்.

> **"எண்ணிய சகாப்தம் எண்ணூற் றேழின்மேல் சடையன் வாழ்வு**
> **நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்பநாடன்**
> **பண்ணிய இராமகாதை பங்குனி உத்தரத்தில்**
> **கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேறினானே"[11]**

சக ஆண்டு 807-இல், சடையன் வாழும் வெண்ணெய்நல்லூரில் இயற்றிய இராமகதை என்னும் நூல், பங்குனி மாதம் உத்தர நட்சத்திரத்தில் அரங்கர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது என்பது பாடலின் பொருளாகும்.

கம்பராமாயணச் சிறப்புப் பாயிரத்தில் இப்பாடல் இடம் பெற்றுள்ளதால், இது கம்பர் காலத்தில் இயற்றப்பட்டதென்றும், இதில் இடம் பெற்றுள்ள கம்பரது காலம் பற்றிய செய்தி ஆதாரபூர்வமானதென்றும் வாதிடுவர்.

திருவரங்கம் கோயில் தாயார் சந்நிதிக்கு எதிரில் கம்பர் மண்டபம் என்னும் பெயரில் ஒரு மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்டதாகச் செய்தி செவிவழியாக அறியக் கிடக்கின்றது. மேலும், கம்பர் இரணியவதைப் படலம் பாடி முடித்தபோது, மண்டபத்தின் அருகில் மேட்டழகிய சிங்கர் சந்நிதியிலுள்ள நரசிங்கம் பேரொலியுடன் சிரித்து முழக்கம் செய்தது என்பதும் செவிவழிச் செய்தியாகும்.

மேலும், பாலகாண்டத்தில்,

> **"ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யார் அறியாதார்**
> **பேதித்த உயிர் அனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்**
> **சோதித்தன் வரிசிலையால் நிலமடந்தை முலைசுரப்ப**
> **சாதித்த பெருந்தகையும் இவர் குலத்தோர் தராபதிகாண்"[12]**

என்னும் பாடல் இடம் பெற்றுள்ளது. இப்பாடலில் இடம்பெறும்

ஆதித்தன் என்னும் சொல் சூரியனைக் குறிக்கிறது. ஆனால் ஆதித்தன் என்பவன் ஆதித்தசோழன் என்பதும், அவன் காலமாகிய கி.பி. 9ஆம் நூற்றாண்டில் கம்பர் வாழ்ந்தார் என்பதும் மு. அருணாசலம் வலியுறுத்தும் கருத்தாகும்.[13]

**பத்தாம் நூற்றாண்டு**

கம்பர் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு என்போர்,

> **ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூ றொழித்து**
> **தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு மூவலூர்**
> **சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினான்**
> **காரார் காகுத்தன் கதை**[14]

என்ற பாடலை ஆதாரமாகக் காட்டுவர். இப்பாடலிலுள்ள ஆயிரத்து நூறொழித்து என்பது சக ஆண்டு தொள்ளாயிரம் ஆகுமேயன்றி ஆயிரத்து நூறு ஆகாது. எனவே அதிற்கண்ட காலக் குறிப்பு கி.பி. 978ஆம் ஆண்டைக் குறிக்குமேயல்லாமல் கி.பி. 1178ஐக் குறிக்காது என்பது தேற்றம்[15] என்பர்.

கம்பர் காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டு என்பதை வலியுறுத்த மற்றுமோர் பாடல் நூலிலிருந்து காட்டப்பெறுகிறது.

> **புவி புகழ் சென்னிபேர் அமலன் தோள்புகழ்**
> **கவிகள் தம் மனையெனக் கனகராசியும்**
> **சவியுமைத் தூசுமென் சாந்து மாலையும்**
> **அவிரிழைக் குப்பையும் அளவிலாதது**[16]

இப்பாடலில் இடம்பெறும் அமலன் என்னும் பெயர் கி.பி. 970 முதல் 985 வரை ஆட்சிபுரிந்த உத்தமசோழனைக் குறிப்பதாகும் என்றும், உத்தமன் என்பதையே கம்பர் அமலன் எனக் குறிப்பிட்டுள்ளார் என்றும் விளக்குவர்.[17]

**கம்பர் கி.பி. 9,10ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர்**

ஆழ்வார்களின் கால அடிப்படையிலும், **'எண்ணிய சகாப்தம்'** எனத் தொடங்கும் பாடல் இயற்றப்பட்ட காலத்தின் அடிப்படையிலும் கம்பர் கி.பி. 9, 10ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என அறியமுடியும்.

**ஆழ்வார்களும் கம்பரும்**

கம்பர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டாயின் ஆழ்வார்களுக்குக் கம்பர் முற்பட்டவர் ஆகிறார். சடகோபர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு

எனவும், கி.பி. 10-ஆம் நூற்றாண்டு எனவும் கூறுவர். கம்பர் 'சடகோபரந்தாதி' பாடியுள்ளார். எனவே கம்பர் சடகோபருக்குக் காலத்தால் பிற்பட்டவர் என்பது உறுதியாகிறது.

## குகன்-தம்பியருள் ஒருவன்

திருமங்கை ஆழ்வார் சடகோபருக்கு முற்பட்டவர். இவர் கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பர். திருமங்கை ஆழ்வாரின் பாசுரத்தை ஒட்டிக் கம்பர் தம் காப்பியத்தில் ஒரு பாடல் இயற்றியுள்ளார். ஆழ்வாரின் பாசுரமாவது :

> **'ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது**
> **இரங்கி மற்றவர்க் கின்னருள் சுரந்துகந்து**
> **மாழை மான்மட நோக்கி உன்தோழி**
> **உம்பியெம் பியென் றொழிந்திலை**
> **தோழநீ யெனக்கிங் கொழியென்ற**
> **சொற்கள் வந்தடியேன் என் மனத்திருத்திட**
> **ஆழிவண் நின் அடியிணை அடைந்தேன்**
> **அணிபொழில் திருவரங்கத் தம்மானே'**[18]

இப்பாசுரத்தினை அடியொற்றிக் கம்பரும்,

> **ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய**
> **ஏழை வேடருக் கெம்பிநின் தம்பிநீ**
> **தோழன் மங்கை கொழுந்தியெனச் சொன்ன**
> **வாழிநண் பினை உன்னி மயங்குவாள்**[19]

எனப் பாடினார். குகனை இராமன் தன் தம்பியருள் ஒருவனாகக் கொண்டதாக வான்மீகத்தில் இல்லை. கம்பர் திருமங்கை ஆழ்வாரின் பாசுரத்திலிருந்தே இக்கருத்தைப் பெற்றார் எனலாம்.

## கூனி முதுகில் உண்டை தெரித்தது

இராமன் மீது கூனி சினங்கொண்டமைக்குக் காரணம், அவன் சிறுவனாயிருந்தகாலை அவள் முதுகில் மண்ணுருண்டையால் அடித்ததனாலாகுமென்பார் கம்பர். வான்மீகத்தில் இல்லாத இச்செய்திக்கு மூலம் ஆழ்வார் பாடல்களேயாம்.

> **'....................................................... கூனிகூன்**
> **உண்டை கொண் டரங்கவோட்டி உள்மகிழ்ந்த நாதன்'**[20]

எனத் திருமழிசை ஆழ்வார் பாசுரத்திலும்,

**'கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா'**[21]

என நம்மாழ்வார் பாசுரத்திலும் இச்செய்தி இடம்பெற்றுள்ளது.

இராமன் தன்மீது மண்ணுருண்டையால் அடித்ததைக் கூனி நினைவு கூர்ந்தாள் என்பதைக் கம்பர்,

**பண்டைநாள் இராகவன் பாணி வில்லுமிழ்**
**உண்டை யுண்டதனைத்தன் உள்ளத்து உள்ளுவாள்**[22]

எனத் தம் நூலில் குறிப்பிடுவர். மேலும் இராமன் அரக்கர் மீது அம்புகளை எய்தபோது அவன் நிலைமையினை,

**....................................... கூனி கூன்போக வுண்டை**
**தெறித்த போதொத்தன்றிச் சினமுண்மை தெரிந்ததில்லை**[23]

என இராவணன் குறிப்பிட்டான். இவற்றால் கம்பர் ஆழ்வார்களுக்குக் காலத்தால் பிற்பட்டவர் என்பது தேற்றம்.

கம்பர் ஆழ்வார்களுக்கும், சீவகசிந்தாமணியினை இயற்றிய திருத்தக்கதேவருக்கும் பிற்பட்டவர் என்பதை,

> **"... ஆழ்வார்களுக்குக் கம்பன் பிற்பட்டவன் என்பது மலை விளக்கு. இங்ஙனமே சீவகசிந்தாமணி, சூளாமணி முதலிய காவியங்களுக்கும் கம்பனது காவியம் கடப்பட்டுள்ளது என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. இக்காவியங்களும் 10-ஆம் நூற்றாண்டளவில் தோன்றியவையே. பண்டை நூல்களிலிருந்து கம்பன் ஒவ்வோர் அகப்பை அளித்துத் தனது நூலில் அமைத்துக் கொண்டான் என்ற பரம்பரைச் செய்தியும் இவற்றால் வலியுறுகிறது. இந்த அகச்சான்றுகளுக்கு முற்றும் மாறாக 'எண்ணிய சகாப்தம்' என்ற செய்யுள் கம்பனை ஆழ்வார்களுக்கு முற்பட்டவனாக்குகிறது. இது முற்றும் அபத்தமாகும். வைணவ சமய வரலாறும் இதற்கு மாறாக உள்ளது."**[24]

என்பர். இக்கூற்று கம்பர் ஆழ்வார்களுக்கும் திருத்தக்க தேவருக்கும் பிற்பட்டவர் என்பதை மேலும் வலியுறுத்தும்.

## அரங்கேற்றம்

**'எண்ணிய சகாப்தம்'** எனத் தொடங்கும் மேலே குறித்த பாடலின் இறுதி அடி **'கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேறினானே'** என்பதாகும். **'அரங்கேற்றுதல்'** என்பது அறிஞர் கூடிய அவையில் நூல்கள் படிக்கக் கேட்டு அங்கீகரிக்கப்படுவதைக் குறிப்பதற்கு முன்னாளில் வழங்கப்படவில்லை[25] என்பர்.

**நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து**
**அறங்கரை நாவின் நான்மறை முற்றிய**
**அதங் கோட்டாசாற்கு அரில் தபத்தெரிந்து**
**மயங்கா மரபின் எழுத்து முறைகாட்டி[26]**

என்பது தொல்காப்பியப் பாயிரம்.

**உரைசால் அடிகள் அருள மதுரைக்**
**கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்[27]**

**இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப**
**வளங்கெழு கூலவாணிகன் சாத்தன்**
**............ அறியவைத்தனன்[28]**

என்பன முறையே சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றின் பதிகங்கள்.

**'தேனூற நின்ற தெருண்டார் அவையில் செப்பலுற்றேன்'[29]**

என்பது சீவகசிந்தாமணி.

**தேமாண் அலங்கல் திருமால் நெடுஞ்சேந்தன் என்னும்**
**கோமான் அவையுள் தெருண்டார் கொளப்பட்டதன்றோ[30]**

என்பது சூளாமணி.

மேற்கண்ட சான்றுகளால், நூல்கள் பிறர் முன்னிலையில் படிக்கப் பெற்றதற்கு **'அரங்கேற்றம்'** என்ற சொல் வழங்கப்படவில்லை என்பது போதரும்.

அரங்கேற்றம் என்ற தொடர் வழக்கு நாட்டியக் கலை ஒன்றினுக்கு வழங்கி வந்துள்ளமையைச் சிலப்பதிகாரத்தில் **'அரங்கேற்று காதை'[31]** என வருவதாலும், கம்பர்,

**'ஐய நுண்ணிடையார் ஆடும் நாடக அரங்கு கண்டார்'**

எனக் குறிப்பிடுவதாலும், கற்றறிந்தார் அவையில் நூலைக் கேட்பித்தற்கு இத்தொடர் பயன்படுத்தப் பெறவில்லையென்பதாலும் **'கண்ணிய அரங்கர் முன்னே கவியரங்கேறினானே'** என முடியும் பாடல் கம்பர் காலத்தில் இயற்றப்படவில்லை எனலாம். எனவே, இப்பாடல் கம்பர் காலத்திற்குப் பின்னர் இயற்றப்பட்டு நூலில் சேர்க்கப் பெற்றிருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

மேற்குறித்த சான்றுகளால், கம்பர் ஆழ்வார்களுக்குப் பிற்பட்டவர் என்பதும், சிறப்புப் பாயிரப் பாடலாகிய **'எண்ணிய சகாப்தம்'** எனத் தொடங்கும் பாடல் கம்பர் காலத்திற்குப் பின்னர் இயற்றப்பட்டு நூலில் சேர்க்கப்பட்டதென்பதும் அறியக் கிடக்கின்றன.

### எண்ணிய சகாப்தம்-பாடலின் புதிய விளக்கம்

**'எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின் மேல் என்பதைக்'** கருதிய சகாப்தம் எண்ணப்பட்ட நூற்றேழின் மேல் எனப் பொருள்படுத்தி ஆயிரமாகிய பேரெண்ணை ஒழித்து உலக வழக்கு நெறியே தழுவிச் சிற்றெண்ணாலே கூறியதாம் எனக் கொண்டு, சகாப்தம் 1107, அஃதாவது கி.பி. 1185 எனக் கொள்வது பொருத்தமாகும் என்பர் இரா. இராகவையங்கார்[33].

### மூன்றாம் குலோத்துங்கன் காலம்

சோழ அரசர்களின் புகழ் உச்ச நிலையில் இருந்தபோது கம்பர் வாழ்ந்திருந்தார்.

**'புவிபுகழ் சென்னிபே ரமலன் தோள்புகழ்**
**கவிகள் தம்மனையெனக் கனகராசியும்'[34]**

என்பது இதற்குச் சான்றாகும்.

**சென்னிநாள் தெரியல் வீரன் தியாக வினோதன் தெய்வப்**
**பொன்னி நாட்டுவமை வைப்பைப் புலன்கொள**
**நோக்கிப் போனான்[35]**

என்னும் இதில் இடம் பெற்றுள்ள தியாகவினோதன் என்பது மூன்றாம் குலோத்துங்கனின் பட்டப் பெயராகும். இவன் கி.பி. 1178 முதல் 1216 வரை ஆட்சிபுரிந்தவன்.

மேலே காட்டப்பெற்ற சான்றுகளின் அடிப்படையில் கம்பரது காலத்தை வரலாற்றறிஞர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி பின்வருமாறு கணிப்பர்:

> **"கம்பரது காலம் விவாதத்திற்குரிய ஒன்றாக உள்ளது. எனினும் அவர் ஒட்டக்கூத்தர், சேக்கிழார் காலத்தவராகவோ அல்லது சற்று அவர்களுக்குப் பிந்தியவராகவோ இருந்திருக்கக் கூடும் என்பதில் சற்றும் ஐயமில்லை. சடையன் பற்றிய கல்வெட்டுக்கள் உள்ளன. தியாகவினோதன் தெய்வப் பொன்னி நாடு எனக் கம்பர் பாடலில் வருணிக்கப் பட்டுள்ளது. தியாகவினோதன் என்ற அடைமொழி மூன்றாம் குலோத்தங்கனுக்கு உரியது என்பதாலும் கம்பர் காலத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வர முடியும். கம்பரின் காப்பியத்தில் சீவகசிந்தாமணியின் சாயல்களைக் காண முடிவதனாலும், சிந்தாமணியின் காலத்தைக் கொண்டும் கம்பரின் காலம் 12-ஆம் நூற்றாண்டு என்ற முடிவுக்கு வரமுடியும்."[36]**

இம்மேற்கோள் மேற்காட்டிய முடிவை அரண் செய்வதாக உள்ளது.

### "ஆவின் கொடைச் சகரர்" - பாடலும் பொருளும்

பழைய ஏட்டுப் பிரதி ஒன்றில்,

> **ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூற்றொழித்துத்**
> **தேவன் திருவழுந்தூர் நன்னாட் டுமூவலூர்ச்**
> **சீரார் குணாதித்தன் சேயமைப் பாடினான்**
> **காரார் காகுத்தன் கதை[37]**

என்ற செய்யுள் காணப்படுகிறது. இச்செய்யுள், கம்பர் 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பதை வலியுறுத்தும். எனவே,

> **'எண்ணிய சகாப்தம் என்ற செய்யுள் கொள்ளத்தக்கதன்று. ஆவின் கொடைச் சகரர் என்ற செய்யுளே கொள்ளத்தக்கது. கம்பன் 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன் என்பதே தேற்றம்'[38]**

என்பர்.

### கன்னடக் கல்வெட்டு

*கி.பி. 1376-இல் பொறிக்கப்பட்ட ஒரு கன்னடக் கல்வெட்டு (எபிகிராபியா கர்னாடிகா வால்யூம் 5 ஹாஸ்ஸான் 77) இவ்வாண்டிற்குமுன் இரண்டு தலைமுறைக் காலமாகக் கம்பராமாயணம் கன்னட தேசத்தில் வழங்கி வந்ததென்று தெரிவிக்கின்றது. எனவே, கி.பி. 1325-இல் கம்பனது பெருங்காவியம் கன்னட தேசத்திலும் பரவி இருந்தமையாலும் இந்நூல் அதற்குச் சிறிது காலத்திற்கு முன்னர் இயற்றப்பட்டிருக்க வேண்டும்.[39] இச்சான்றும், கம்பராமாயணம் 12-ஆம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றமையை வலியுறுத்தும்.*

### பெரிய திருமொழியின் உரை

*பெரிய திருமொழியில் மஞ்சுலாஞ்சோலை என்ற பாசுர வியாக்கியானத்தில் **ஈக்கள் வண்டோடு மொய்ப்ப** என்னும் இராமாயண அடி மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இதனை **என்று ஆற்று வரவுகளிலே சொல்லுவார்களாய்த்துத் தமிழர்** என எழுதினார் பெரியவாச்சான் பிள்ளை. இவர் கி.பி. 1228-இல் பிறந்தவர்.[40] எனவே கி.பி. 1200 இல் கம்பரது பெருநூல் மிக்க பிரசாரம் எய்தியிருந்ததென்பது விளங்கும்.*

### கம்பரும் பிரதாபருத்திரனும்

*தெலுங்கு நாடாகிய ஓரங்கல் நாட்டில் பிரதாபருத்திரன் அவைக்களத்திற்குக் கம்பர் சென்றதாகவும் அவனது வள்ளன்மையைப் புகழ்ந்து,*

> ***அவனி முழுதுண்டும் அயிராப தத்துன்***
> ***பவனி தொழுவார் படுத்தும்-புவனி***
> ***உருத்திரா உன்னுடைய ஓரங்கல் நாட்டில்***
> ***குருத்திரா வாழைக் குழாம்***

*என்ற செய்யுளைப் பாடியதாகவும் ஒரு வரலாறு தமிழ் நாவலர் சரிதையில் காணப்படுகிறது.*

*இவ்வரலாறு உண்மையென்று கொள்ளலாம். கம்பர் தம் நூலில் மசரதம், தம்மி, கிச்சு, அக்கட, அந்து போன்ற தெலுங்கு மற்றும் கன்னடச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார். இவற்றுள் மசரதம் கானல் நீரென்றும், கிச்சு நெருப்பு என்றும், தெலுங்கில் பொருள்படுவன. **'அந்து'** அப்படி என்று கன்னடத்திற் பொருளாம். **'அக்கட'** என்பது தெலுங்கில் ஒரு*

மேலே காட்டப்பெற்ற சான்றுகளின் அடிப்படையில் கம்பரது காலத்தை வரலாற்றறிஞர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி பின்வருமாறு கணிப்பர்:

> **"கம்பரது காலம் விவாதத்திற்குரிய ஒன்றாக உள்ளது. எனினும் அவர் ஒட்டக்கூத்தர், சேக்கிழார் காலத்தவராகவோ அல்லது சற்று அவர்களுக்குப் பிந்தியவராகவோ இருந்திருக்கக் கூடும் என்பதில் சற்றும் ஐயமில்லை. சடையன் பற்றிய கல்வெட்டுக்கள் உள்ளன. தியாகவினோதன் தெய்வப் பொன்னி நாடு எனக் கம்பர் பாடலில் வருணிக்கப் பட்டுள்ளது. தியாகவினோதன் என்ற அடைமொழி மூன்றாம் குலோத்தங்கனுக்கு உரியது என்பதாலும் கம்பர் காலத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வர முடியும். கம்பரின் காப்பியத்தில் சீவகசிந்தாமணியின் சாயல்களைக் காண முடிவதனாலும், சிந்தாமணியின் காலத்தைக் கொண்டும் கம்பரின் காலம் 12-ஆம் நூற்றாண்டு என்ற முடிவுக்கு வரமுடியும்."[36]**

இம்மேற்கோள் மேற்காட்டிய முடிவை அரண் செய்வதாக உள்ளது.

## "ஆவின் கொடைச் சகரர்" - பாடலும் பொருளும்

பழைய ஏட்டுப் பிரதி ஒன்றில்,

> **ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூற்றொழித்துத்**
> **தேவன் திருவழுந்தூர் நன்னாட் டுமூவலூர்ச்**
> **சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினான்**
> **காரார் காகுத்தன் கதை[37]**

என்ற செய்யுள் காணப்படுகிறது. இச்செய்யுள், கம்பர் 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பதை வலியுறுத்தும். எனவே,

> **'எண்ணிய சகாப்தம் என்ற செய்யுள் கொள்ளத்தக்கதன்று. ஆவின் கொடைச் சகரர் என்ற செய்யுளே கொள்ளத்தக்கது. கம்பன் 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன் என்பதே தேற்றம்'[38]**

என்பர்.

### கன்னடக் கல்வெட்டு

கி.பி. 1376-இல் பொறிக்கப்பட்ட ஒரு கன்னடக் கல்வெட்டு (எபிகிராபியா கர்னாடிகா வால்யூம் 5 ஹாஸ்ஸான் 77) இவ்வாண்டிற்குமுன் இரண்டு தலைமுறைக் காலமாகக் கம்பராமாயணம் கன்னட தேசத்தில் வழங்கி வந்ததென்று தெரிவிக்கின்றது. எனவே, கி.பி. 1325-இல் கம்பனது பெருங்காவியம் கன்னட தேசத்திலும் பரவி இருந்தமையாலும் இந்நூல் அதற்குச் சிறிது காலத்திற்கு முன்னர் இயற்றப்பட்டிருக்க வேண்டும்.[39] இச்சான்றும், கம்பராமாயணம் 12-ஆம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றமையை வலியுறுத்தும்.

### பெரிய திருமொழியின் உரை

பெரிய திருமொழியில் மஞ்சுலாஞ்சோலை என்ற பாசுர வியாக்கியானத்தில் **ஈக்கள் வண்டோடு மொய்ப்ப** என்னும் இராமாயண அடி மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இதனை **என்று ஆற்று வரவுகளிலே சொல்லுவார்களாய்த்துத் தமிழர்** என எழுதினார் பெரியவாச்சான் பிள்ளை. இவர் கி.பி. 1228-இல் பிறந்தவர்.[40] எனவே கி.பி. 1200 இல் கம்பரது பெருநூல் மிக்க பிரசாரம் எய்தியிருந்ததென்பது விளங்கும்.

### கம்பரும் பிரதாபருத்திரனும்

தெலுங்கு நாடாகிய ஓரங்கல் நாட்டில் பிரதாபருத்திரன் அவைக்களத்திற்குக் கம்பர் சென்றதாகவும் அவனது வள்ளன்மையைப் புகழ்ந்து,

> **அவனி முழுதுண்டும் அயிராப தத்துன்**
> **பவனி தொழுவார் படுத்தும்-புவனி**
> **உருத்திரா உன்னுடைய ஓரங்கல் நாட்டில்**
> **குருத்திரா வாழைக் குழாம்**

என்ற செய்யுளைப் பாடியதாகவும் ஒரு வரலாறு தமிழ் நாவலர் சரிதையில் காணப்படுகிறது.

இவ்வரலாறு உண்மையென்று கொள்ளலாம். கம்பர் தம் நூலில் மசரதம், தம்மி, கிச்சு, அக்கட, அந்து போன்ற தெலுங்கு மற்றும் கன்னடச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார். இவற்றுள் மசரதம் கானல் நீரென்றும், கிச்சு நெருப்பு என்றும், தெலுங்கில் பொருள்படுவன. **'அந்து'** அப்படி என்று கன்னடத்திற் பொருளாம். **'அக்கட'** என்பது தெலுங்கில் ஒரு

வியப்பிடைச் சொல். இப்பிரதாப ருத்திரன் கல்வெட்டுக்கள் கி.பி. 1162, 1179 முதலிய ஆண்டுகளுக்கு உரியனவாயுள்ளன. எனவே கம்பன் 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன் என்பதை இவ்வரலாறு உணர்த்தும் என்பர்.[41]

மேற்காட்டிய ஆதாரங்களின் அடிப்படையில் கம்பர் 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது உறுதியாகிறது. இனி அவர் வாழ்ந்த வரலாற்றுச் சூழ்நிலையைக் கண்டறியலாம்.

**வரலாற்றுப் பின்புலம்**

வரலாற்றுப் பின்புலம் என்பது ஒருவர் வாழ்ந்த காலப்பகுதியின் அரசியல், சமூகம், சமயம், இலக்கியம், கலை ஆகியவற்றின் நிலையினைக் குறிப்பதாகும். நூல் ஆக்கத்திற்கு இவை பேருதவி புரிகின்றன. நூலின் பாடுபொருள் தேர்விற்கும், கருத்துக்கள் வெளிப்பாட்டிற்கும் இவற்றின் தாக்குரவுகள் காரணமாகின்றன.

**பிற்காலச் சோழர் காலம்**

கம்பர் வாழ்ந்த காலம் பிற்காலச் சோழர் காலம் எனப் பொதுவாகக் குறிப்பிடலாம். இச்சோழ மன்னர்கள் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை, நானூறு ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர். இக்காலத்துத் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, தென்னார்க்காடு மாவட்டங்களடங்கிய நிலப்பகுதியே சோழமண்டலம் என வழங்கப்பட்டது.

**ஆட்சி எல்லை**

சோழ மன்னர்கள் தம் ஆற்றலாலும், படை வலிமையாலும் பிற நாடுகளை வென்று தம் ஆட்சிக்குட்படுத்திப் பேரரசு நிறுவிச் சக்கரவர்த்திகளாக வீற்றிருந்து அரசாண்ட காலத்தில் அவர்களது ஆளுகையின் கீழ் அமைந்திருந்த நாடுகளெல்லாம் ஒருங்கே சோழ இராச்சியம் என்ற பெயர் உடையதாயிருந்தமை அறியத்தக்கது. இந்த இராச்சியம் முதல் இராசராச சோழனது 17-ஆம் ஆட்சியாண்டில் பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டது. சோழ மண்டலம் என்பது சோழ நாட்டையும், இராசராசப் பாண்டி மண்டலம் என்பது பாண்டி நாட்டையும், செயங்கொண்ட சோழமண்டலம் என்பது தொண்டை நாட்டையும், முடிகொண்ட சோழமண்டலம் என்பது கங்கபாடி நாட்டையும், நிகரிலி சோழ மண்டலம் என்பது நுளம்பபாடி நாட்டையும், மும்முடிச் சோழ மண்டலம் என்பது ஈழ நாட்டையும், அதிராசராச மண்டலம் என்பது

கொங்கு நாட்டையும், வேங்கைமண்டலம் என்பது கீழைச் சாளுக்கிய நாட்டையும், மலை மண்டலம் என்பது சேர நாட்டையும் குறிப்பானவாகும்.[42] இது சோழ நாட்டின் எல்லை விரிந்திருந்தமையைக் காட்டுகிறது. இச்சோழப் பேரரசை மனத்ததிற் கொண்டு கம்பர் கோசலப் பேரரசைப் பாடியிருக்கக் கூடும்.

**செங்கோன்மை**

> *"சோழர்களின் ஆட்சியை ஒரு தனி அரசனது செங்கோல் ஆட்சியாகக் கூறலாம். அவர்கள் அரசியலில் தலைமை வகித்து எவற்றிற்கும் பொறுப்புடையவர்களாய் நீதி தவறாமல் ஆட்சி புரிவதையே தம் முதற் கடமையாகக் கருதி ஒழுகி வந்தவர்கள் என்பது புனைந்துரையன்று. அவ்வேந்தர்கள் தாம் விரும்பியவாறு எதனையும் செய்யும் ஆற்றலும் திறமையும் உடையவர்கள் எனினும், அமைச்சர் முதலானவர்களுடன் நன்கு ஆராய்ந்துதான் எக்கருமத்தையும் நிறைவேற்றுவது வழக்கம். அன்னோர்க்கு அரசியல் நிர்வாகங்களில் உசாத்துணை-யாயிருந்து வேண்டுவன கூறி உதவி புரிந்து வந்தவர்கள் 'உடன் கூட்டதிகாரிகள்' ஆவர். அன்னோர் அரசர்களோடு யாண்டும் உடன் செல்லும் உரிமை படைத்தவர்கள் என்று தெரிகிறது. அவர்களுள் ஒவ்வொருவரும் ஒவ்வோர் அரசியற் பிரிவிற்குத் தலைமை வகித்த அரசியல் அதிகாரியாயிருத்தல் வேண்டுமென்பது உய்த்துணரக் கிடக்கின்றது"[43].*

மன்னர்கள் கற்றறிந்தோர் சொல்வழி நின்று குடிதழீஇக் கோலோச்சினர் என்பது அறியக் கிடக்கின்றது. தசரதனது செங்கோன்மையைச் சிறப்பிக்கக் கம்பருக்குச் சோழப் பேரரசின் செங்கோன்மை தூண்டுகோலாய் அமைந்தது எனலாம்.

**கலைகள்**

பிற்காலச் சோழர் காலம் தமிழக வரலாற்றின் பொற்காலம் எனக் கருதத்தக்கது. கலைகள் நன்கு வளர்க்கப்பட்டன. கலைஞர்கள் ஆதரிக்கப்பட்டனர்.

> *"அந்நாளில் பரதத்திலும் இசையிலும் வல்ல தளிச்சேரிப் பெண்டுகள் பலர் திருக்கோயிலில் பணிபுரிந்து வந்தமை குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய கலைகளில் தேர்ச்சி*

> பெற்றுச் சிறப்பெய்தியிருந்த பலரைத் தமிழகத்திலுள்ள பல ஊர்களிலிருந்து அழைப்பித்துத் தஞ்சை இராசராசேச் சுரத்தைச் சூழ்ந்துள்ள தெருக்களில் முதல் இராசராச சோழன் குடியேற்றிய செய்தி அன்னோர் பெயர்களுடன் அக்கோயிலில் வரையப் பெற்றிருத்தலை இன்றுங் காணலாம். அன்றியும் திருக்கோவலூரிலுள்ள திருவீரட்டானேச்சுரர் கோயிலில் நாடக மகளிர் முப்பத்திரண்டு பேர் தொண்டு புரிந்து வந்த செய்தி அவ்வூரிலுள்ள முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டொன்றால் புலப்படுகிறது. அவர்கள் நாள்தோறும் முக்காலங்களிலும் பணியாற்றுவதற்குத் திருக்கோயிலைச் சார்ந்த இடங்களில் வாழ்ந்து வந்தமை பற்றித் தளிச்சேரிப் பெண்டுகள் எனவும், இறைவனுக்குத் தொண்டு புரிந்து வந்தமை பற்றித் தேவரடியார் எனவும், நாட்டியத்தில் வல்லுநராய் இருந்தமை பற்றி நாடகக் கணிகையர் எனவும் அந்நாளில் வழங்கப் பெற்றுள்ளனர்."[44]

சோழ மன்னர்கள் இசை, நாட்டியம் போன்ற கலைகளில் கொண்டிருந்த ஈடுபாட்டினை இதனால் அறியலாம். கம்பர் தம் நூலில் இசை, நாட்டியம் போன்ற பல்வேறு கலைகளைப் பற்றிக் கூறியுள்ளார் என்பது இங்கு நோக்கத்தக்கது.

### சமய நிலை

தமிழகத்தில் பல்லவர் ஆண்ட காலம் பக்தி இயக்கக் காலம் என அழைக்கப்படுகிறது. அதைத் தொடர்ந்து திருமுறைகளும் திவ்விய பிரபந்தமும் செல்வாக்குப் பெற்றன. கோயில்களில் இவை ஓதப்பெற்றன. பொதுவாக விசயாலயச் சோழன் வழிவந்த சோழ மன்னர்கள் காலத்தைச் சைவ வைணவத்தின் சிறப்பான காலம் எனலாம். இக்காலத்தில் இச்சமயங்களுக்கிடையே போட்டியும் பூசலும் மிகுதியாக இல்லை. எனினும் சைவத்தின் மீது மிகுந்த பற்றுடையசோழ மன்னர்கள் ஓரிருவர் வைணவத்தின் மீது வெறுப்புக் கொண்டிருந்தனர். அவர்கள் வைணவத்திற்கு எதிரான செயல்களில் ஈடுபட்டனர்.

### சமயப் பொதுமை

சைவ சமயத்தைச் சார்ந்த சோழ மன்னர்கள் வைணவ சமயத்தையும் ஆதரித்தனர்.

> 'முதலாம் இராசேந்திரன் காலத்திய இரண்டு கல்வெட்டுக்கள் இறைவனுக்குப் படைக்கப்பட்ட உணவு வழிபாட்டின் போது திருப்பதிகம் பாடிய வைணவர்களுக்கு வினியோகிக்கப் பட்டமையையும், திருவாய் மொழியைப் பாராயணம் செய்யும் மூவரின் வாழ்க்கைச் செலவுகளுக்காக நில அறக்கட்டளை ஏற்படுத்தப் பட்டமையையும் குறிப்பிடுகின்றன'[45]

என்பர். இதனால் முதலாம் இராசேந்திரன் சைவ சமயத்தைச் சார்ந்தவனெனினும் வைணவ சமயத்தினரை ஆதரித்தமை புலனாகிறது.

முற்போக்கு எண்ணங் கொண்ட இராசராசன் தஞ்சைக் கோயில்களில் வைணவம் மற்றும் புத்த சமயச் சார்புடைய சின்னங்களை இடம்பெறச் செய்தான்[46] என்பதால், அவன் சமையப் பொறை மிக்கவனாக விளங்கினான் என்பதை அறியமுடிகிறது.

குந்தவை நாச்சியார் வைணவர்களின் சமயச் சின்னமாகிய பொன்னாலாகிய நாமங்களைத் தானமாக அளித்தார்[47] என்பதால் அவரது சமயப் பாகுபாடற்ற மனப்பாங்கு புலனாகும்.

முதற் குலோத்துங்க சோழன் சிவபெருமானிடத்தில் எல்லையற்ற அன்புடையவனாய்த் திகழ்ந்தான். அக்காரணம் பற்றியே அவன் திருநீற்றுச் சோழன் என வழங்கப் பெற்றனன். தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த மன்னார்குடியிலுள்ளதும், இப்போது இராசகோபால சாமி என்று வழங்கப் பெறுவதுமாகிய திருமால் கோட்டம் இவன் ஆட்சிக் காலத்தில் எடுப்பிக்கப் பெற்று இவன் பெயரிடப்பட்டதொன்றாகும். குலோத்துங்க சோழ விண்ணகரம் என்பது அக்கோயிலின் பழைய பெயராகும். அன்றியும் வேங்கி நாட்டில் இவன் இளவரசுப் பட்டம் பெற்ற நாளில் அந்நாட்டின் ஒழுகலாற்றின்படி இவன் எய்திய அபிடேகப் பெயர் **'சப்தமவிஷ்ணுவர்த்தனன்'** என்பது சில கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. கி.பி. 1090-ஆம் ஆண்டு நாகப்பட்டினத்தின்கண் கடாரத்தரசனால் எடுப்பிக்கப் பெற்ற இராசேந்திர சோழப் பெரும்பள்ளி என்னும் புத்தவிகாரத்திற்குச் சிறந்த விளைநிலங்களைத் தம்பால் கொண்ட ஊர்களைக் குலோத்துங்கன் இறையிலியாக அளித்து அச்சமயத்தினரை ஆதரித்தான். இவ்வேந்தன் அப்புத்த கோயிலுக்கு விட்ட நிவந்தங்களை உணர்த்துஞ் செப்பேடுகள் ஹாலண்டு தேயத்திலுள்ள லெய்டன் நகரப் பொருட்காட்சிச் சாலையில் இப்போது இருத்தல் அறியத் தக்கது.[48] இவற்றையெல்லாம் ஆராய்ந்து உண்மை காணுமிடத்து, இம்மன்னன் தன்

காலத்தில் வழங்கிய எல்லாச் சமயங்களிடத்தும் பொது நோக்குடையவனாய் அவற்றை அன்புடன் ஆதரித்து வந்தனன் என்பது பெறப்படுகின்றது.

**சமயப் பூசல்**

சோழர் காலத்தில் சமயப் பொதுமை நிலவியதெனினும், வைணவ சமயத்தை வெறுத்த சோழ மன்னர்களும் இருந்தனர்.

இராமானுசரும் அவரது அடியார்களும் அதிராசேந்திரன் என்னும் சோழ மன்னனால் நாடு கடத்தப்பட்டது சமயப் பொறையின்மை தலைதூக்கியதற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். இந்த நாடுகடத்தலினால் ஏற்பட்ட மக்கள் கலவரத்தில் விசயாலயன் ஆண்வழிவந்த கடைசி மன்னனாகிய அதிராசேந்திரன் உயிரிழக்க நேர்ந்தது.

> "இதிலிருந்து இருவிதமான ஊகங்களைப் பெறமுடியும். இது ஒரு மன்னன் எடுத்த முடிவேயன்றி வைணவ சமய ஒழிப்பு சோழ அரசின் கொள்கையின் ஒரு பகுதியாக இல்லை. இரண்டாவதாக மக்கள் கலவரத்தில் ஒரு மன்னன் உயிரிழக்க நேர்ந்ததால் அப்போதைய சூழல் குறுகிய சமயக் கொள்கைக்குச் சாதகமாக இல்லை. இந்த மன்னன் கிருமி கண்ட சோழன் எனப் பெயரிடப்பட்டு மக்களால் வெறுக்கப்பட்டான் ............................ ................ இவன் காலத்திலிருந்தே சைவர்களும், வைணவர்களும் பௌத்த சமண சமயங்களுக்கெதிரான தங்கள் எதிர்ப்பினை விடுத்துத் தாமே ஒருவருக் கொருவர் அன்னியராயினர்."[49]

என்பர். கம்பர் காலத்திற்கு முன்னர்த் தமிழ்நாட்டில் சமயங்களின் நிலைமையை டாக்டர் மா. இராசமாணிக்கனார் பின்வருமாறு விளக்குவர்.

> பல்லவர் காலத்தில் சைவமும் வைணவமும் சமண பௌத்தங்களுடன் போராடி அவற்றின் செல்வாக்கை ஒழித்தன. அதனால் பிற்காலச் சோழர் காலத்தில் சைவமும் வைணவமுமே தமிழகத்தில் செல்வாக்குற்றன. எனினும் சோழ மன்னர் அனைவரும் சிறந்த சிவனடியார்கள். ஆதலின் சைவமே நாட்டில் தனியாட்சி புரிந்ததெனல் தவறாகாது. சோழ அரசருள் இரண்டொருவர் வைணவத்தை மிகுதியாக வெறுத்தனர். அவருள் ஒருவன் அதிராசேந்திரன் அல்லது

வீரராசேந்திரன் ஆவான். இவருள் ஒருவன் காலத்திற்றான் இராமானுசர் சோழ நாட்டை விட்டோடும் துன்பநிலை உண்டானது.

மற்றொருவன் சேக்கிழார் காலத்தவனான இரண்டாம் குலோத்துங்கன். இவன் தில்லைக் கோவிந்தராசரைப் பெயர்த்து அப்புறப்படுத்தி விட்டான்.

இரண்டாம் இராசராசன் 14-ஆம் ஆட்சி ஆண்டில் திருக்கடவூர் கோயில் அதிகாரிகள் இக்கோவிலைக் கண்காணிக்கும் மகேசுரர்கள் வைணவர்களோடு தாராளமாகக் கலந்து பழகினால் அவர்தம் சொத்துக்கள் கோவிலுக்குப் பறிமுதல் செய்யப்படும் என்று தீர்மானித்தனர் என்று அக்கோயில் கல்வெட்டு உணர்த்துகிறது.

கம்பரது காலமாகிய மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் குகைகள் எனப்பட்ட ஒருவகை மடங்கள் இருந்தன. திருமுறைகளில் வல்ல சைவத் துறவிகளைப் பாதுகாப்பதும் சிவனடியார்களை உண்பிப்பதும் அக்குகைளின் திருப்பணிகளாய் இருந்தன.

எவர் தூண்டுதலாலோ சோழ நாட்டில் மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியில் குகையிடி கலகம் ஏற்பட்டது. சைவத்தின் மீதோ, குகை அதிகாரிகள் மீதோ வெறுப்புக் கொண்ட சைவரல்லாதார் இக்கலகத்தில் ஈடுபட்டனராதல் வேண்டும்.[50]

காழ்ப்புணர்ச்சி சிறிதுமின்றி நிலவிய சைவ வைணவ சமயங்களுக்கிடையே பூசல் மலிந்தமையினை வரலாற்று ஆசிரியர் மேலும் விளக்குவர்.

சைவமும் வைணவமும் பல்லவர் காலத்தில் வளரத் தொடங்கிச் சோழர் காலத்தில் மிக உன்னத நிலையை எட்டியிருந்தன. சோழ மன்னர்கள் வேறுபாடின்றி இரு சமயக் கோயில்களுக்கும் மடங்களுக்கும் தானங்கள் வழங்கியுள்ளனர். பொதுவாக இவ்விரு சமயங்களும் நாட்டில் ஒருமைப்பாட்டுடன் பயின்று வந்தன. எனினும் அவற்றுக்கிடையே அவ்வப்போது பூசல்கள் நேர்ந்ததுண்டு. வைணவ ஆசாரியாரான இராமானுசர் தமிழகத்தைத் துறந்து வேறு இடத்திற்குச் சென்று

> **நெடுங்காலம் வாழ்ந்து வரவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. இரண்டாம் குலோத்துங்கன் தில்லைக் கோவிந்தராசப் பெருமானின் திருமேனியைப் பறித்துக் கடலில் எறிவித்தான். சைவக் கோயிலின் மகேசுரர்கள் வைணவக் கோயிலின் பட்டர்களுடன் உறவு கொண்டாடியதற்காக அவர்கள் உடைமைகளைக் கோயில் மகாசபை பறிமுதல் செய்ததாகக் கல்வெட்டு ஒன்று (கி.பி. 1160) கூறுகிறது.[51]**

*மேலே காட்டப்பெற்ற சான்றுகளால் கம்பர் காலத்திலும் அதற்குச் சற்று முன்னரும் சைவ வைணவச் சமயங்களுக்கிடையே பிணக்கு மிகுந்திருந்தமையை அறியலாம்.*

### கம்பரின் பொதுமை நோக்கு

*தாம் வாழ்ந்த காலத்தில் நிலவிய சமயப் பூசல்களில் கம்பர் வெறுப்புக் கொண்டார். ஆதலின் தாம் இயற்றிய காப்பியத்தில் சமயப் பொதுமையை வலியுறுத்த விழைந்தார்.*

### சிவனும் திருமாலும் ஒன்றே

*மேகத்தின் தன்மையைக் கூறும்போதும், 'சிவபெருமான் போல் வெண்ணிறமாக விளங்கிய மேகம், கடல்நீரை உட்கொண்டு திருமாலைப் போலத் திரும்பியது'[52] என்பர். அரியும் சிவனும் ஒன்றே என்று உணர்த்த,*

> **'மேகம் என்பது ஒன்று. அஃது உருவத்தாலும் தொழிலாலும் வேறுபாடு உடையதாக வெளித்தோன்றினும் மேகம் மேகமேயன்றோ? அத்தன்மை போலச் சிவனும் அரியும் தொழில் கருதி உருவ வேறுபாடுற்று நடிப்பவரல்லது உண்மையில் வேறுபட்டுத் தனித்திருப்பவரல்லர். அரியும் சிவனும் ஒன்றே என்று உணர்த்தக் கம்பரது விழுமிய உவமை சான்றாக நிற்கக் காண்கிறோம்'[53]**

*இதன்மூலம் கம்பர் மக்களிடையே நிலவிய சமயக் காழ்ப்பினை அகற்ற முயன்றார் என்பதை உணரலாம்.*

### பரம்பொருள் ஒன்று-பெயர் பல உள

*ஆற்றின் இயல்பினைக் கூறுவதன் வாயிலாகக் கம்பர் சமயப் பொதுமையை வலியுறுத்தினார். ஆறானது, ஏரி, குளம், வாய்க்கால் எனப்*

பல்வேறு நிலைகளில் பல்வேறு பெயர்களைப் பெறுவதுபோல இறைவனும் பல்வேறு சமயத்தினரால் பல்வேறு பெயர்களால் அழைக்கப் பெறுகிறான். இதன்மூலம் பரம்பொருள் ஒன்றே என்பதையும், பல்வேறு சமயத்தினரும் அவனைப் பல்வேறு பெயரிட்டு அழைப்பர் என்பதனையும் கம்பர் வலியுறுத்தியுள்ளார் என்பது மனங்கொள்ளத்தக்கது.

### சமயங்கள் வலியுறுத்தும் உண்மை

இராமன் உலா வருவதைக் கண்ட பெண்கள் அவனது ஒவ்வோர் உறுப்பினையும் கண்டு அதிலேயே ஈடுபாடுற்று நின்றனர். இது எவ்வாறு இருந்ததெனில், ஒவ்வொரு சமயமும் இறைவனின் ஒரு சக்தியைக் கண்டு மயங்கி நிற்கின்றதன்றி அப்பெருமானின் முழுத் தோற்றத்தையும் சக்தியையும் அறிந்தபாடில்லை [54] இதனால் பரம்பொருளைக் காணப் போந்த ஒவ்வொரு சமயத்திலும் உண்மைப் பொருள் ஒளிவிடுகின்றது எனலாம் இராமன் உறுப்புக்கள் அனைத்தையும் பார்த்து முடிந்தால் அவன் எழில் நலம் வெளிப்படுதல்போல், பல சமயங்கள் தோறும் கூறி நின்ற உண்மைத் தத்துவங்களை ஒருங்கு சேர்த்து ஆராய்ந்தால் உண்மைப் பரம்பொருளின் தத்துவத்தைக் கண்டறியலாமென்றும் கம்பர் கருதுவது கருத்தில் இருத்தத்தக்கது

### ஆழ்வார்கள் கருத்து

பல்லவர் காலத்திலும் பிற்காலச் சோழர் காலத்தின் முற்பகுதியிலும் சைவ வைணவச் சமயங்களிடையே பூசலில்லை. பரம்பொருள் ஒன்று எனவும் அவனே மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம் எனவும் ஆழ்வார்கள் வலியுறுத்தினர்

### அரனதிகனா? அரி அதிகனா?

சோழர் காலத்தின் பிற்பகுதியில் சைவ வைணவக் காழ்ப்பு மலிந்தது. எனினும் சைவத் திருமுறைகளிலும், ஆழ்வார் பாசுரங்களிலும் பயிற்சி பெற்றிருந்த கம்பர் தம் காலத்து நிலவிய சமயப் பூசல்களை வெறுத்தார். சிவனே பெரியவன், திருமாலே பெரியவன் எனக் கூறும் அறிவிலார் பரகதி சென்றடைவது அரிது[55] எனக் கூறிப் பரம்பொருள் ஒன்றே என்ற உண்மையை வலியுறுத்த முயன்றார்.

### சேக்கிழாரும் கம்பரும்

கம்பருக்கு முன் வாழ்ந்த சேக்கிழார் பெரியபுராணக் கடவுள் வாழ்த்தில் '**நிலவுலாவிய நீர்மலி வேணியன்**'[56] என்றும்

***'அம்பலத்தாடுவான்'*** என்றும் தாம் வழிபடு கடவுளாகிய சிவபெருமானை வெளிப்படையாகக் கூறிப்போந்தார். ஆயின் கம்பர், தாம் வழிபடும் இறைவனை வெளிப்படையாகச் சுட்டாது முத்தொழிலைச் செய்பவர் எவரோ அவரே தலைவர். அவர்க்கே நாங்கள் சரண்[57] எனக் குறிப்பிடுவதன் மூலம் தமது சார்பினை வெளிப்படையாகக் காட்டாது தவிர்த்துள்ளார் எனலாம். அக்காலத்து நிலவிய சைவ சமயச் செல்வாக்கினை மனத்திற் கொண்டே இவ்வாறு கூறினார் என்பது உறுதியாகிறது.

கம்பர் நூலில் சமயப் பொதுமையை வலியுறுத்துவதன் மூலம் பிற படைப்பாளிகளுக்கும், சமயச் சான்றோர்களுக்கும் தாம் எடுத்துக் காட்டாக விளங்க முயன்றுள்ளார் என்பது போதரும்.

## தொகுப்புரை

கம்பர், ஆழ்வார்கள், திருத்தக்கதேவர் ஆகியோருக்குப் பிந்தியவர். ஆதலின் அவர் கி.பி. 9, 10-ஆம் நூற்றாண்டினரல்லர்.

***'எண்ணிய சகாப்தம்'*** எனத் தொடங்கும் சிறப்புப் பாயிரப் பாடல் காலத்தால் பிந்தியது. நூலில் பின்னர்ச் சேர்க்கப்பெற்றது.

கம்பராமாயணப் பாடல், கன்னடக் கல்வெட்டு, பெரிய திருமொழியின் உரை, பிரதாப ருத்திரன் வரலாறு ஆகியவற்றால் கம்பர் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு என்பது உறுதியாகிறது.

கம்பர் காலத்து நிலவிய சமயப்பூசலே, அவர் சமயப் பொதுமைக் கருத்துக்கள் நிரம்பிய காப்பியம் படைக்கக் காரணமாயிற்றெனலாம்.

## சான்றெண் விளக்கம்

1. Arunachalam, M., The Date of Kambar, **கம்பன் விழா மலர்,** *ப.98.*
2. *ஞானசம்பந்தன், அ.ச.,* **கம்பன் புதிய பார்வை,** *ப. 28.*
3. *ராதாகிருஷ்ண பிள்ளை, எம்., கம்பர்,* **கம்பன் கவி அமுதம்,** *ப. 5.*
4. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *சுந்தர காண்டம், அ.ப.க. வெளியீடு, முன்னுரை, பக்* X - XII
5. *இராகவையங்கார், மு.,* **தெய்வப் புலவர் கம்பர்,** *ப.11.*
6. Vaiyapuri Pillai, s., The Age of Kamban, A rejoinder, **கம்பன் காவியம்,** *ப. 157.*
7. *இராசமாணிக்கனார், மா.,* **கால ஆராய்ச்சி,** *ப. 234.*
8. Nilakanta Sastri, K.A., ***The Colas,*** p. 672.
9. *வரதராசன், மு,.* **தமிழ் இலக்கிய வரலாறு,** *ப.159.*
10. **கழகத் தமிழ் அகராதி,** *ப. 43.*
11. **கம்பராமாயணம்,** *தனியன்-12.*
12. I *: 11 : 1*
13. Arunachalam, M., The Date of Kambar, **கம்பன் கழகம், வெள்ளி விழா மலர்,** *ப. 94.*
14. **கம்பராமாயணம்,** *தனியன், 12இன்மேல்.*
15. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *சுந்தர காண்டம், அ.ப.க. வெளியீடு, முன்னுரை, ப.*XII
16. IV *: 14 : 35*
17. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *சுந்தர காண்டம், அ.ப.க. வெளியீடு, முன்னுரை, ப.* XII
18. **பெரிய திருமொழி,** *5.8.1.*
19. V *: 3 : 23*
20. **திருச்சந்த விருத்தம்,** *49.*
21. **திருவாய்மொழி,** *1.5.5.*
22. II *: 2 : 41*
23. VI *: 15 : 17.*
24. *வையாபுரிப் பிள்ளை, எஸ்.,* **கம்பன் காவியம்,** *பக். 92 - 93.*
25. *இராசமாணிக்கனார், மா.,* **கால ஆராய்ச்சி,** *ப. 226.*
26. **தொல்காப்பியம்,** *பனம்பாரனார் பாயிரம்.*
27. **சிலப்பதிகாரம்,** *பதிகம் அடி 88-89.*
28. **மணிமேகலை,** *பதிகம் அடி 95 - 96.*
29. **சீவகசிந்தாமணி** *மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், ப.8.*
30. **சூளாமணி** *பாயிரம் - 4.*

31. **சிலப்பதிகாரம்,** *காதை - 3, அரங்கேற்றுகாதை.*
32. I *: 10 : 8.*
33. *செல்வகேசவராய முதலியார், தி.,* **கம்பநாடர்,** *ப.19.*
34. IV *: 14 : 35.*
35. VI *: 23 : 58*
36. The date of Kamban has been much disputed but there seems to be now little room left to doubt that he was a junior contempory of Ottakuttar and of Sekkilar or followed closely upon them. The palegraphy of the inscriptions of sadayan mentioned above and Kamban's description of Chola country as belonging to Tyagavinodan a title which recalls the surname of Kulotunga III are fairly conclusive on the point. The district echoes of the Sivaka Sindamani on Kamban's great work constitute in the light of the date assigned to the former poem, another circumstance confirming the date thus suggested for Kamban - Nilakanta Sastri, K.A., ***The Colas,*** p. 672.
37. **கம்பராமாயணம்,** *தனியன் 12-இன் மேல்.*
38. *வையாபுரிப்பிள்ளை, எஸ்.,* **கம்பன் காவியம்,** *ப.96.*
39. *இராசமாணிக்கனார், மா.,* **கால ஆராய்ச்சி,** *ப. 230.*
40. *இராசமாணிக்கனார், மா.,* **கால ஆராய்ச்சி,** *பக். 230 - 231.*
41. *மேலது, பக். 231 - 232.*
42. *சதாசிவப் பண்டாரத்தார், தி.வை.,* **பிற்காலச் சோழர் வரலாறு,** *பக்.472-473.*
43. *மேலது, ப. 477.*
44. *மேலது, பக். 567 - 568.*
45. Two inscriptions of the region of Rajendra I from Uttarmerur provide for the distribution of the food offered to the deity among Sri Vaisnavas reciting Thiruppadigam during worship and create an endowment of land for the maintenance of three persons who were to recite Thiruvoimoli regularly in the temple.
    - Nilakanta Sastri, K.A., ***The Colas,*** p. 639.
46. A progressive king like Raja Raja even made it a point to give clear expression to his great attitude to religion by including in the decoration of great Siva temples of Tanjore themes from Vaisnavism and even Buddhism - Ibid, p. 644.
47. The list of jewels donated by Kundavai Nachiar include Namams, the Vaisnava - caste mark made of gold - Ibid, p. 644.
48. *சதாசிவப் பண்டாரத்தார், தி.வை.,* **பிற்காலச் சோழர் வரலாறு,** *பக். 313-314.*
49. The leading instance of religious intolerance in the period of Chola rule is that of the persecution of Ramauja and his followers by a Chola monorch whose identity is not altogether free from doubt. We have

seen reason to believe that the persecution led to a popular revolt in which Adhirajendra, the last ruler in the male line descending from Vijayalaya lost his life. If this is a correct view of the course of events, two inferences may be drawn. First, far being part of a definite policy of the Chola monorchy to rout out Vaisnavism, the persecution of Ramanuja was only the freak of an individual ruler. Second by that the general atmosphere was so unfavourable to a narrow religious policy that the monarch who attempted it lost his life in a popular revolt and has even since been universally abhorred as the Krimi Kantha ................

..........................................................................................................

the fact remains however that from this period the saivas and vaisnavas of South India became strangers to that friendly feeling which subsisted between them in an earlier age when they waged a common war against Buddhas and Jainas - Nilakanta Sastri, K.A., ***The Colas***, p. 644.

50. *இராசமாணிக்கனார், மா.,* **கம்பர் யார்?**, *பக். 51 - 53.*
51. கே.கே. பிள்ளை, டாக்டர், **தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்**, *ப. 357.*
52. I *: 1 : 1.*
53. I *: 1 : 19.*
54. I *: 19 : 19.*
55. IV *: 13 : 24.*
56. *உலகெலா முணர்ந் தோதற்கரியவன்*
   *நிலவுலாவிய நீர்மலி வேணியன்*
   *அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்*
   *மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கு வாம்*
   - **பெரிய புராணம்,** *கடவுள் வாழ்த்து.*
57. *உலகம் யாவையும் தாமுள வாக்கலும்*
   *நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா*
   *அலகிலா விளையாட்டுடை யாரவர்*
   *தலைவர் அன்னவர்க்கே சரணாங்களே*
   - **கம்பராமயணம்,** *கடவுள் வாழ்த்து, த.சி.பா. 1.*

# இயல் 3

## கம்பராமாயணக் கடவுளர்

### முன்னுரை

கம்பர் இயற்றிய இராமாயணம் ஓர் இதிகாசக் காப்பியம். இராமன் அக்காப்பியத்தில் தலைமை மாந்தன் ஆவான். அவன் திருமாலின் அவதாரம். ஆதலின் திருமால் பற்றிய செய்திகள் இந்நூலில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இருப்பினும் வேதத் தொடர்பான பிற கடவுளர்களான சிவன், பிரமன், இந்திரன், வருணன், முருகன் ஆகியோர் பற்றியும், பெண் தெய்வங்களான திருமகள், உமை, கொற்றவை ஆகியோர் பற்றியும் குறிப்புகள் நூலில் காணப்படுகின்றன. அக்கடவுளர் இக்காப்பியத்தில் பெறும் இடத்தினை இவ்வியல் ஆராய்கிறது. இது கம்பரது கடவுட் கோட்பாட்டை மதிப்பிடத் துணைபுரியும்.

### கடவுள் தொடர்பான சொற்கள்

**கடவுள்** என்பது உலகத்தைக் கடந்த பொருள். அது மனம் மொழிகளைக் கடந்தது என்பதையும் அச்சொல் குறிக்கிறது. மேலும் மனம் மொழி மெய்களைக் கடந்த ஒரு பொருள் உண்டென்பதும் இச்சொல்லினால் பெறப்படும்.

கடவுதல் என்றால் செலுத்துதல் எனப் பொருள்படும். கடவுள் எல்லா உலகங்களையும் உயிர்களையும் செலுத்துபவன். ஆதலின், அனைத்தையும் கடந்து, எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் இயக்கும் இயல்புடைய ஒன்றைக் கடவுள் என்னும் சொல் உணர்த்துகிறது எனலாம்.

**இறைவன்** என்ற சொல் எங்கும் தங்குபவன் என்றும் தலைவன் என்றும் பொருள்படும். **முனைவன்** என்ற சொல் உண்மை உணர்த்தும் குருவாகக் கடவுளைக் குறிக்கும். **ஆண்டவன்** என்றது உயிர்களை ஆட்கொண்டு நற்கதி அளிப்பவன் என்று பொருள்படும். **ஐயன்** என்பது தலைவன், வியக்கத் தக்கவன் என்று பொருள்படும்.

என்றும் ஒருதன்மையதாய் நிலைத்த பொருள் என்று கடவுளைக் குறிப்பதற்கு **மெய்யன், மெய்ப்பொருள், மெய், உள்ளது** என்ற சொற்கள் பயன்பட்டுள்ளன. செம்மையாகிய பேரின்பப் பெருவாழ்வைத் தரும் பொருளைச் **செம்பொருள்** என்றார் வள்ளுவர். செம்பொருள் என்பது செம்மையான பொருள் என விரியும். செம்மை என்பதன் அடியாகச் சிவப்பு என்ற நிறப் பெயர் பிறந்தது போல, **சிவம்** என்ற பெயரும் தோன்றியது. இறைவன் அறிவுவடிவாதலின் **அறிவன்** எனப்பட்டான். இறைவனது பெருமையைக் குறிக்கப் **பெருமான்** என்ற சொல்லும், வன்மையைக் குறிக்கப் **பிரான்** என்ற சொல்லும் வழங்கின.[1] காலமும் கணக்கும் நீத்த காரணனைக் குறிக்கச் சொற்கள் மிகுதியாக இருப்பினும், கடவுள் என்னும் சொல்லே வழக்கில் அதிகம் பயன்பட்டு வருகின்றது. ஒவ்வொரு சமயத்தினரும் ஒரு கடவுளை முழுமுதற் கடவுளாகக் கொண்டுள்ளனர்.

## திருமால்

வைணவர்கள் திருமாலைப் பரம்பொருள் என்பர். மும்மூர்த்திகளில் காத்தல் தொழிலைத் திருமால் மேற்கொண்டுள்ளார். மால் என்னும் சொல் கருமை நிறம் எனப் பொருள்படும்.[2] கருமை நிறமுடைய கடவுள் திருமால். விஷ்ணு, நாராயணன், வாசுதேவன், மாயவன், மாயோன் என்பன திருமாலைக் குறிக்கும் வேறு பெயர்கள்.

இருக்கு வேதத்தில் விஷ்ணு என்ற சொல் பல இடங்களில் பயின்றுள்ளது. விஷ்ணு சூரிய பகவானின் உருவமாகக் கூறப்பட்டுள்ளார். அவர் பிறக்கப்போகும் குழந்தைக்குப் பாதுகாவலன் என்றும், மருத்து என்பவன் விஷ்ணுவின் அடையாளச் சின்னமாக உள்ளான் என்றும், விஷ்ணுவே இந்திரன் என்றும், வேள்விக்குத் தலைவன் என்றும், இந்திரனுக்கு நண்பன் என்றும் இருக்கு வேத மந்திரங்கள் தெரிவிக்கின்றன என்பர்[3].

இந்தியாவில் திருமால் வழிபாட்டின் தோற்றம், வளர்ச்சி பற்றிக் கலைக்களஞ்சியம் பின்வருமாறு குறிப்பிடுகிறது :

> **"சாதாரணமாக எல்லா இந்துக்களும் பிரமன், விஷ்ணு, சிவன் என்கிற மும்மூர்த்திகளைப் பிரதானக் கடவுளர்களாகவும் அவர்களை முறையே ஆக்கல், அளித்தல், அழித்தல் தொழில்களைச் செய்பவராகவும் கருதுகின்றனர். ஆனால் விஷ்ணுவை முதன் முதலாகச் சொல்லும் வேதங்களில், விஷ்ணு முக்கியமான ஆதித்ய**

> தேவதையாகவோ அல்லது இந்திரன் அக்கினி வருணன் போன்ற முதல் வரிசைத் தெய்வமாகவோ கருதப்படவில்லை. வேதங்களை ஒட்டி எழுந்த பிரமாண உபநிஷதக் காலத்தில் விஷ்ணு மும்மூர்த்திகளில் ஒருவராக ஆயினர். இப்படிப் படிப்படியாக உயர்த்தப்பட்டதற்குக் காரணம் விஷ்ணுவும் வாசுதேவ கிருஷ்ணனும் ஒருவராகக் கருதப்பட்டமையே. பக்தி அல்லது பாகவத மதத்திற்கு முதற்கடவுள் வாசுதேவ கிருஷ்ணனே. வேதங்களையே பிரதானமாகக் கருதியவர்கள் முதலில் பாகவத மதத்தை வெறுத்தார்கள். பின் பௌத்த ஜைன மதங்களால் ஏற்பட்ட விளைவுகளைப் பார்த்து நடுநடுங்கி வாசுதேவ கிருஷ்ணனையும் விஷ்ணுவையும் ஒரே அமிசத்தவராகவே கொள்ளத் துணிந்தனர். அதன் விளைவாலே கி.பி. 100இல் வாசுதேவ கிருஷ்ணன், விஷ்ணு, நாராயணன் என்ற இம்மூன்று பெயர்களும் ஒரே கடவுளைக் குறிப்பனவாகக் கொள்ளப்பட்டன. ஆதலால் தான் பகவத் கீதையில் வாசுதேவனையும், விஷ்ணுவையும் ஒருவராகக் குறித்துள்ளனர். நாளடைவில் பாகவத மதமே விஷ்ணுவை முதற்கடவுளாகக் கொண்ட வைணவ மதமாக மாறிற்று."[4]

இதனால், வேதங்களில் விஷ்ணுவுக்கு முதன்மை தரப்படவில்லை என்பதையும், இதிகாச புராண காலத்தில் தான் விஷ்ணு தற்போதுள்ள தனக்குரிய இடத்தைப் பெற்றானென்பதையும் அறியலாம்.

> "தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் திருமாலை முல்லை நிலக் கடவுளாக - மாயோன் மேய காடுறை உலகம் என்று கூறுகிறது. இதனை இருக்கு வேதம் கூறும் ஆநிரை காப்பவன் விஷ்ணு என்ற கருத்துடன் ஒப்பிட்டுக் காண வேண்டும். திராவிடர்களைப் போன்று விஷ்ணுவின் வண்ணம் கருமையாகும். திருமாலின் அவதாரங்களில் ஒன்றான கண்ணன் கருமை நிறம் உடையவன். முல்லை நிலத்தில் வாழும் ஆயர்களின் தலைவன். ஆயர்கள் அல்லாத அந்தணர்களுக்கு முற்றிலும் எதிரான விருஷ்ணி என்ற இனக்குழுவைச் சார்ந்தவன் என்று கூறப்படுகிறது"[5]

என்பர். இதனால், திராவிடர்களின் கடவுளான மாயோன் ஆரியக் கடவுளல்லன். ஆரியர்கள் இங்கு வந்தபோது இங்கு வாழ்ந்த திராவிட இன மக்களுடன் அணுக்க உறவு பூண்டு வாழத் தலைப்பட்டனர். அவர்கள் வழிபட்டு வந்த கடவுளர்களைத் தங்கள் நூல்களில் இடம்பெறச் செய்தனர். ஆதலின் திருமால் பற்றிய செய்திகள் அவர்களின் நூல்களில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன எனலாம்.

**தொல்காப்பியம்**

திருமால் முல்லை நிலக் கடவுள் எனத் தொல்காப்பியம் கூறும். புறத்திணை இயலில் தொல்காப்பியர்,

> **'மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்**
> **தாவா விழுப்புகழ் பூவை நிலை'**[6]

என்பர். இதன் பொருளாவது : மாயவனுடைய காத்தல் புகழை மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவை நிலை என்பதாகும். இதனால் மன்னர்களைத் திருமாலின் அமிசமாகக் கருதுவது தொல்காப்பியர் காலத்திலேயே வழக்கிலிருந்தமை போதரும்.

**திருக்குறள்**

திருக்குறளில் வாமன அவதாரம் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. திருமால் திரிவிக்கிரமனாக மூவுலகை ஈரடியால் அளந்தான் என்பதை,

> **'மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்**
> **தாஅய தெல்லாம் ஒருங்கு'**[7]

என்னும் குறட்பா தெரிவிக்கிறது. தி ருக்குறளில் இடம்பெறும் **'தாமரைக் கண்ணான் உலகு'** என்பதைச் செங்கண் மால் உலகு என்றார் உரையாசிரியர் பரிமேலழகர்.[9]

**சங்க இலக்கியங்கள் - பதிற்றுப்பத்து**

உண்ணா நோன்பு மேற்கொண்டோர், திருமகள் மார்பிலமர்ந்த சக்கரப் படையேந்திய துழாய் மாலையணிந்த செல்வனாகிய திருமாலின் சேவடி பரவிய செய்தியைக் கீழ்வரும் பதிற்றுப்பத்துப் பாடலால் அறியலாம்.

> **'திருஞெமரகலத்து**
> **கண்பொருதிகிரி கமழ் குரற் றுழாய்**
> **அலங்கற் செல்வன் சேவடிபரவி'**[10]

**புறநானூறு**

கழுவப் பெற்ற நீலமணி போன்ற மேனியையுடைய கருடக் கொடி ஏந்திய வெற்றியினையுடைய திருமாலைப் புறநானூறு குறிப்பிடுகிறது.[11]

சூரியனை மறைத்த அரக்கர்களுடன் போர் செய்து திருமால் பெற்ற வெற்றியைப் புறநானூறு,

> **'அணங்குடை அவுணர் கணங் கொண்டொளித்தென**
> **சேண்விளக்கு சிறப்பின் ஞாயிறு காணாது**
> **இருள்கண் கெடுத்த பரிதி ஞாலத்து**
> **இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்**
> **அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு'**[12]

எனப் பாடுகிறது. இந்த நிகழ்ச்சி வடமொழி நூல்களில் காணப்படவில்லை எனலாம்.

**பரிபாடல்**

திருமால் பற்றிய செய்திகள் மிகுதியாக இடம்பெறும் நூல் பரிபாடல் ஆகும். இந்நூலில் திருமால் பற்றிய ஏழு பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

திருமால் தாமரைக் கண்ணன், காயாம் பூவண்ணன், திருமகள் அமர்ந்த மார்பினன். மார்பில் ஒளிவிடும் பூணினன், பொன்னாடையினன், கருடக் கொடியினன் எனப் பரிபாடல் சித்திரிக்கிறது.[13]

திருமாலின் திருவடி,

> **'மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி'**[14]

அவனே வீடு பேறு நல்குபவன். இதனை,

> **'நாறிணர்த் துழாயோன் நல்கினல்லதை**
> **ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்'**[15]

என்பதால் அறியலாம்.

அவனது பல்வேறு அவதாரங்களை,

> **'பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோரிலையே'**[16]

என்றார் கடுவனிள வெயினனார்.

**கலித்தொகை**

வெள்ளை நிறக் காளையின் மீது பாய்ந்து அடக்க முற்பட்ட வீரன் ஒருவனைக் கருமைநிறக் காளையொன்று குத்தி அக்காளையை விடுவிக்க முயன்றது. இது வெண்மதியைப் பற்றியிருந்த அரவிலிருந்து மதியினை விடுவிக்க முயன்ற நீல நிறமுடைய திருமால் போன்றிருந்தது. இதனை,

> **'பான்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்**
> **நீனிற வண்ணனும் போன்ம்'[17]**

என்னும் கலித்தொகைப் பாடல் உணர்த்துகிறது.

**திருமுருகாற்றுப்படை**

திருமால் கருடக் கொடி உடையவன் என்பதை,

> **'பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறை**
> **புள்ளணி நீள் கொடிச் செல்வனும்'[18]**

என்றார் நக்கீரர்.

**பெரும்பாணாற்றுப்படை**

காவிரிப்பூம்பட்டினத்தின் அரண்மனையும் அதைச் சுற்றியிருந்த மதிலும், திருமாலின் உந்தித் தாமரையில் விளங்கும் பிரமனைப் பயந்த தாமரையின் பொகுட்டும் இதழ்களும் போல் தோற்றமளித்ததை,

> **நீனிற உருவின் நெடியோன் கொப்பூழ்**
> **நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்**
> **தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றி[19]**

எனப் பெரும்பாணாற்றுப்படை உணர்த்தும்.

**முல்லைப்பாட்டு**

சக்கரத்தோடு வலம்புரிச் சங்கினைத் தாங்கிய கைகளையும், திருமகள் அமர்ந்த மார்பினையும் உடையவன் திருமால் என்பதை முல்லைப்பாட்டு பின்வருமாறு குறிப்பிடும் :

> **'நேமியொடு**
> **வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை'[20]**

**மதுரைக்காஞ்சி**

திருமால் அசுரர்களை வென்ற செய்தியை,

**'கணங்கொள் அவுணர்க்கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்'**[21]

என மதுரைக்காஞ்சி தெரிவிக்கும்.

இவற்றால் திருமால் பற்றிய பல்வேறு செய்திகள் சங்க நூல்களில் இடம் பெற்றுள்ளன என்பதும், அக்கடவுள் தொன்றுதொட்டு தமிழ் மக்களால் வழிபடப்பட்டு வருபவன் என்பதும் அறியமுடிகின்றது.

**காப்பியங்கள்**

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள் திருமால் செல்வாக்கு மிக்க கடவுளாகத் திகழ்ந்தமையைத் தெரிவிக்கின்றன.

**சிலப்பதிகாரம்**

பூம்புகாரில் இருந்த கோயில்களை

**'நீலமேனி நெடியோன் கோயில்'**[22]

எனவும்,

**'அணிகிளர் அரவின் அறிதுயிலமர்ந்த**
**மணிவண்ணன் கோட்டம்'**[23]

எனவும் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

மாங்காட்டு மறையோன் திருவரங்கம்[24], திருவேங்கடம்[25] ஆகிய கோயில்களிலுள்ள திருமாலைச் சிறப்பாக வருணிக்கிறான்.

சிலப்பதிகாரத்தின் ஆய்ச்சியர் குரவை இளங்கோவடிகள் ஒரு திருமாலடியார் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்குமளவு மாயவன் புகழ்பாடுகிறது.[26] மேலும், அவன் தோற்றப் பொலிவினை,

**'பெரியவனை மாயவனைப் பேருலகமெல்லாம்**
**விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்**
**திருவடியும் கையும் திருவாயும் செய்ய**
**கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே**

**கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே'**[27]

எனப் பாடினார்.

பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவன் நாராயணனே என்பதை,

**'பஞ்சவர்க்குத் தூது நடந்தானை ஏத்தாத நாவென்னநாவே**
**நாராயணா வென்னா நாவென்ன நாவே'**[28]

எனவும் குறிப்பிட்டார்.

இங்குக் கண்ணனை நாராயணனாகக் குறிப்பிட்டாராதலின், தமிழிலக்கியத்தில் முதன்முதலாக நாராயணன் என்னும் பெயர் சிலம்பில் இடம் பெறுவது மனங்கொள்ளத்தக்கது.

**மணிமேகலை**

மணிமேகலை விஷ்ணு புராணத்தைக் கடல்வண்ணன் புராணம் என்கிறது.

**'காதல் கொண்டு கடல்வண்ணன் புராணம்**
**ஓதின் நாரணன் காப்பென்று உரைத்தான்'**[29]

என்பது வைணவத் தத்துவவாதி பற்றி மணிமேகலை கூறியுள்ளதாகும்.

சிலப்பதிகாரம் மற்றும் மணிமேகலை வாயிலாகத் தமிழகத்தில் நிலவிய திருமால் வழிபாடு பற்றியும் திருவரங்கம், திருவேங்கடம் ஆகிய திருத்தலங்கள் பற்றியும், இராமன் கண்ணன் ஆகியோரின் அவதாரத் தன்மைகள் பற்றியும் அறியமுடிகிறது.

**ஆழ்வார் பாடல்கள்**

கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கும், கி.பி.10-ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலம் பக்தி இயக்கக் காலமாகும். இக்காலத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்திப் பயிர் வளர்த்தனர். ஆழ்வார்கள் திருமாலையும், திருமாலுறையும் தலங்களையும், அவதாரங்களையும் பாடிப் பரவினர். அவர்கள் திருமாலே பரம்பொருள் என்னும் கோட்பாட்டினர் எனலாம்

**மேனியழகு**

மேகம் கரிய வண்ணமுடையது. மழையினைப் பொழிந்து உயிர்களை வாழச் செய்வது. திருமாலும் மேகவண்ணன்; உயிர்களின் மீது

கருணை மழை பொழியும் கருணாமூர்த்தி. கடல் நீல நிறமுடையது; அளவில் பெரியது; பல்வேறு வளங்களைத் தன்னகத்தே கொண்டது. இறைவன் அருட்கடல். அவன் ஆற்றல் எல்லையற்றது. தோகை விரித்தாடும் மயில் வண்ணத்தாலும் வடிவத்தாலும் அனைவரையும் ஈர்ப்பது. மரகதம் நவமணிகளுள் ஒன்று. இவற்றையெல்லாம் திருமாலின் அழகிய திருமேனிக்கு ஆழ்வார்கள் ஒப்பிட்டனர்.

> **'குன்றாடு கொழுமுகில் போல் குவளைகள் போல் குரைகடல்போல்**
> **நின்றாடு கணமயில் போல் நிறமுடைய நெடுமால்'[30]**

என்றார் பெரியாழ்வார்.

திருமாலின் கார்நிற மேனியழகிலும், தாமரை போன்ற கண், வாய், கை, அடி ஆகியவற்றின் அழகிலும் ஈடுபட்ட திருமங்கை ஆழ்வார்,

> **'கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்**
> **கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்'[31]**

என்றார்.

**ஆலிலை துயின்றோன்**

அரவணை துயிலும் அண்ணல் உலகைப் பிரளயம் சூழ்கடித்தபோது அனைத்தையும் மணிவயிறடக்கி ஆலிலையில் துயின்றதாக ஆழ்வார்கள் பாடுவர்.

பெரியாழ்வார் :

> **'ஆலத் திலையான் அரவணை மேலான்**
> **நீலக் கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்'[32]**

திருமழிசை ஆழ்வார் :

> **'பண்டுமின்று மேலுமாய் ஓர்பாலனாகி ஞாலமேழும்**
> **உண்டு மண்டியாலிலைத் துயின்ற ஆதிதேவனே'[33]**

திருமாலின் பரத்துவத்தில் ஈடுபட்ட ஆழ்வார்கள், இறைவன், உலகம், உயிர் ஆகிய முப்பொருள் உண்மையினைத் தம் பாடல்களில் வலியுறுத்துவர்.

**கம்பரும் திருமாலும்**

கம்பரது இராமாயணத்தில் திருமால் பெருமை பரக்கப்

பேசப்படுகிறது. காப்பியத்தின் இடையே ஆங்காங்கே தம் திருமால் பக்தியையும் அவர் வெளிப்படுத்தியுள்ளார்.

### திருமாலும் அயோத்தியும்

அயோத்தி மாநகரம் அழகாகக் காட்சியளிக்கிறது. **'அது திருமகள் விரும்பியமரும் தாமரை மலரா? மாயோன் மார்பிலணியும் அணிகள் வைத்த பொற்பெட்டியா? வானோர் உலகின் மேலான வீட்டுலகா? ஊழிக்காலத் திறுதியில் உலகமும் உயிர்களும் தங்கும் திருமாலின் அழகிய வயிறா?'**[34] என்பார். இங்குக் கம்பர் குறிப்பிட்டவையனைத்தும் திருமால் தொடர்பானவையே எனலாம்.

### கம்பரின் திருமால் பக்தி

தேவர்கள் திருமாலைத் துதிக்க அவர் காட்சி கொடுத்தார். திருமாலடியார்கள் கருடனைக் கருடாழ்வார் என்பர். கம்பர் கருடனையும், கருடன் மீதமர்ந்த பெருமானையும் **'என்னையாளுடையவன் தோணின் றெம்பிரான்'**[35] என்றார். இதில் **'என்னையாளுடையவன்'** என்பது கருடனையும் **'எம்பிரான்'** என்பது திருமாலையும் குறிப்பதாகும். மேலும், திருமாலை,

**'என்னை ஆளுடைய ஐயன்'**[36]

எனத் தம் திருமால் பக்தி புலப்படுமாறு கூறியுள்ளார்.

### திருமால் பெருமை

செங்கண்மால் நான்மறைக்கும் தேவர் அறிவிற்கும் பிறர்க்கும் எட்டாதவன்.[37]

அவன் அமலமூர்த்தி. அவன் பெயரை உச்சரித்தால் பற்றுக்கள் ஒழியும்.[38]

அவனே பூதநாயகன்; புவிமகள் நாயகன்; குற்றமற்ற வேதநாயகன். அவன் உலகம் யாவையும் படைத்துக் காத்து உண்டு உமிழ்பவன்.[39]

கோசலையிடம் பரதன் சூளுரைக்கையில், **'யான் கைகேயியின் சூழ்ச்சியை முன்பே அறிந்திருந்தேனாயின் திருமாலைத் தலைவன் அல்லன் என்று அழைத்தவன் அடையும் இழிநிலையை அடைவேனாக'**[40] என்றான். இதனால் திருமால் அனைவர்க்கும் தலைவன் என்பது கம்பரின் கருத்து ஆயினமை மனங்கொள்ளத்தக்கது.

எங்கும் இருள் பரவி இருந்தது. இதை **'அனைத்தும் நாராயணன் சொரூபம் என்றுணராத அறிவீனர் மனம்போல இருள் பரவி இருந்தது'**[41] என்றார்

**பாற்கடல் கடைந்தது**

தேவர்கள் பாற்கடல் கடைந்த வரலாற்றையும், திருமால் அதற்கு உதவியதையும் கம்பர் விரித்துரைப்பார். ஒரு விண்ணுலக மங்கை தான் திருமகளிடமிருந்து பெற்ற மாலையைத் துருவாச முனிவனுக்குத் தந்தாள். அதை அவன் இந்திரனுக்குத் தர, அவன் தோட்டியால் அதை வாங்கித் தன் யானையின் பிடரியில் வைத்தான். அது அதனைக் கீழே தள்ளிக் காலால் துகைத்தது. துருவாசன் சினங்கொண்டு **'உன் எல்லா வளங்களும் உவரிபுக் கொளிப்ப நீ துயருறுக'**[42] எனச் சபித்தான். இந்திரன் பொருள்கள் யாவும் கடலிற் புகுந்தன.

பிரமன் முதலான தேவர்கள் திருமாலைச் சரணடைந்தனர். திருமால் அருள்புரிய முன்வந்தான். இதைக் கம்பர்,

> **'தஞ்சமில்லை நின் சரணமே சரணெனச் சலியாது**
> **அஞ்சல் அஞ்சல் என்றுரைத்தனன் உலகெலாம் அளந்தோன்'**[43]

என்பர்.

திருப்பாற் கடலைக் கடையுமாறு திருமால் கட்டளையிடத் தேவர்கள் அச்செயலில் ஈடுபட்டனர். தானே ஆமை வடிவெடுத்தும், தன் ஆயிரம் கைகளைப் பரப்பியும் அவன் இச்செயலுக்கு உதவப் பாற்கடல் புகுந்த பொருட்கள் யாவும் வெளிப்பட்டன.[44]

பாற்கடலிலிருந்து அமிழ்தம் வெளிப்படத் தேவர்களும் அசுரர்களும் தம்முட் பொருது கலாம் விளைத்தனர். திருமால் மோகினி வடிவமெடுத்து அசுரர்களை மயக்கி அப்பால் இழுத்துச் செல்லத் தேவர்கள் அமிழ்தம் துய்த்தனர்.[45] பாற்கடலிலிருந்து வெளிப்பட்ட பொருள்களைப் பங்கிடும் பொறுப்பைத் தானே ஏற்றான்.[46]

கம்பர் இந்நிகழ்ச்சியை விரித்துரைத்ததன்மூலம், தன்னைச் சரணடைந்தோரைக் காத்தலாகிய திருமாலின் பண்பினையும், தலைமைப் பொறுப்பேற்றுச்செயல்புரியும்ஆற்றலினையும்வலியுறுத்தவிழைகிறார்எனலாம்.

**திருமாலும் கங்கையும்**

கங்கை தோன்றிய வரலாறு விசுவாமித்திரன் வாயிலாக விரித்துரைக்கப்படுகிறது.

திருமால் உலகளந்த காலத்தில், திருவிக்கிரமன் திருவடி, மேலே சத்தியலோகம் வரை சென்றது. அங்கிருந்த பிரமன் திருமாலின் திருவடியைத் தன் கைக் கமண்டல நீரினால் கழுவி விளக்க, அத்திருப்பாதத்திலிருந்து வெளிப்பட்ட நீரே கங்கையாகப் பெருகியது. இதனைக் கம்பர்,

> **'அண்டகோளகைப் புறத்ததா அகிலமன்றளந்த**
> **புண்டரீகமென் பதத்திடைப் பிறந்து பூமகனார்**
> **கொண்ட தீர்த்தமா அரன்கொளப் பகிரதன் கொணர**
> **மண்டலத்து வந்தது இம்மாநதி மைந்த'[47]**

என விசுவாமித்திரர் வாக்கால் வெளியிடுவார். இதையே பெரியாழ்வாரும்,

> **'சதுமுகன்கையில் சதுப்புகன்றாளில் சங்கரன் சடையினிற்றங்கி**
> **கதிர் முகமணி கொண்டு இழிபுனற் கங்கை'[48]**

எனக் குறிப்பிடுவார்.

கங் கை திருமாலின் திருவடியில் தோன்றியது என்பதை இதன்மூலம் கம்பர் தெரிவிப்பார்.

## திருமால் வழிபாடு

இராமன், கோசலை, வசிட்ட முனிவன் ஆகியோர் திருமாலை வழிபட்ட செய்தி இந்நூலில் இடம்பெற்றுள்ளது. அரங்கப் பெருமான் இட்சுவாகு குலத்தினரால் வழிபடப்பெற்றவன். அவ் அர்ச்சைநிலைத் திருமாலையே அவர்கள் வழிபட்டனர்.

இராமனுக்கு முடிசூட்டு நிகழவிருப்பது அறிந்த கோசலை திருமால் கோயிலுக்குச் சென்று வழிபட்டதை,

> **'மேவிமென் மலராள் நிலமாதெனும்**
> **தேவிமாரொடும் தேவர்கள் யாவர்க்கும்**
> **ஆவியும் அறிவும் முதலாயவன்**
> **வாவிமாமலர்ப் பாதம் வணங்கினாள்'[49]**

என்பர்.

கோசலை நாராயணனின் அன்றலர்ந்த மலர் போன்ற திருவடிகளை வணங்கிக் குற்றமில்லாத வளம் நிறைந்த மாளிகையுள் இருக்கும் அக்கோயிலை வலங்கொண்டு பின்னர் நோன்புகள் தொடங்கினாள்.[50]

முடி புனையவிருக்கும் இராமனுக்கு வசிட்டன் அறிவுரை சொன்னான். பின்னர் ஆதிசேடனில் அறிதுயிலமர்ந்த அரங்கநாதனைச் சேவித்தான்.[51]

இராமன் திருமணத்திற்கு முன்னர்த் திருமாலை வணங்கினான். இதை,

> **'கோதறு தவத்துத் தன் குலத்துளோர் தொழும்**
> **ஆதியஞ் சோதியை அடிவணங்கினான்'**[52]

என்பதால் அறியலாம்.

தாம் இட்சுவாகு வழி வந்தவர்கள் என்பதற்கேற்ப கோசலை, இராமன் முதலியோர் நிகழ்த்திய வழிபாடுகள் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன.

## திருமண் காப்பு

சைவர்கள் நெற்றியில் நீறணிவர். திருமாலடியார்கள் தரித்துக் கொள்வது திருமண் காப்பாகும். திருநீற்றின் சிறப்பினை ஞானசம்பந்தர் திருவாலவாய்த் திருநீற்றுப் பதிகத்தில் விளக்கியுள்ளார்.[53]

நம்மாழ்வார் திருவாய்மொழியில்,

> **'நெற்றியுள் நின்றென்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள் சூடி**
> **கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத் தொழுவார்**
> **ஒற்றைப் பிறையணிந் தானும் நான்முகனும் இந்திரனும்**
> **மற்றையமர ருமெல்லாம் வந்தெனது உச்சியுளானே'**[54]

எனப்பாடுவர்.

இதில் **'நெற்றியுள் நின்றெனையாளும் நீள்மலர்ப் பாதங்கள்'** என்பதற்கு **'என்னுடை நெற்றியில் ஊர்த்வ புண்ட்ர ரூபமாக (நாமம்) இருந்துகொண்டு என்னை ஸ்ரீவைஷ்ணவி திலகனாக ஆக்கிய திருவடிமலர்கள்'**[55] என உரை எழுதுவர். இதனால் திருமால் வழிபாட்டினர் தம் நெற்றியில் அணிந்துகொள்ளும் நாமம் திருமாலின் திருப்பாதங்களேயாம் என்பது போதரும்.

இராமன் ஒப்பனை செய்துகொள்வதன் முன் திருமண் காப்புத் தரித்தான். பிரமன் மற்றும் அவனால் படைக்கப்பட்ட உயர்திணை, அஃறிணைப் பொருள்களைப் பற்றிநின்ற அவிச்சையாகிய இருளைப் போக்கி, மீண்டு வருதலில்லாத முத்தியாகிய குறிக்கோளை அடையச் செய்திடும் தன் திருநாமத்தைத் தானே சாத்திக்கொண்டான். இதை,

**'என்று நான்முகன் முதல் யாரும் யாவையும்**
**நின்ற பேரிருளினை நீக்கி நீணெறி**
**சென்று மீளாக்குறி சேரச் சேர்த்திடு**
**தன்றிரு நாமத்தைத் தானும் சாத்தியே'[56]**

என்னும் கம்பர் வாக்கால் அறியலாம்.

மேல்நோக்கி உயர்ந்து செல்லுந் திருமண் காப்பு எல்லாப் பதவிகளிலும் மேம்பட்டு உயர்ந்துள்ள முக்தியைத் தான் கொடுத்தற்கு அறிகுறியாகுமென்பர்.[57] கம்பர், **'அனுமன் நெற்றியில் அணிந்திருந்த ஆழியான் நாமம் நெய் சுடர்விளக்குப் போலத் தோற்றமளித்தது'[58]** என்பார்.

## திவ்விய தேசங்கள்

திருவரங்கம், திருவேங்கடம் ஆகியவை 108 வைணவத் தலங்களுள் குறிப்பிடத்தக்கவையாம். கம்பர் திருவரங்கத்தைப் பற்றி ஒரு பாடலும், திருவேங்கடச் சிறப்பைப் பற்றி எட்டுப்பாடல்களும் பாடியுள்ளார்.

இறைவன் திருக்கோயில்களில் எழுந்தருளியிருப்பதைத் திருமாலின் ஐந்து நிலைகளுள் அர்ச்சை என்பர்.

விசுவாமித்திரன், இராமன் மூதாதையாகிய இட்சுவாகு மன்னன் பிரமனிடமிருந்து ஆதிசேடனைப் பாயலாகக் கொண்ட திருமால் மூர்த்தத்தைப் பெற்றான். அம்மூர்த்தமே அனைவராலும் வழிபடப்படும் திருவரங்கமாகும் என்பதை,

**'பிணியரங்க வினையகலப் பெருங்காலம் தவம்பேணி**
**மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்**
**பணியரங்கப் பெரும்பாயல் பரஞ்சுடரை யாங்காண**
**அணியரங்கந் தந்தானை அறியாதார் அறியாதார்'[59]**

எனத் தெரிவித்தான்.

இட்சுவாகு மன்னன் வழித் தோன்றலாகிய இராமன், வீடணனிடம் கொடுத்த அரங்க மூர்த்தமே திருவரங்கத்திலுள்ள அரங்கப்பெருமான் திருக்கோயிலாகும். வீடணன் அரங்கனைத் திருவரங்கத்தில் விட்டுச் சென்றானாதலின் அவன் இலங்கை நோக்கி அறிதுயில் கொள்கிறான். இதனைப் பெரியாழ்வார்,

**'மன்னுடைய வீடணற்கா மதிலிலங்கை திசைநோக்கி மலர்க்கண் வைத்த**
**என்னுடைய திருவரங்கன்'**[60]

எனப் பாடுவார்.

**திருவேங்கடம்**

தென்திசை நோக்கிச் செல்லும் வானரவீரர்க்குச் சுக்கிரீவன் வழி சொன்னான். அப்போது வேங்கடம் பற்றிக் கூறினான்.

**'வேங்கட மலை வடமொழிக்கும் தமிழுக்கும் எல்லையாகும்; நான்கு வேதங்களும் மற்ற நூல்களும் சொன்ன பொருட்கெல்லாம் முடிவான பொருளாகிய திருமாலைத் தன்னிடத்தில் கொண்டுள்ளது; நல்ல அறச் செயல்களுக்கு வரம்பானது; வாய்மை பொலிந்து நிற்றல்போல் பொலிந்து நிற்பது. தேனடைகள் சூழ்ந்த குளிர்ந்த தாழ்வரைகள் உடையது; உயர்ந்து விளங்குவது.'**[61]

வேங்கட மலையிலுள்ள ஞானியர் வினையின் நீங்கிய விளங்கிய அறிவினர். இந்திரச் செல்வத்தையும் வறுமையையும் சமமாக நோக்குபவர்; அரிய வினையின் பகைவர்; அவர்களின் திருவடிகள் வணங்கற்பாலன.[62]

வேங்கடத்தில் மறையோர் இறங்கி மூழ்குகின்ற துறைகளையுடைய ஆறுகள் உள. முனிவர்களின் ஆசிரமங்களும், இரத்தினங்களையுடைய தாழ்வரைகளும் அங்கு உள. தேவமாதர்கள் வாசிக்கின்ற இன்னிசை கேட்டு யானைக் கன்றுகளும், புலிக் குட்டிகளும் பகை நீங்கி ஓரிடத்தில் உறங்குகின்றன.[63]

'திருவேங்கட மலையில் புக்க மாத்திரத்து இருவினைத் தொல்லைகளும் ஒழிந்து முக்தி அடைவீர்கள். அவ்வாறு முக்தி அடைந்துவிட்டால், இராமகாரியம் ஈடேறாதாதலின் அங்குச் செல்ல வேண்டாம்' என்றான் சுக்கிரீவன்.

**'கோடுறுமால் வரையதனைக் குறுகுதிரேல் உம்நெடிய கொடுமை நீங்கி**
**வீடுறுதிர் ஆதலினால் விலங்குதிர்'**[64]

என்பது சுக்கிரீவன் கூற்று.

வானர வீரர்கள் திருவேங்கட மலை வழியாகச் சென்றதை மீண்டும் நான்கு பாடல்களில் ஆறுசெல் படலத்தில் கவி வருணிக்கிறார்.

**முனிவர்களும் தேவர்களும் நீராடுவதற்குரிய நீரருவிகளினாலாகிய பல புண்ணிய தீர்த்தங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது வேங்கடமலை.**[65]

**தேவர்கள் அம்மலைமீது வந்து ஐம்பொறிகளையடக்குகிக் காமம் வெகுளி விடுத்துப் பல தவங்களைச் செய்வர்.**[66]

சீனிவாசன் தன்னிடத்தில் எழுந்தருளியிருக்கும் பெருஞ்சிறப்பு வாய்ந்த திருவேங்கட மலையிலுள்ள விலங்குகளும் வீட்டுலகிற் புகுகின்றன. அங்கு மெய்ந்நெறிக்கண் நிலைத்த அறிவுடையார்க்கு வீடுறுதல் தவறுமோ?

**'வலங்கொள் நேமி மழைநிற வானவன்**
**அலங்கு தாளிணை தாங்கிய அம்மலை**
**விலங்கும் வீடுறுகின்றன மெய்ந்நெறிப்**
**புலன்கொள் வார்கட் கனையது பொய்க்குமோ'**[67]

எனத் திருவேங்கடம் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

வேங்கடத்தில் தவமியற்றும் செல்வரை நெருங்கி மெய்ந்நெறி நாயகனாகிய திருமாலை நாளும் வணங்கிய நற்றவர் பாதங்களை வானரவீரர் தலையில் சூடினர்.

திருவேங்கடம் பற்றிய செய்திகள் வான்மீகத்தில் இல்லை. கம்பர் அத்தலத்தின் மீது தாம் கொண்ட ஈடுபாட்டின் காரணமாகப் புனைந்தது எனலாம்.

### வைகுந்தம்

இறையருள் பெற்றோர் பிறவியறுத்து வீடுபேறடைவர். இப்பேற்றினை வைகுந்த பதவி என வைணவரும், கைலாச பதவி எனச் சைவரும் குறிப்பிடுவர். துறக்கத்தை அளிப்பவன் திருமால் என்பது பரிபாடல். நம்மாழ்வார் திருவாய்மொழியில் '**நலமந்த மில்லதோர் நாடு**'[68] என வைகுந்தத்தைக் குறிப்பிடுகிறார்.

வனத்தில் இலக்குவன் அமைத்த பர்ணசாலை, '**மாய நீங்கிய சிந்தனை, மாமறை, தூய பாற்கடல், வைகுந்தம்**' ஆகியவற்றிற்கு ஒப்பாக விளங்கியது.[70]

தசரதன் இராமனின் தந்தையாதலின் விண்டுவின் உலகிடை விளங்கினான் என்றான் வசிட்டன். இங்கு வைகுந்தம் '**விண்டுவின் உலகு**' எனச் சுட்டப்படுகிறது.[71]

இறக்கும் சமயம் இராமன் பாதங்களைப் பார்த்த சடாயு, '**நெடிய பூதங்கள் விளியு நாளும் போக்கிலா உலகம் புக்கான்**'[72] என்றார். '**சடாயு மீளா உலகமாகிய ஸ்ரீவைகுண்டத்தை அடைந்தான் என்க**' என்பர் உரையாசிரியர்.[73]

இந்திரன் சரபங்கனைச் சத்தியலோகம் அழைத்தான். முனிவன் சத்தியலோகம் செல்ல மறுத்துத் தான் வீட்டுலகம் செல்ல விரும்புவதாகத் தெரிவித்தான். இங்கு வீட்டுலகம் இத்தகையதென்பதைச் சரபங்கன்,

> **'சிறுகாலையிலா நிலையோ திரியா**
> **குறுகா நெடுகா குணம் வேறுபடா**
> **உறுகால் கிளர் பூதமெலாம் உகினும்**
> **மறுகா நெறி எய்துவன் வானுடையாய்'**[74]

என்றான்.

இப்பாடலுக்குரிய விளக்கம் வருமாறு:

> **"இது ஸ்ரீவைகுண்ட பதவியை இன்னவாறெனக் கூறுவது; நிமிஷம், காஷ்டை, கலை, நாழிகை, முகூர்த்தம், நாள், மாதம், வருஷம், யுகம் முதலியவரையறை பரமபதத்தில் இல்லையாதலால், 'சிறுகாலையிலா' என்றும், இளமை முதுமை முதலிய பருவ வகைகள் அங்குள்ளார்க்கு இல்லாமையால் 'நிலையோ திரியா' என்றும், தன்னடை விலாதல் காலவசத்திலாதல் சுருக்கமும் பெருக்கமும் இல்லையாதலால் 'குறுகா நெடுகா' என்றும், முக்குணங்களும் மாறி மாறி வராது சுத்த சத்துவமாகவே இருப்பதால் 'குணம் வேறுபடா' என்றும், ஸ்ரீ மகாவிஷ்ணுவின் ஒரு மூச்சுகாற்று உண்டாகி நூற்றாண்டளவும் வீசிக் கொண்டிருந்து அனைத்தையும் அழிக்கின்ற அப்பிரளய காலத்திலும் அழிவில்லாது நித்தியமாய் இருத்தலால் 'உறுகால் கிளர் பூதமெல்லாம் உகினும் மறுகா நெறி' என்றும் கூறினார்".**[57]

மேலே கண்ட கம்பரின் பாடலுடன்,

> **'குறுகா நீளா இறுதி கூடா எனையூழி**
> **சிறுகா பெருகா அளவில் இன்பம்'**[76]

என்னும் திருவாய்மொழிப் பாசுரம் ஒப்புநோக்கத்தக்கது.

**கசேந்திர மோட்சம்**

வீடணனுக்கு அடைக்கலமளிப்பது தகாது எனச் சுக்கிரீவன் முதலானோர் இராமனிடம் கூறினர். அதுகாலை திருமால் கசேந்திரனுக்கு அபயமளித்த வரலாற்றை இராமன் தெரிவித்து வீடணனுக்கு அபயமளிப்பதே தக்கது என்றான்.

> **'போதகமொன்று கன்றி இடங்கர்மாப் பொருத போரின்**
> **ஆதியம் பரமேயானுன் அபய மென்றழைத்த வந்நாள்**
> **வேதமும் முடிவுங்காணா மெய்ப்பொருள் வெளிவந்தெய்தி**
> **மாதுயர் துடைத்த வார்த்தை மறப்பரோ மறப்பிலாதார்'**[77]

என்பது இராமன் கூற்று. இங்குத் திருமாலை **'வேதமும் முடிவுங்காணா மெய்ப்பொருள்'** என்று திருமாலின் பரத்துவத்தை இராமன் வாயிலாகக் கம்பர் எடுத்துரைத்தார். ஆழ்வார்கள் பாடிய கசேந்திர மோட்சம் கம்பரைப் பெரிதும் கவர்ந்துள்ளது என்பதை இதனால் அறியலாம்.

**பிரமனைப் படைத்தவன்**

ஒவ்வொரு கல்பத்தின் முடிவில் உலகமனைத்தையும் அழித்து மேலிட்ட பிரளயப் பெருங்கடலில் நாராயணன் யோக நித்திரை செய்தருளினன். பிரளயம் கழிந்த பின் பிரமன் திருமாலின் நாபிக் கமலத்தினின்று எழுந்து உலகங்களைப் படைப்பான்.[78] இதனால் திருமாலின் நாபிக் கமலத்தில் பிரமன் தோன்றிய செய்தி கம்பரால் உரைக்கப்படுகிறது.

**உவமைகள்**

கம்பர் திருமாலின் வண்ணம், வடிவம், செயல் ஆகியவற்றை உவமைகளாக அமைத்துள்ளார்.

முனிவரும், அரசரும், தேவரும், வந்து அடங்கிய திருமண மண்டபம் திருமாலின் நீலமணி போன்ற அழகிய திருவயிற்றை நிகர்த்த தாயிருந்தது.[79]

சந்திரசைலம் உலகளந்த நெடுமாலையொத்திருக்க, அதில் பொன்னலம்பியோடி அரக்குசேர் அருவிமாலை அந்த நெடுமால் மார்பிலணிந்த உத்தரீயத்தை ஒத்திருக்கும்.[80]

இராவணன் துயின்றது, பாம்பணைப் பள்ளியில் கருங்கடலையொத்த திருமால் போன்றிருந்தது.[81]

கடல் தென்றலால் அலையைப் பரப்பியது, திருமாலின் படுக்கையைத் தென்றலைக் கொண்டு உதறி விரிப்பது போன்றிருந்தது.[82]

## சிவன்

சிவனை முழுமுதற் கடவுளாக வழிபடும் சமய நெறியாளர் சைவர் எனப்படுவர். கம்பர் திருமாலின் அவதாரமாகிய இராமனது காதையைப் பாடினாரெனினும், சைவரும் அவரது நூலில் ஈடுபாடு கொண்டுள்ளனர். ஏனெனில் கம்பர் சிவன் பற்றி மிகுதியான செய்திகளைத் தம் நூலில் கூறியுள்ளதோடு, சிவநிந்தனை சிறிதுமின்றிக் காப்பியத்தைப் படைத்துள்ளதனாலாம்.

## சிவன் - பெயர்க் காரணம்

> "ஆரியர் 'ஹிம்ஸ' என்னும் சொல்லிலிருந்து 'ஸிம்உற' வருவதுபோல் 'வசி' என்பதிலிருந்து சிவ என்னும் சொல் வந்ததென்றும், எங்கும் வியாபகமாக வசிக்கும் கடவுளே சிவம் ஆயிற்றென்றும் கூறுவதுண்டு. ஆனால் சிவன் என்னும் சொல் வடமொழி நூல்களில் முதன் முதலாகத் தோன்றிய காலத்திற்குப் பல நூற்றாண்டுகள் முன்னதாகவே சிந்துவெளி நாகரிகத்தில் சிவலிங்கங்கள் காணப்பட்டமையால் அக்காலத்திய மக்கள் வழங்கிய மொழியின் தொடர்புடையதாகச் சிவன் என்னும் சொல் இருக்கலாமோ என்று சர் ஜான் மார்ஷல் கருதுகிறார். மங்களத்தைச் செய்வதால் சிவன் என்ற பெயர் ஏற்பட்டதென்றும் சிலர் கூறுவதுண்டு. சிவப்பு நிறமுடைமையால் சிவன் எனவும்கூறப்படுவதுண்டு என்பர்."[83]

இதனால் வேத காலத்திற்கு முந்திய சிந்துவெளி நாகரிகக் காலத்திலேயே சிவ வழிபாடு இருந்தமை போதரும்.

## சிவவழிபாடு - சங்க காலம்

தொல்காப்பியத்தில் சிவன் பற்றி நேரடியாகச் சொல்லப்படவில்லை. எனினும்,

> 'கொடிநிலை கந்தழி வள்ளி என்னும்
> வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்றும்

**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே'**[84]

என்ற நூற்பாவில் இடம் பெற்றுள்ள கந்தழி என்பது நெருப்பையும், நெருப்பு வடிவாகவுள்ள சிவனையும் குறிக்குமென்பர்.[85]

**புறநானூறு**

சிவபெருமான் முப்புரமெரித்த செய்தி புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. சிவபெருமானின் நெற்றிக்கண் போல் மேம்பட்டு விளங்கும் பாண்டிய மன்னனை,

**'ஓங்குமலைப் பெருவிற் பாம்பு நாண்கொளீஇ**
**ஒருகணை கொண்டு மூவெயிலுடற்றி**
**பெருவிற லமரர்க்கு வென்றிதந்த**
**கறை மிடற்றண்ணல் காமர் சென்னிப்**
**பிறைநுதல் விளங்கும் ஒருகண்போல**
**வேந்து மேம்பட்ட பூந்தார் மாற'**[86]

என்பார் மருதனிளநாகனார்.

சங்க இலக்கியங்கள் சிவபெருமானை ஆதிரை முதல்வன்[87], ஆலமர் கடவுள்[88], ஆனேற்றுக் கொடியோன்[89], ஈர்ஞ்சடை யந்தணன்[90], எரிதிகழ் கணிச்சியோன்[91], ஏற்றூர் தியான்[92], கறைமிடற்றண்ணல்[93], மழுவாள் நெடியோன்[94], முக்கட் செல்வன்[95], மூவெயில் முருக்கிய செல்வன்[96], வாலிழை பாகத் தொருவன்[97] முதலான சொற்களால் குறிப்பிடுகின்றன. சிவனைப் பற்றி வழங்கும் புராணச் செய்திகள் பல சங்க காலத்தில் வழக்கில் இருந்தமை புலனாகும்.

**சிலப்பதிகாரம்**

சிலப்பதிகாரம் சிவனைப் **'பிறவா யாக்கைப் பெரியோன்'**[98] எனப் போற்றுகிறது. சிவபெருமான்,

**'நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி**
**உலகுபொதி உருவத்து உயர்ந்தோன்'**[99]

என்றார் இளங்கோவடிகள்.

சேரன் செங்குட்டுவன் சிவபெருமான் திருவடியைத் தன் தலையில் தாங்கியவன் என்பதை,

'தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்'[100]

என்றார்.

**நாயன்மார்கள்**

நாயன்மார்கள் சிவபெருமானை முழுமுதற் கடவுள் என்பர். சிவன் மூவரில் முதல்வனாயுள்ள தன்மையினை,

'முந்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்'[101]

என்றார் ஞானசம்பந்தர்.

திருநாவுக்கரசர்,

'முந்தையர் முந்தியுள்ளார் மூவர்க்கு முதல்வரானார்'[102]

என்றும்,

'மூவுருவில் முதலுருவாய் இருநான்கான
மூர்த்தியே என்று முப்பத்து மூவர்
தேவரும் மிக்கோரும் சிறந்து வாழ்த்தும்
செம்பவளத் திருமேனிச் சிவனே'[103]

என்றும் பாடினார்.

மாணிக்கவாசகர், சிவபெருமானது திருவடிகள் ஆனந்தத் தேன் சொரியும் தன்மையன என்பதை,

'தினைத்துணை யுள்ளதோர் பூவினில் தேனுண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும்
எப்போதும்
அனைத்து என்புக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப் புடையானுக்கே சென்றூ தாய்க் கோத்தும்பீ;'[104]

என அரசவண்டை நோக்கிக் கூறுவர்.

நாயன்மார்கள் சிவனைப் பரம்பொருள் என்றனர். அவர்கள் அவனைத் தலையால் வணங்கினர்; நெஞ்சால் நினைந்து துதித்தனர்; வாயினால் வாழ்த்தினர்.

**கம்பர்**

சிவபெருமானைக் கம்பர் தம் காப்பியத்தில் 395 பாடல்களில் இடம்பெறச் செய்துள்ளார்[105] என்பர்.

காமனது ஆசிரமத்தின் பெருமையை விசுவாமித்திரன் இராமனுக்குக் கூறினான். அவ்வாசிரமம் சிவபெருமான் இருந்து தவம் செய்த பெருமையினை உடையது. அச்சிவபெருமான் பற்றினையும் அவாவினையும் ஒழித்து தூய ஞானம் கைவரப்பெற்றவர்களது அறிவு சென்று சேர்தற்கிடமானவன் என்றான் விசுவாமித்திரன். அவ்வாசிரமத் தூய்மையினை வாயினால் சொல்ல இயலாது.

> **'பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்**
> **முற்றவாலுணர்வு மேன் முடுகினார் அறிவு சென்று**
> **உற்றவானவன் இருந்து யோகுசெய்தனன் எனின்**
> **சொற்றவாம் அளவதோ மற்றிதன் தூய்மையே'** [106]

என்பது விசுவாமித்திரன் கூற்று.

**சிவபக்தர்கள்**

இராமாயணக் காப்பியத்தின் வாலியும் இராவணனும் பெரு வீரர்கள். அவர்கள் சிவ பக்தர்களாகவும் திகழ்ந்தனர்.

> **'பஞ்சின் மெல்லடியாள் பங்கன் பாதுகம் அல்ல யாவும்**
> **அஞ்சலித்து அறியாச் செங்கை'**[107]

உடையவன் என்றும்,

> **'எட்டு மாதிரத்து இறுதிநாளும் உற்று**
> **அட்ட மூர்த்தி தாள்பணியும் அன்பினான்'**[108]

என்றும் வாலியின் சிவபக்தி உணர்த்தப்படுகிறது.

அரங்கில் ஆடும் சிவன்மீது அன்புபூண்டவன் வாலி. அவனோடு மோதியவர் பலத்தில் பாதியைத் தான் சிவபெருமானிடத்திருந்து பெற்ற வரத்தினால் எய்தியதை,

> **'கிட்டுவார் பொரக் கிடக்கின் அன்னவர்**
> **பட்டநல் வரம் பாகம் எய்துவான்'**[109]

என உரைப்பர்.

இராவணன் கயிலையைப் பெயர்க்கத் தொடங்கி சிவபெருமான் சேவடிக் கொழுந்தால் நசுக்குண்டு நல்லறிவுபெற்று அப்பெருமானைப் போற்றி வழிபட்டுப் பல நன்மைகளைப் பெற்றவன். சிவபெருமானால் முக்கோடி வாணாள் வழங்கப் பெற்றவன்.[110] துள்ளுநீர் வெள்ளம் சென்னி ஏற்றவனால் தெய்வவாள் வழங்கப் பெற்றவன்.[111] இடபம் உந்து எழில் இருநான்கு தோள் கடவுள் அவனுக்குக் கவசம் ஈந்தான்.[112] ஆனால் சிவபெருமானையே தான் வென்றதாகவும், அவனுடைய கயிலை மலையை எடுத்து ஆர்த்ததாகவும் இராவணன் கூறிக் கொள்கிறான்.[113]

எனினும் ஈசனை, இமையா முக்கண் ஒருவனை இருமைக்கு மேற்ற பூசனை முறையிற் செய்து, திருமறை புகன்று தானம் வழங்குவதில் இராவணன் இறுதிவரை தவறவில்லை[114] எனக் கம்பர் உரைப்பார்.

**அனுமன் சிவனின் அமிசம்**

தேவர்கள் இவ்வுலகில் வானரர்களாகப் பிறக்க முடிவு செய்தனர். அப்போது அனுமன் தான் காற்றுக் கடவுளின் அமிசம் என்றும், சிவனின் அமிசமும் தானே என்றும் கூறினான்.

> 'வாயுமற்றெனது கூறு மாருதி எனலும் ....'[115]
> 'புராரி மற்று யானே வாதசேய் எனப் பகர்ந்தான்'[116]

என்பதால் அறியலாம். 'சிவனே இலங்கையைச் சிதைத்த அனுமனாக உருவெடுத்து வந்தான்' என்றனர் அரக்கர்.[117]

**சிவனுக்கு முதலிடம்**

உலகினைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களை நிகழ்த்தும் அயன், அரி, அரன், என்ற மூவரையும் முப்பெருந் தேவர்களாகப் போற்றிய நிலை காப்பியத்தில் பரக்கக் காணப்படுகிறது. முத்தேவரையும் குறிப்பிடும் இடங்களில் அரனுக்கு முதலிடம் வழங்கப்பட்டுள்ளது.

**எடுத்துக்காட்டுகள்**

> உமைக்கொரு பாகத்தொருவனும் இருவர்க்கு
> ஒருதனிக் கொழுநனும், மலர்மேல்
> அமைப்பெருஞ் செல்வக் கடவுளும் உவமை
> கண்டிலர்[118]
> பாதிமாமதி சூடியும் பைந்துழாய்ச்
> சோதி யானும் அத்தா மலர் ஆளியும்[119]

**உமைக்கும் நாதர்க்கும் ஓங்கு புள்ளூர்திக்கும்**
**இமைப்பில் நாட்டமோர் எட்டுடையானுக்கும்**[120]

மேற்காட்டிய சான்றுகள் அனைத்திலும் சிவனே முதலிடம் பெறுகிறான். தமிழகத்தில் செல்வாக்குப் பெற்று, பெரும்பான்மை மக்களால் வழிபடப் பெறுபவன் சிவபெருமான் என்பதால் சிவனுக்கு முதலிடம் தரப்பட்டுள்ளது எனலாம். காப்பியத்தில் திருமால் உயர்த்திப் பேசப்படினும், சிவபெருமான் மதித்துப் போற்றப்படுகிறான். மேலும் சிவன் காப்பியத்தில் நேரிடையாகத் தோன்றி இராமனது தன்மையினை மற்றையோர்க்கு உணர்த்தினான்.

### பிரமன்

பிரமன் பொன்னிறமுடையவன்; தாடி மீசையோடு கூடிய நான்கு முகங்கள் கொண்டவன்; முத்தேவரில் படைப்புத் தொழில் புரிபவன். கைகளில் செபமாலை, தண்டாயுதம், கமண்டலம் ஆகியவற்றோடு உள்ளவன். சுயம்புவாயும் விளங்குபவன். ஒவ்வொரு கற்பத்தில் திருமால் சிவனில் தான் பிறந்தும் அவர்களைத் தம்மில் பிறப்பித்தும் தேவர்கள், இருடிகள், பித்துருக்கள் ஆகியோருக்கு மூல காரணனாய் விளங்குபவன். சரசுவதி, சாவித்திரி, காயத்திரி ஆகியோர் அவன் மனைவியர்.

குமாரக் கடவுள் வினவிய பிரணவத்திற்குப் பொருள் கூறாது அவனால் சிறையுண்டு சிவனால் மீண்டவன்.[121]

### சங்க இலக்கியங்கள் மற்றும் காப்பியங்கள்

திருமால் உந்தித் தாமரையில் பிரமன் தோன்றிய செய்தியைப் பரிபாடல், திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன. கலித்தொகை பிரமனை **'உயிரெலாம் படைத்தான்'**[122], **'மாநிலமியற்றுவான்'**[123] என்று கூறுகிறது.

சிலப்பதிகாரம் பதினோராடல்களுள் தேர்முன் நின்று திசைமுகன் காணப் பாரதி ஆடிய பாண்டரங்கக் கூத்து பற்றிக்குறிப்பிடுகிறது.[124] திருமால் உந்தித் தாமரை பற்றிச் சிலம்பு,

**பேருலகமெல்லாம்**
**விரிகமல உந்தியுடை விண்ணவனை**[125]

எனப் பகர்கின்றது.

**ஆழ்வார்கள்**

ஆழ்வார்கள், பிரமன் திருமாலால் படைக்கப்பட்டவன் என்பர்.

**'தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே'[126]**

என்பார் குலசேகர ஆழ்வார்.

திருமால் நான்முகன் தாதை என்பதை,

**'திருத்தனைத் திசைநான் முகன் தாதையை'[127]**

என்பார் திருமங்கை ஆழ்வார்.

**கம்பரும் பிரமனும்**

கம்பர் பிரமனின் பல்வேறு தன்மைகளைத் தம் நூலில் குறிப்பிடுவர்.

பிரமன் முத்தேவரில் ஒருவன்; படைப்புக் கடவுள்; அவனது இருப்பிடம் சத்தியலோகம்.[128]

கரடி உருவத்தினனான சாம்பவான் பிரமனின் அமிசமாகத் தோன்றியவன்.[129]

சுகேது புத்திரரில்லாக் குறை நீங்கப் பிரமனை நோக்கித் தவம் செய்தான். அவனது அருளால் ஆயிரம் யானைகளின் பலங்கொண்ட அழகிய தாடகையை மகளாகப் பெற்றான்.[130]

பிரமன் வண்டாக மறைபாட, திருமாலின் உந்தித் தாமரை மலர்ந்தது.[131]

பிரமனாலும் அடைய முடியாதது விண்டுவின் உலகம். இதனைப்

**'புண்டரீகத் தனி முதற்கும் போக்கரு**
**விண்டுவின் உலகு'[132]**

என்பர்.

மைந்நாகமலை திருமால் உலகங்களையெல்லாம் படைப்பதற்காகப் பிரமனை உண்டாக்குவதனிமித்தம் தனது சங்கற்பத்தால் தோன்றிய பெரும் புனலிடைத் தனது நாபிக் கமலத்தினின்று படைத்து விடுத்த பொன்மயமான அண்டத்தை யொத்திருந்தது.[133]

பிரமன், இராமன் பரம்பொருளென்பதைத் தேவர்களுக்கு உணர்த்தினான்.

**இந்திரன்**

தேவராசன், காசிபமுனிவருக்கு அதிதிதேவியிடம் உதித்த குமரன். இவன் இராசதானி அமராவதி; ஆயுதம் வச்சிரம்; தேவி இந்திராணி; வாகனம் ஐராவதம் என்னும் யானை; சாரதி மாதலி; செல்வம் கற்பகத்தரு; குமரன் சயந்தன்; இவன் நூறு அசுவமேத யாகஞ் செய்து இந்திரப்பதவி அடைந்தவன். துருவாசன் சாபத்தால் செலவங்களையிழந்து, பாற்கடல் கடையப்பெற்று மீண்டும் செல்வங்களைப் பெற்றவன். கவுதம முனிவன் மனைவி மீது ஆசையுற்று, முனிவனை வஞ்சித்து அவளைக் கூடினான். முனிவர், **'பெண்களுக்குள்ள குறிகள் ஆயிரம் உன் உடம்பில் தோன்றுவதாக'** எனச் சபித்தார். பின்னர் அவை மற்றவர் கண்களுக்குக் கண்களாகத் தெரியுமாறு சாபவிடை நல்கினார். இராவண வதத்தில் இராமனுக்குத் தேர் அனுப்பினான். மழைக்காக உலகத்தவரால் செய்யப்படும் விழவேற்பவன்.[134]

**பழந்தமிழ் நூல்கள்**

தொல்காப்பியம் இந்திரன் மருதநிலத் தெய்வம் எனத் தெரிவிக்கிறது.[135] **'இந்திரர் அமிழ்தம்'**[136] என்ற தொடர் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. இந்திரனது படைக்கலம் இடி;[137] முருகனின் மனைவி தெய்வயானை அவன் மகள்[138] அகலிகையோடு தகாத உறவு கொண்டான். அவன் சூழ்ச்சியறிந்த முனிவன் அவண் வர, இந்திரன் பூனை உருவில் வெளியேறினான். கவுதம முனிவன் சினத்தால் அகலிகை கல்லானாள். இக்காட்சி திருப்பரங்குன்றத்தில் ஓவியமாக வரையப்பட்டுள்ளதை பரிபாடல் மூலம் அறியலாம்.[139]

**கம்பராமாயணம்**

கவுதம முனிவன் மனைவி அகலிகையை இந்திரன் விரும்பினான். கவுதமன் **'ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறி உனக்குண்டாக'**[140] எனச் சபித்தான். அவை பிறர்க்குக் கண்களாகத் தெரியுமெனச் சாபவிடையும் தந்தான்.[141] இராமன் பாததூளிபட்டு அகலிகை கல்லுரு நீங்கினாள்.

இந்திரன் ஐராவதத்தின் மீது அமர்ந்து வந்தான். துருவாச முனிவன் திருமகள் அளித்த மாலையை அவனிடம் தந்தான். இந்திரன் அதைத் தன் தோட்டியால் வாங்கி யானையின் பிடரியில் வைக்க அந்த யானை அதைக் காலினால் துகைத்தது. முனிவன் சினந்து **'உன் வளங்கள் யாவும் உவரிபுக்**

கொளிக்க' எனச் சபித்தான். இந்திரன் வளங்கள் பாற்கடலில் மறையத் திருமாலின் கட்டளையால் தேவர்கள் பாற்கடல் கடைந்தனர். செல்வங்கள் யாவும் வெளிப்பட்டன.[142]

இந்திரன் நாளும் தன் தலையினால் திருமாலை வணங்குபவன் என்பதை,

**'ஆணாதனை அந்தணர் நாயகனை**
**நாணாளும் வணங்கிய நன்முடி'**[143]

என்பர்.

இந்திரன் திதியின் வயிற்றிலிருந்த கருவைக் கலைத்தான்.[144]

சகரன் அசுவமேதம் செய்ய வேள்விக் குதிரையை இந்திரன் ஒளித்தான்.[145]

இந்திரன் இராமனுக்குத் தேர் அனுப்பினான். அத்தேரில் ஏறி இராமன் இராவணனுடன் போர் புரிந்தான்.[146]

**வருணன்**

நெய்தல் நிலக் கடவுள் வருணன். '**வருணன் மேய பெருமணல் உலகம்**' என்பது தொல்காப்பியம்.[147]

இராமன் '**கடலைக் கடக்கும் உபாயம் என்ன?**' என்று வீடணனைக் கேட்டான். வீடணன் '**வருணனைச் சரண் அடைந்து அவன் அருளைப் பெறுவதே கடலைக் கடக்கும் உபாயம்**' என்றான். இராமன் ஏழு நாள் தருப்ப சயனத்தில் படுத்து வருண மந்திரம் உச்சரித்தான். எனினும் அக்கடவுள் தோன்றவில்லை. பின்பு இராமன் கடல் மீது பல பாணங்களைத் தொடுத்தான். அப்போதும் அவன் வராமையால் மிகச் சினந்து பிரம்மாத்திரத்தைப் பூட்ட, இராமபிரான் கருத்தறிந்த வருணன் நடுநடுங்கி அவன் திருவடியில் விழுந்து அபயம் வேண்டினான். இராமனைப் பலவாறு துதித்தான். அவ்வருண தேவன் தன் மீது சேதுகட்டினால் தான் தாங்குவதாகச் சொன்னான். இராமபிரான் அருளைப் பெற்றுச் சென்றான்.[148]

வருணன் துதிகள் இராமனது பரத்துவத்தை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன.

**முருகன்**

முருகன் தமிழ்க் கடவுள். அவன் குறிஞ்சி நிலக் கடவுள்.

**'சேயோன் மேய மைவரை உலகம்'[149]**

என்பது தொல்காப்பியம். '**குறிஞ்சிக் கிழவன்**', '**மலை கிழவோன்**' என்பன அவனுக்குரிய பெயர்கள்.

முருகு என்ற சொல் இளமை, மணம், அழகு, தெய்வம் என்றெல்லாம் பொருள்படும்.

சூரபதுமன் முதலிய அசுரர்களின் கொடுமைகளுக்கு ஆற்றாத தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட அவர்தம் திருமுகங்களினின்று ஆறு தீப்பொறிகளைத் தோற்றுவித்தார். அவரது ஆணைப்படி அந்த ஆறு பொறிகளை வாயுவும் தீயும் ஏந்திச் சென்று கங்கையில் விட்டனர். கங்கை தன் மாட்டிருந்த சரவணமடுவில் கடம்பமர நிழலில் பொறிகளை விடுத்தது. அப்போது ஆறு பொறிகளும் ஆறு குழந்தைகளாயின. தேவர்கள் கட்டளைப்படி, கார்த்திகை மாதர்கள் அறுவரும் பாலூட்டினர். சிவபிரான் உமையுடன் அங்குவந்து, குழந்தைகளைத் தேவிக்குக் காட்ட, தேவி அந்த ஆறு குழந்தைகளையும் ஒன்று சேர்த்துக் கையால் எடுத்தணைக்க ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்ட ஒரு குழந்தையாக விளக்கந் தந்து பொலிந்தனர் முருகபிரான்.[150]

சங்க இலக்கியங்களில் பத்துப் பாட்டுள் ஒன்று திருமுருகாற்றுப்படை. இது முருகனின் ஆறுபடை வீடுகளின் சிறப்பைப் பேசுகிறது.

**கம்பராமாயணம்**

கந்தன் இளமையும் ஆற்றலும் மிக்கவன். அயோத்தியில் இருந்த கலை தெரிகழகம் பற்றிக் குறிப்பிடுகையில் கம்பர்,

**'.................................... மயிலூர்க்**
**கந்தனை அனையவர் கலை தெரிகழகம்'[151]**

என்பர்.

முருகனது பிறப்புப் பற்றி விசுவாமித்திர முனிவன் இராமலக்குவர்க்குச் சொன்னான். பரிசுத்தனாகிய சிவபிரானுக்கு உமாதேவியின் மூலமாகப் பிறந்த, வாயுவினாலும் கங்கையினாலும் தாங்க முடியாத வலிமையுடைய செம்மை நிறமுடைய முருகன் வளர்ந்தருளிய நாணற்காடு இது[152] என விசுவாமித்திரன் இராமனிடம் கூறினான்.

வான்மீகி முருகன் பிறப்பை இரண்டு சருக்கங்களில் மிக விரிவாக உரைக்கிறார்.[153] ஆனால் கம்பர் முருகன் பிறப்பினை ஒரு கவியில் மிகச் சுருக்கமாகவே பாடியுள்ளார். கம்பநாடர் சுருக்கிக் கூறியது முனிவர் மொழிந்த வரலாறு தமிழர் பண்பாட்டுக்கு ஏற்றதன்று என்ற கருத்துக் கொண்டு போலும் எனலாம்.

## பெண் தெய்வங்கள்

திருமகள் திருமால் மார்பில் உறைபவள். அவளது இருப்பிடம் தாமரை மலர் என்றும் கூறுவர். திருமால் இராமனாக அவதரிக்கத் திருமகள் சீதையாகத் தோன்றினாள்.

திருமகள் திருமால் மார்பிலிருந்து உயிர் யாவையும் ஈன்றவள் என்பதை,

> **'உலகம் யாவையும் படைத்தளித்து உண்டுமிழ் ஒருவன்**
> **இலகு மார்பகத்திருந்து உயிர் யாவையும் ஈன்ற**
> **திலக வாணுதல்'** [154]

என்றான் விசுவாமித்திரன்.

## உமையம்மை

சிவன் **'உமைக்கொருபாகத் தொருவன்'**[155] என்ற பெயரினைப் பெறுகிறான்.

அனுமன் மருந்துமலை கொண்டுவரச் செல்கிறான். அதைக் கயிலாயத்திருந்து சிவனும் உமாதேவியும் காண்கின்றனர். அப்போது அனுமன் செல்லும் காரணத்தை உமாதேவி வினவ, **'அரச குலத்திற் பிறந்துள்ள இராமபிரானின் தூதனாகிய இவன் மருந்தைக் கொண்டு செல்ல வந்துள்ளான்; இலங்கையின் தீமை தீரும்; நாமும் நாளை கொடிய போரைக் காண்போம்'** [156] என்றான். இங்கு உமையம்மையைக் கம்பர் 'உலகீன்றாள்' [157] என அவளது சிறப்புத் தோன்றக் கூறியுள்ளார் என்பது கருதத்தக்கது.

## கொற்றவை

பாலை நிலத் தெய்வம். **'காடுகிழாள்'** என்னும் பெயரும் இவளுக்கு உண்டு. தாடகை வாழ்ந்து வந்த பாலை நிலப் பகுதியைக் குறிப்பிடும்போது கம்பர் கொற்றவை பற்றிக் குறிப்பிடுவர்,

பாலை நிலத்தில் வெம்மை மிகுதி; கொற்றவை அங்குமிங்கும் நடமாட எண்ணினாலும் முடியாது. அவள் வேகமாக ஓடத்தான் வேண்டும். இதனை,

'சூரும் ஓடாது கூடாது' [158]

என்றான் விசுவாமித்திரன்.

## தொகுப்புரை

திருமால் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களிலும் காப்பியங்களிலும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. ஆழ்வார் பாடல்கள் திருமால் பெருமையினைப் பரக்கப் பேசுகின்றன. கம்பர் திருமாலின் தோற்றம், பல்வேறு அருட்செயல்கள், திருமால் உறையும் தலங்கள் ஆகியவற்றைத் தம் நூலில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

சிவபெருமானையும் கம்பர் பெரிதும் போற்றுகிறார். மும்மூர்த்திகளைக் குறிப்பிடுகையில், சிவனுக்கு முதலிடம் தந்துள்ளமையினால், பெரும்பாலோரின் வழிபாட்டு நெறியினைக் கம்பர் மதித்துப் போற்றுகிறார் என்பது புலனாகிறது. மற்றும் பிரமன், இந்திரன், முருகன், வருணன் ஆகியோரும், பெண் தெய்வங்களான திருமகள், உமையம்மை, கொற்றவை ஆகியோரும் அவரவர்களுக்கு உரிய இடத்தை நூலுள் பெற்றுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்


1. சுப்பிரமணிய பிள்ளை, கா., **தமிழர் சமயம்,** பக். 70-72
2. கதிரைவேற் பிள்ளை, நா., **மொழி அகராதி,** ப. 1152.
3. அரங்க சீனிவாசன், அருட்கவி, **வைணவத் தத்துவஞான அடிப்படைகள்,** ப. 18.
4. **கலைக்களஞ்சியம்,** தொகுதி - 9 பக். 430 - 435
5. இந்திரா பார்த்தசாரதி, **தமிழ் இலக்கியங்களில் வைணவம்,** ப.9.
6. **தொல்காப்பியம்,** புறத்திணை இயல், சூ.63.
7. **திருக்குறள்,** பொருட்பால், மடியின்மை - 10.
8. மேலது, காமத்துப்பால், புணர்ச்சி மகிழ்தல்.3.
9. வடிவேலுச் செட்டியார், கோ., **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்,** காமத்துப்பால் - 3, ப.1176.
10. **பதிற்றுப்பத்து,** நான்காம் பத்து,2, அடிகள் 7 - 9.
11. **புறநானூறு.** 56.
12. மேலது - 174
13. **பரிபாடல்,** 1, அடிகள் 6-11
14. மேலது 3, அடி 2.
15. மேலது 15, அடிகள் 15-16
16. மேலது 3, அடி 72
17. **கலித்தொகை,** முல்லைக்கலி 4, அடி (37-38)
18. **திருமுருகாற்றுப்படை,** அடி 150-151.
19. பெரும்பாண். அடி 402-404.
20. **முல்லைப்பாட்டு,** அடி 1-2.
21. **மதுரைக்காஞ்சி,** அடி 590-591.
22. **சிலப்பதிகாரம்,** இந்திரவிழவு அடி 172.
23. மேலது, நாடுகாண், அடி 9-10.
24. மேலது, காடுகாண், அடி 35-40.
25. மேலது, அடி 41-51.
26. மேலது, ஆய்ச்சியர் முன்னிலைப் பரவரல் 1,2,3.

26\. மேலது, படர்க்கைப் பரவரல் 2.

28\. மேலது, 3.

29\. **மணிமேகலை,** சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட காதை, அடி 98-99.

30\. **பெரியாழ்வார் திருமொழி,** 4.8.9.

31\. **திருநெடுந்தாண்டகம்,** 18.

32\. **பெரியாழ்வார் திருமொழி,** 2.6.6.

33. **திருச்சந்த விருத்தம்,** *22.*
34. I *: 3: 2.*
35. I *: 5: 15.*
36. I *: 5: 25.*
37. I *: 8 : 16.*
38. I *: 8 : 17.*
39. I *: 9 : 16.*
40. II *: 9 : 100.*
41. VI *: 18 : 129.*
42. I *: 9 : 17.*
43. I *: 9: 20.*
44. I *: 9 : 24.*
45. I *: 9 : 25.*
46. I *: 9 : 26.*
47. I *: 9 : 60.*
48. **பெரியாழ்வார் திருமொழி,** *4.7.3.*
49. II *: 1 : 95.*
50. II *: 1 : 99.*
51. II *: 2 : 22.*
52. I *: 21 : 50.*
53. **மூவர் தேவாரம்,** *தலமுறை, திருவாலவாய் திருநீற்றுப் பதிகம், ப.1071.*
54. **திருவாய்மொழி,** *1.9.10*
55. *அண்ணங்கராசாரியார்,* **திவ்வியார்த்த தீபிகை, திருவாய்மொழி முதற்பத்து,** *ப.169.*
56. I *: 21 : 49.*
57. **கம்பராமாயணம்,** *பாலகாண்டம், வை.மு.கோ.உரை. ப.880.*
58. V *: 9: 21.*
59. I *:11: 2.*
60. **பெரியாழ்வார் திருமொழி,** *4.9.2.*
61. IV *: 13 : 26.*

61\. IV *: 13: 27.*

63. IV *: 13: 28.*
64. IV *: 13: 29.*
65. IV *: 15: 34.*
66. IV *: 15: 35.*
67. IV *: 15: 36.*
68. IV *: 15: 37 .*

69. **திருவாய்மொழி,** *2.8.4.*
70. II *: 8:51.*
71. II *: 12 :77 .*
72. III *: 8 : 215 .*
73. **கம்பராமாயணம்,** *ஆரணிய காண்டம், வை.மு.கோ.உரை, ப.703.*
74. III *: 2 : 20 .*
75. **கம்பராமாயணம்,** *ஆரணிய காண்டம், வை.மு.கோ.உரை, ப.62.*
76. **திருவாய்மொழி,** *6.9.10.*
77. VI *: 4 : 113 .*
78. II *: 12 : 121 .*
79. I *: 21 : 46 .*
80. I *: 14 : 45 .*
81. V *: 2 : 206 .*
82. VI *: 1 : 3 .*
83. **கலைக்களஞ்சியம்,** *தொகுதி 4, ப.711.*
84. **தொல்காப்பியம்,** *பொருள், புறத்திணை இயல் சூ.85.*
85. *சுப்பிரமணிய பிள்ளை, கா.,***தமிழர் சமயம்,** *ப.8.*
86. **புறநானூறு,** *55.*
87. **பரிபாடல்,** *8, அடி.6.*
88. **புறநானூறு,** *198, அடி.9.*
89. **கலித்தொகை** *-26, பாலைக்கலி அடி -5.*
90. *மேலது 38, குறிஞ்சிக்கலி அடி1.*
91. *மேலது 103, முல்லைக்கலி , அடி -25.*
92. *மேலது 150, நெய்தற்கலி அடி - 13.*
93. **புறநானூறு,** *55, அடி - 4.*
94. **அகநானூறு,** *220, அடி - 5.*
95. *மேலது 181, அடி - 16.*
96. **திருமுருகாற்றுப்படை,** *அடி - 154.*
97. *பாரதம் பாடிய பெருந்தேவனார்,***கடவுள் வாழ்த்து, ஐங்குறுநூறு.**
98. **சிலப்பதிகாரம்,** *இந்திரவிழவு, அடி - 169.*
99. *மேலது, கால்கோள் அடி - 54 - 55.*
100. *மேலது, அடி 64 - 65.*
101. **மூவர் தேவாரம்,** *தலமுறை, திருஞானசம்பந்தர், திருமழபாடிப் பதிகம், ப.408.*
102. *மேலது திருவிடைமருதூர்ப் பதிகம், ப.577.*
103. *மேலது, பொது, ப. 1526.*

104. மாணிக்கவாசகர்,**திருவாசகம்,** திருக்கோத்தும்பி, 3.
105. ராய. சொ. தமிழ்க்கடல் **கம்பனும் சிவனும்,** ப.5.
106. I : 7 : 3 .
107. IV : 7 : 145.
108. IV : 3 : 40 . அடி 3 - 4.
109. IV : 3 : 40 . அடி 1 - 2.
110. VI : 36 : 198.
111. V : 4 : 43.
112. VI : 15 : 76.
113. III : 7 : 188.
114. VI : 34 : 3.
115. I : 5 : 27. அடி 1.
116. I : 5 : 27. அடி 3 - 4.
117. V :13 : 15.
118. I : 3 : 3.
119. I : 10 : 135.
120. II : 2 : 15.
121. சிங்காரவேல் முதலியார், **அபிதான சிந்தாமணி,** பக். 1132 - 1136.
122. **கலித்தொகை** 129, நெய்தற்தகலி அடி - 2.
123. மேலது106, முல்லைக்கலி அடி - 18.
124. **சிலப்பதிகாரம்,** கடலாடு, அடி 44 - 45.
125. மேலது, கானல்வரி, படர்க்கைப் பரவரல் 2.
126. **பெருமாள் திருமொழி** 8.4.
127. **பெரிய திருமொழி** 7.10.7.
128. I : 6 : 7.
129. I : 5 : 25.
130. I : 7 : 22 - 25.
131. I : 10 : 71.
132. II : 12 : 77.
133. V : 1 : 43.
134. சிங்காரவேல் முதலியார், **அபிதான சிந்தாமணி,** பக். 154 - 158.
135. **தொல்காப்பியம்,** பொருள், அகத்திணையியல், சூ.5.
136. **புறநானூறு,** 182.
137. **பரிபாடல்,** 8, அடி.33.
138. மேலது 9, அடி 9.
139. மேலது 9, அடி 50 - 52.

140. I : 9 : 78.
141. I : 9 : 81.
142. I : 9 : 13 - 25.
143. III : 2 : 25.
144. I : 9 : 29.
145. I : 9 : 35.
146. VI : 35 : 7.
147. **தொல்காப்பியம்,** *அகத்திணையியல்,* சூ.5.
148. VI : 6 : 2 - 83..
149. **தொல்காப்பியம்,** *அகத்திணையியல்,* சூ.5.
150. **கலைக்களஞ்சியம்,** *தொகுதி 8, பக். 436 - 440*
151. I : 2 : 48.
152. I : 9 : 30.
153. **வால்மீகி ராமாயணம்,** *பாலகாண்டம், ஸர்க்கம் 36 - 37.*
154. I : 9 : 7.
155. I : 3 : 3.
156. VI : 23 : 45.
157. VI : 23 : 45. *அடி* - 1.
158. I : 7: 9.

# இயல் 4

## கம்பராமாயணத்தில் இடம்பெறும் அவதாரங்கள்

### முன்னுரை

நல்லவர்களைக் காக்கவும், தீயவர்களை ஒறுத்து அறத்தை நிலைநாட்டவும் திருமால் பல பிறவிகள் எடுப்பதை அவதாரம் என்னும் வடசொல் உணர்த்தும். திருமாலின் அவதாரங்களுள் குறிப்பிடத்தக்கவை பத்தாகும். இவ் அவதாரப் பெருமைகளை ஆழ்வார்களின் பாடல்கள் மூலம் அறியலாம். இராமாவதாரச் சிறப்பைப் பாடியுள்ள கம்பர், ஏனைய அவதாரங்களைப் பற்றித் தம் நூலுள் பலவிடங்களில் பேசியுள்ளார். இராமாவதாரம் பற்றி அடுத்த இயலில் விரிவாக ஆராயப்படவிருத்தலின், இவ்வியல் பிற அவதாரங்கள் நூலில் பெறும் இடத்தினை விளக்க முற்படுகிறது. கம்பரின் கடவுட் கோட்பாட்டை நிறுவ இவ்வியல் துணைபுரியும்.

### அவதாரம் - விளக்கம்

அவதாரம் என்பது இறங்குதல், அதாவது உயர்நிலையிலிருந்து தாழ்நிலைக்கு வருதல் என்று பொருள்படும்[1]

ஒரு கடவுள் மனித வடிவிலோ, விலங்கு வடிவிலோ, உயர் மனித வடிவிலோ இறங்கி வருதல் என ஆக்ஸ்போர்டு அகராதி இச்சொல்லுக்கு விளக்கமளிக்கும்.[2]

ஒரு கடவுள் பிறவிகள் எடுத்தலுக்கு அவதாரம் என்ற சொல் இந்து சமயப் புராணங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. விஷ்ணு பத்து அவதாரங்கள் எடுத்துள்ளதாகக் கருதப்படுகிறது.[3]

உலகிலுள்ள குறிப்பிடத்தக்கத் தீமையொன்றினை மட்டுப்படுத்தக் கடவுள் மனித வடிவிலோ விலங்கு வடிவிலோ அவதரித்தல் (இவ்வட சொல்லின் பொருள் இறங்குதல்) என்பது இந்து சமயம்.[4]

இறைவன் தன் ஒளி உருவினை விண்ணில் வைத்துவிட்டு இப்பூவுலகில் பிறத்தலை,

**'ஆதியஞ் சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த**
**வேதமுதல்வன்'[5]**

என்பார் நம்மாழ்வார்.

இவற்றால் அவதாரம் என்பதன் பொருள் நன்கு விளங்குகின்றது எனலாம்.

திருமாலுக்கே அவதாரம் உண்டு. சிவபெருமான் அவதார-மெடுப்பதில்லை. அவன் 'பிறவாயாக்கைப் பெரியோன்' ஆவான்.

**அவதார நோக்கம்**

நல்லோரைக் காக்கவும், தீயோரைத் தண்டிக்கவும், அறத்தை நிலைநாட்டவும் நான் யுகந்தோறும் பிறக்கிறேன் என்பது கண்ணபிரான் கீதைமொழி.[6]

**'தீக்கவும் தீயோர் தம்மைச் செய்வினை நலத்தினோரைக்**
**காக்கவுமன்றோ கோடி கடவுளிவ் உருவமம்மா'[7]**

என்று பாகவதம் அவதார நோக்கத்தினைக் கூறுகிறது.

**"அனைத்து அவதாரங்களும் அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காப்பதாகவே உள்ளன. தீய பண்புகளின் உருவகமே அசுரர்கள். குறிப்பிட்ட ஒருவரைப் பழிவாங்கும் எண்ணத்தோடு இறைவன் அவதாரம் எடுக்கவில்லை. அவதாரத்தின் நோக்கம் தீயவர்களை அழிப்பதல்ல; தீயவைகளை அழிப்பதே. பாவிகளை அழிப்பதல்ல; பாவங்களை அழிப்பதே. அவதாரம் எடுத்து அசுரர்களை அழித்ததாக எண்ணுவது தவறு. அசுரர்களுக்குள் ஒளிந்து கிடக்கும் அரக்கத் தன்மையை அழிக்கவே இறைவன் முயலுகிறான்; அசுரத்தன்மையை அழிப்பதனால் அந்த உயிர் கடவுள் தன்மையைப் பெறுகிறது. அசுரனை அழிப்பது மட்டும் இறைவனுடைய எண்ணமாக இருந்திருந்தால் அனைத்துமாக உள்ள இறைவன் வைகுண்டத்திலிருந்தே அவ்வெண்ணத்தை நிறைவேற்றி யிருப்பான். இறைவன் பிறவியெடுப்பதன் தலையாய நோக்கம் உயிர்களை ஈடேற்றுவதே"[8]**

என்பர். இக்கூற்று அவதார நோக்கத்தினைத் தெளிவுபடுத்துகிறது எனலாம்.

## இறைவனின் ஐந்து நிலைகள்

பஞ்சராத்திர ஆகமம் இறைவனின் **ஐந்து** நிலைகளாகிய பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகியவை பற்றிக் குறிப்பிடுகிறது. இதனை விண்ணாட்டு நிலை (பரம்), அணிவகுப்பு நிலை (வியூகம்) பிறப்பு நிலை (விபவம்), உள்ளுறை நிலை (அந்தர்யாமித்வம்) வழிபடுநிலை (அர்ச்சை) எனத்தமிழில் உரைப்பர்.

அறிதற்கரிதான இறைவன் பரமபதத்தில் இருக்கும் இருப்பு **பரம்** எனப்படும்.

**வியூகமாவது** வைகுண்டத்தில் ஒருவனாக இருந்தவன் திருப்பாற்கடலில் நான்குவித வடிவத்தை ஏற்கிறான். வாசுதேவன், சங்கர்ஷனன், பிரத்தியும் நன், அநிருத்தன் என்ற நால்வரும் பரம்பொருளின் வியூகங்களாவர். இதனைப் பரிபாடல்,

> 'செங்கட்காரி கருங்கண் வெள்ளை
> பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்' [9]

என நான்கு வியூக நிலையைக் கூறியுள்ளது.

**விபவமாவது** மண்ணுலகிலுள்ள உயிர்களைக் காக்க வேண்டி இறைவன் இங்கு வந்து பிறத்தலாகும். வாமனன், பரசுராமன், இராமன், கண்ணன் போன்றோர் திருமாலின் விபவங்களாவர்.

**அந்தர்யாமியாவது** விண்ணிலுள்ள இறைவன் அவனையே நினைத்துக் கொண்டிருக்கும் பக்தர்களுக்காக மனதில் வந்து இறங்குவதாகும்.

**அர்ச்சை** என்பது எல்லோரும் கண்டு வழிபடக்கூடிய ஒன்றாகும். விபவ நிலையில் தனக்கு வேண்டிய ஒரு வடிவினை ஏற்ற இறைவன், அர்ச்சை நிலையில் தம் பக்தர்கள் விரும்பிய வடிவத்தினைத் தாம் ஏற்கிறார்.

இவ்வைந்து நிலைகளுள் **விபவம்** என்பதே இறைவனின் அவதாரமெடுக்கும் இயல்பினை உணர்த்துவது எனலாம்.

## அவதார எண்ணிக்கை

திருமாலின் அவதாரங்கள் பத்து ஆகும். ஆயினும் பின்னாளில் எழுந்த புராணங்களில் அவ்வெண்ணிக்கை பதினொன்றாகவும் இருபது அல்லது இருபத்திரண்டாகவும் உயர்ந்தது.[10]

பத்து அவதாரங்களாவன : 1) மச்சம் 2) கூர்மம் 3) வராகம் 4) நரசிம்மம் 5) வாமனன் 6) பரசுராமன் 7)இராமன் 8) கிருஷ்ணன் 9) புத்தன் 10) கல்கி. ஆனால் ஆழ்வார்கள் தங்கள் பாடல்களில் புத்தனை விடுத்துப் பலராமனைச் சேர்த்துள்ளனர்.

சங்க இலக்கியங்களில் ஏழு அவதாரங்கள் பற்றிய குறிப்பே காணப்படுகிறது. மச்சம், கூர்மம், கல்கி ஆகிய மூன்று அவதாரம் பற்றிய செய்திகள் இல்லை. கூர்மாவதாரத்தைப் பற்றிக் குறிப்புகள் இல்லையெனினும், பாற்கடல் கடைந்தபோது, அமிழ்தத்தைப் பங்கிட்டுத் தரவேண்டித் திருமால் எடுத்த மோகினி வடிவம் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. வேதங்களைப் பிரமனுக்கு உபதேசிக்கும் பொருட்டு அன்ன வடிவம் எடுத்த செயல் பரிபாடலில் இடம்பெறுகிறது.

> "தேவுடைய மீனமாய் ஆமையாய்
> ஏனமா யரியாய் குறளாய்
> மூவுருவிலி ராமனாய் கண்ணனாய்
> கற்கியாய்" [11]

எனப் பத்து அவதாரங்களைப் பெரியாழ்வார் குறிப்பிடுவார்.

**அவதாரங்களின் பரிணாம வளர்ச்சி**

> 'திருமாலின் பத்து அவதாரங்களும் பரிணாமத்தின் முக்கியப் படிகளை உணர்த்துகின்றன எனவும் கூறுவர். மனித இயற்கையினும்தாழ்ந்த விலங்குத் தன்மை நிலை, மீன், ஆமை, பன்றி என்னும் அவதாரங்களில் குறிப்பிடப்படுகிறது. பிறகு விலங்குலகு மனித உலகுக்கு மாறுவதை நரசிம்மாவதாரம் காண்பிக்கிறது. வாமனாவதாரம் மனித இயற்கை முழு வளர்ச்சியடையாமையைக் காட்டுகிறது. மனிதனது முதல்நிலை கொடிய விலங்குத் தன்மையான பழிவாங்கும் நாகரிகமற்ற நிலை என்பதைப் பரசுராம அவதாரம் அறிவிக்கிறது. தூய நற்குணம் நிரம்பிய மக்கட் பண்பை இராமாவதாரம் தெரிவிக்கிறது. இச்சையொன்றும் கொள்ளாமல் உலகிலுள்ள தீய சக்தியுடன் போராடி வெற்றி பெறுவதைக் கிருஷ்ணாவதாரம் குறிக்கிறது. எல்லா உயிர்களிடமும் இரக்கம் வேண்டும் என்பதைப் புத்தாவதாரம்

**வெளியிடுகிறது. தீமையையும் ஒழுங்கின்மையையும் வெட்டி வீழ்த்துவதை வாளோடு தோன்றும் கல்கியவதாரம் தெரிவிக்கிறது'**[12] எனக் கலைக்களஞ்சியம் அவதார வளர்ச்சி பற்றி விளக்கமளிக்கிறது. இங்கும் பலராமனுக்குப் பதிலாகப் புத்தர் இடம்பெற்றுள்ளது கவனிக்கத்தக்கது.

## ஆழ்வார் பாடல்கள்

திருமாலின் அவதாரங்களில் ஆழ்வார்கள் பெரிதும் ஈடுபட்டனர். வராகம், கூர்மம், மச்சம் ஆகிய மூன்று அவதாரங்களைத் திருமால் எடுத்தமையை,

> **'பன்றியும் ஆமையும் மீனமுமாகிய**
> **பாற்கடல் வண்ணா'** [13]

எனப் பெரியாழ்வார் குறிப்பிடுவர்.

மேலும், பரசுராமாவதாரத்தை,

> **'என் வில் வலிகண்டு போவென் றெதிர்வந்தான்**
> **தன் வில்லினோடு தவத்தை எதிர்வாங்கி'** [14]

எனவும் குறிப்பிடுவர்.

திருமாலின் நரசிம்மாவதாரத்தை,

> **'ஊன் கொண்ட வள்ளுகிரால் இரணியன் உடலிடந்தான்'** [15]

என்றார் ஆண்டாள்.

குலசேகர ஆழ்வார் பரசுராம அவதாரத்தை,

> **'முன்னொரு நாள் மழுவாளி சிலைவாங்கி**
> **அவன் தவத்தை முற்றும் செற்றாய்'** [16]

எனக் குறிப்பிடுவர்.

திருமழிசை ஆழ்வார் வராகம் மற்றும் வாமன அவதாரத்தினை,

> **'படைத்த பாரிடந்து அளந்து ..........'** [17]

என்றார்.

திருமங்கை ஆழ்வார் வாமன அவதாரமெடுத்த திருமாலை,

> **'ஒரு குறளாயிரு நிலம் மூவடிமண் வேண்டி**
> **உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும்**
> **தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த**
> **தாடாளன்'**[18]

எனப் பாராட்டுவர்.

கண்ணன் அவதாரத்தின் மீது பக்தி செலுத்திய நம்மாழ்வார்,

> **'ஒளிமணி வண்ணனென்கோ ஒருவனென் றேத்தநின்ற**
> **நளிர்மதிச் சடைய னென்கோ நான்முகக் கடவுளென்கோ**
> **அளிமகிழ்ந்து உலகமெலாம் படைத்து அவை ஏத்தநின்ற**
> **களிமலர்த் துளவ னெமான் கண்ணனை மாயனையே'**[19]

எனப் பாராட்டுவர்.

ஆழ்வார்கள் மிகுதியாகப் பாடியது கண்ணன் மற்றும் இராம அவதாரங்கள் எனினும், பிற அவதாரங்கள் பற்றிய செய்திகளைத் தம் பாசுரங்களில் பரக்கப் பேசியுள்ளனர்.

**கம்பரும் அவதாரங்களும்**

கம்பர் தம் நூலில் கல்கி அவதாரம் நீங்கலாக ஏனைய ஒன்பது அவதாரங்களைப் பற்றிக் குறிப்பிடுவர். இராமாவதாரத்தின் சிறப்பினை உணர்த்தவே அவர்தம் நூலுக்கு இராமாவதாரம் எனப் பெயரிட்டிருந்தார். வாமனாவதாரம், பரசுராமாவதாரம், நரசிம்மாவதாரம் ஆகியவை அவரால் விரிவாகப் பாடப்பெற்றன. பால காண்டம் வேள்விப் படலத்தில் வாமனாவதாரப் பெருமையை இருபத்திரண்டு பாடல்களில் விவரிக்கும் கம்பர், பரசுராம, நரசிம்ம அவதாரங்களுக்கு ஒவ்வொரு படலம் ஒதுக்குகிறார். திருமாலின் அவதாரங்கள் கம்பரைப் பெரிதும் ஈர்த்துள்ளமையை இதனால் அறியலாம்.

**மச்சாவதாரம்**

திருமால் வேதத்தினை மீட்க நீரினுள் வாழும் மீனின் வடிவம் கொண்டான். தெய்வத் தன்மையோடு இவ்வடிவம் எடுக்கப்பட்டதாதலின் **'தேவுடைய மீனமாய்'**[20] என்றார் பெரியாழ்வார். இவ்வவதாரம் பற்றிய குறிப்பு சங்க இலக்கியங்களில் இல்லை எனலாம்.

கடலுக்கடியில் அயக்கிரீவனால் கவர்ந்து செல்லப்பட்ட வேதங்களை மீட்பதற்காகவே இறைவன் மச்சாவதாரம் எடுத்தான்.

**'பின்னுமொரு காலத்தில் அச்சுதன் வேதங்களெல்லாம் பெருநீர்வேலை**
**தன்னினுநின்றெடுத்துவர எண்ணி வரியுடல் மச்ச சனனமாகி'[21]**

என்பது கந்தபுராணம்.

**'சேலாம் பிறப்பில் திருமால்'[22]**

என்பது வில்லிபாரதம்.

கம்பர், இராமன் பிரிவினால் மக்கள் கண்ணீருகுக்க அதனிடையே சென்ற இராமன் தேர் கடலிடையே சென்ற மச்சாவதாரம் போன்றிருந்தது என்பர். இதனை,

**'கைகணீர் பரந்து காறொடரக் கண்ணுகும்**
**வெய்யநீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்**
**உய்ய வேழுலகு மொன்றான நீருழல்**
**தெய்வ மீனொத்ததச் செம்பொற்றேரரோ'[23]**

என்னும் பாடல் உணர்த்தும்.

**கூர்மாவதாரம்**

கூர்மம் என்பது ஆமையாகும். இது நீரிலும் நிலத்திலும் வாழ்வது. தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்தபோது, திருமால் ஆமை வடிவமெடுத்து அம்மலைக்கடியிற் சென்று தாங்கினார். இதனை,

**'பருவரை யொன்றுநின்று முதுகிற் பரந்து சுழலுக்கிடந்து துயிலும்**
**அருவரை யன்ன தன்மை அடலாமையான திருமால்'[24]**

என்பர் திருமங்கை ஆழ்வார்.

துருவாசன் சாபத்தால் இந்திரன் வளங்கள் யாவும் உவரிபுக்-கொளிப்பத் தேவர்கள் திருமாலைச் சரணடைந்தனர். திருமால் பாற்கடல் கடைய ஏற்பாடு செய்தான். மேரு மலையை மத்தாகவும், வாசுகியைக் கடைகயிறாகவும் கொண்டு தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடைந்தனர். அதுகாலைத் திருமால் ஆமை வடிவேற்று மேரு மலைக்கடியிற் சென்று தாங்கினான். இதனைக் கம்பர்,

**'திறல்கொள் ஆமையாய் முதுகினில் மந்தரம் திரிய'[25]**

என்பர்.

கடலில் மூழ்கியிருந்த மைந்நாகமலை மீண்டும் எழுந்தது, பாற்கடல் கடைகையில் முதலிற் கடலில் மூழ்கியிருந்து கூர்மாவதாரங் கொண்ட திருமாலால் மேலெடுக்கப்பட்ட மந்தரமலையை ஒத்திருந்தது.[26]

வாலியின் ஆற்றலைக் கம்பர் '**நீர் கிடந்த பேராமை நேருளான்**'[27] எனக் கூர்மாவதாரத்தின் சிறப்புத் தோன்றக் குறிப்பிடுவர்.

**வராக அவதாரம்**

விஷ்ணுவின் தசாவதாரங்களுள் ஒன்று; அது மூன்றாவது அவதாரம். கற்பாந்தரத்திலே எல்லாப் பொருள்களும் நீரிலே மூழ்கிப்போனபோது, அந்த நீரின்மேல் ஆலிலையில் அறிதுயிலமார்ந்த விஷ்ணு அந்தப்பூமியைக் கொம்பிற்றாங்கி மேலே கொண்டுவந்து காக்கவும், இரணியாட்சனைக் கொல்லவும் வராகமாக அவதரித்தான்.

பூமி முழுவதும் கடலுக்கடியில் சென்றுவிட்டதால் அனைத்து உயிர்களையும் ஈடேற்றும் நோக்கம் இவ் அவதாரத்தில் அடங்கியுள்ளது[28] என்பர்.

ஊழிக்கால வெள்ளத்தில் கடலுக்கடியில் சென்றுவிட்ட பூமியை மீட்க இறைவன் இந்த அவதாரத்தினை எடுத்தான். இதனை,

> **'ஊழியாழிக்க ணிருநில முருகெழு**
> **கேழலாய் மருப்பினுழு தோய்'**[29]

என்னும் பரிபாடலும்.

> **'வெம்பும் சினத்துப் புனக் கேழலொன்றாய் விரிநீர்**
> **முதுவெள்ளம் முன்புக்கழுந்த**
> **வம்புண் பொழில் சூழுலகன் றெடுத்தான்'**[30]

என்னும் பெரிய திருமொழியும் தெளிவுறுத்தும்.

இவ் அவதாரத்தைக் கம்பர் உவமையாகப் பயன்படுத்தியுள்ளார். வராக அவதாரமெடுத்து உலகத்தைத் தன் பல்லினால் ஏந்தியவன் இராமனே என விராதன் குறிப்பிட்டான்.

> **'அணியெயிற்றில் ஏந்துதியால்'**[31]

என்பது விராதன் கூற்று.

வாலியின் ஆற்றலினைக் கம்பர் '**பாரிடந்த வெம் பன்றியின்**'[32] ஆற்றலுக்கு நிகர் என்பர்.

அனுமன் பேருருவங் கொண்டு இலங்கையிலுள்ள வனத்தைத் துகைக்கத் தொடங்கினான். அவனது உருவம் திருமாலெடுத்த வராக அவதாரத்துக்கு நிகரானது. இதனைக் கம்பர்,

**'அன்றுலகு எயிற்றிடை கொள் ஏனமெனலானான்'**[33]

என்பர்.

அட்ச குமாரன் திருமாலின் அவதாரமாகிய கேழலாலும் தன்னோடு பொர முடியாது எனத் தற்பெருமை பேசினான்.[34]

ஒப்பற்ற வராக அவதாரமாக உலகைத் தன்னுடைய கோரப் பற்களிற் கொண்ட திருமால் முதலான பலரும் இராவணனால் நேருந் துன்பம் முடிவுறுவது எப்போது எனக் கவன்றதாக வீடணன் குறிப்பிட்டான்.[35]

இப்பேருலகத்தைக் கோட்டில் குத்தி மேலே கொணர்ந்தவராக அவதாரப் பேருருவும், வலிமையும் கம்பரைப் பெரிதும் ஈர்த்தமையின் அவர் தம் நூலில் அவ் அவதாரப் பெருமை புலப்படக் குறிப்பிட்டுள்ளார் எனலாம்.

**நரசிம்மாவதாரம்**

பாதி மனித உருவும் பாதி விலங்கு உருவும் கொண்டது நரசிம்ம உருவம் வான்மீகி இராமாயணத்தில் நரசிங்கம் பற்றிய குறிப்பு இல்லை. இரணியன் கடுந்தவம் செய்து வரங்கள் பெற்று இந்திரன், வருணன் போன்ற தேவர்களை நீக்கித் தான் அரசாண்டான் என்றும், தேவர்கள் திருமாலிடம் முறையிடத் திருமால் நரசிங்க வடிவமெடுத்துத் தம் நகங்களால் இரணியன் மார்பைப் பிளந்து கொன்றானென்றும் பாகவதத்தில் உள்ளது. மேலும் இதில் பிரகலாதனின் நாராயண பக்தியும், தூணைத் தட்டிய அளவில் நரசிங்கம் வெளிப்பட்டு அவனைக் கொன்ற செய்தியும் இடம்பெறுகின்றது.[36] விஷ்ணு புராணத்திலும் இரணியன் கதை பாகவதத்தை ஒட்டியே அமைந்துள்ளது.[37]

தமிழ் இலக்கியத்தில் இவ் அவதாரக் கதை பரிபாடலில் இடம் பெற்றுள்ளது.

> **குற்றமில்லாத செங்கண்ணையுடைய செல்வனே:**
> **பிருங்கலாதன் நின்னைப் புகழ அதனைப் பொறாமல்**
> **சீற்றங் கொண்ட நெஞ்சினையும், சாந்தம் புலர்ந்த**
> **மார்பினையுமுடைய இரணியன் அவனைப் பலவாறு பிணித்து**
> **வருத்த அந்தத் துன்பத்தினால் ஒடுங்குவதற்குக் காரணமான**
> **துன்பம் மிக்கு ஒடுங்கிய நடுக்கமடைந்த காலத்திலும் தன்**
> **தந்தையென இகழாமல் நிற்ப, அவன் நெஞ்சு பொறுக்கும்**

**வண்ணம் அவன் நெஞ்சிலும் நீ புகுந்து நின்று இரணியன் மார்பினைப் பிளந்த கைநகத்தினையுடையை'**[38]

என்று திருமாலை விளித்துக் கூறுவது போன்று இப்பரிபாடற் செய்தி அமைந்துள்ளது. இப்பாடலில் பிரகலாதன் 'பிருங்கலாதன்' என்றும் 'அலர்ந்த புகழோன்' என்றும் குறிப்பிடப் பெறுகிறான்.

நரசிங்கமாகத் தோன்றிப் பகையை அழித்த திருமாலை மடங்கலாய் 'மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே'[39] என ஆய்ச்சியர் குரவையில் இளங்கோவடிகள் போற்றுவர்.

சிங்கவேள் குன்றம் நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஒன்று. இத்திருப்பதியினையும் இங்கு எழுந்தருளியுள்ள நரசிம்ம மூர்த்தியையும் திருமங்கையாழ்வார் பாடிப் பரவுவர்.[40]

**கம்பர்**

கம்பர் இவ் அவதாரப் பெருமையை ஒரு படலத்தில் 176 பாடல்களால் பாடியுள்ளார். யுத்த காண்டத்தில் இப்படலம் இரணியவதைப் படலம் என்ற பெயருடன் மூன்றாவது படலமாக அமைந்துள்ளது. இராவணனது மந்திராலோசனை அவையில் வீடணன் இரணியன் வரலாறு கூறுவதாக அமைந்துள்ளது இப்படலம். இப்படலத்தினைக் கம்பர் பாடவில்லை என்பார் கூற்று ஆதாரமற்றது. இப்படலச் சிறப்பினைப் பற்றி அறிஞர் கூறும் கூற்றுக்களிலிருந்தே இம்முடிவுக்கு வரமுடியும்.

> **"கம்பராமாயணமாகிய நவரத்தின மாலையில் முழு மணியாக விளங்குவது இப்படலம். கம்பராமாயணத்தில் துறைபோகியவரெல்லாரும் இப்படலத்தில் கம்பர்தம் அறிவுத்துறை முழுவதையும் ஆண்டிருக்கிறாரென்று ஒருமனதாகத் தம் ஆராய்ச்சியில் முடிவாகக் கூறுகின்றனர்".**[41]

> **"தமிழ் இராமாயணத்திற்கு வான்மீகமே முதல் நூலென்று கம்பரே சொல்லிவிட்டார். யுத்த காண்டத்திற் கூறிய இரணிய வதைப்படலம் கம்பருடைய படைப்பு. இராம சரிதத்தில் இரணியவதையை இடைப்பெய்து கூறுவது மற்றொன்று விரித்தலென்ற குற்றமாமென்பர் சிலர். பார காவியம் செய்த ஆசிரியர் இது குற்றமானென்று கொண்டால் அங்ஙனம் கூறார். ....... இரணியவதைப் படலம் ஒன்று தவிர, ஏனைக் கம்பராமாயணம் முழுவதும் அழிந்து விட்டாலும் பெரிதன்று. கம்பருடைய**

**கவித்திறமையினையும் புலமையினையும் காட்ட இப்படலமொன்றே போதிய சான்றாகும். யுத்தகாண்டமே கம்பராமாயணத்தில் மிக மிடுக்குடைய காண்டமெனத் தமிழ் வல்லார் கூறுவதுண்டு. இவ் இரணிய வதைப் படலமோ அக்காண்டத்தில் ஏனைய படலங்களிலும் மிடுக்குடையது. ஆசிரியருடைய கருத்துக்களும் நடையும் மெய்ப்பாடுகளும் அத்தனை உரம் பெற்றிருக்கின்றன. எவரோபாடி இடைப்பெய்து வைத்தது இப்படலம் என்று கூறுவாரும் இக்காலத்துளர்."[42]**

மேற்கண்ட கூற்றுக்கள் இரணியவதைப் படலத்தின் சிறப்பினையும் தனித் தன்மையையும் காட்டுவன. ஆதலின் இப்படலம் கம்பரால் இயற்றப்பட்டதென்பதில் சிறிதும் ஐயமில்லை.

### கம்பர் பாடியதன் நோக்கம்

இராம நாமத்தின் பெருமையைக் கம்பர் வாலி வதைப் படலத்தில் எடுத்தியம்புகிறார். **'இராமநாமம் மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரம்; தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதம்; இம்மையேயன்றி எழுமை நோய்க்கும் மருந்து; அதுவே செம்மை சேர்நாமம்'**[43] என்பது கம்பரது கூற்று. இராம நாமத்தை வானரர் சொல்லச் சம்பாதிக்குச் சிறகு முளைக்கிறது.[44] கம்பராமாயணத்தில் இராமநாமப் பெருமை பேசப்படினும், வைணவர்கள் போற்றும் எட்டெழுத்து மந்திரமாகிய நாராயண மந்திரத்தின் பெருமை பேசுதற்குரிய வாய்ப்பாகக் கம்பர் இப்படலத்தைப் பயன்படுத்திக் கொள்வர் எனலாம்.

பிரகலாதன் நாராயண நாமத்தைச் சொன்னான் என்பதை, **'வேதத்துச்சியின் மெய்ப்பொருள் பெயரினை விரித்தான்'**[45] என்பர். ஞானநாயகனாகிய பிரகலாதன் **'ஓம் நமோ நாராயணாய'** என்னும் எட்டெழுத்து மந்திரத்தை உளமுருகச் சொன்னபோது அவன் கைகள் தலைமிசைச் சென்றன. கண்கள் நீருகுத்தன. மயிர்கள் சிலிர்த்து நின்றன[46] என்பார்.

பிரகலாதன், பிரணவம் முதலிற் கூறும் பொருளையே தான் மொழிந்ததை, **'முன்னை மூலத்தின் முதற்பெயர் மொழிந்தது மொழிந்தேன்'**[47] என்றான்.

நாராயணனே பரம்பொருள் என்றான் பிரகலாதன். **'வேதங்களில் சொல்லப்பட்ட எல்லாப் பொருள்கட்கும் முடிவெல்லையாக**

உடையவன் நாராயணன். அத்திருப் பெயரிலும் சிறந்த பதம் வேறெதுவும் இல்லை'[48] என்பான்.

பிரகலாதன் தன் தந்தையிடம் நாராயண மந்திரத்தின் பெருமையினைப் பேசினான்.

> 'காமம் யாவையும் தருவதுமபதங் கடந்தால்
> சேம வீடுறச் செய்வதும் செந்தழல் முகத்த
> ஓம வேள்வியினுறுபத முய்ப்பது மொருவன்
> நாமமன்னது கேள் நமோ நாராயணாய'[49]

என்பது பிரகலாதன் கூற்று.

சிவன், நான்முகன் ஆகியோர் உயிர் வாழ்வது இம்மந்திரத்தால் ஆகுமென்பதை,

> 'முக்கட்டேவனும் நான்முகத் தொருவனு முதலா
> மக்கட் காறுமிம் மந்திரம் மறந்தவர் இறந்தார்'[50]

என்றான்.

**படலச் சிறப்பு**

இரணியவதைப் படலத்தினைச் சின்னராமாயணம் என்பர்.

> "சின்னராமாயணம் 176 பாடல்களே கொண்டது. குறள் போலச் செறிவால் சிறந்தது இந்தச் சின்னராமாயணம். தத்துவமும் சமயமும் இணைந்து பொலிவது இரணிய வதைப் படலத்தின் தனிச்சிறப்பு. சமய உணர்வுக்கும் தத்துவத் தெளிவிற்கும் இடைப்பாலமாய் எட்டெழுத்து மந்திரம் அமைந்திருப்பதைக் கம்பர் இப்படலத்தில் காட்டுகிறார்.
>
> தத்துவம் என்பது அறிவு முடிந்து ஞானம் தோன்றும் நிலையை நோக்குவது. சமயம் என்பது தன்னைக் கரைத்துவிடுகின்ற அனுபவத்தின் களம். இரண்டும் இணைய முடியுமா என்று தான் தோன்றும். இரண்டையும் இணைத்துக் காட்டும் சாதனையே இரணியவதைப் படலம். சாதனைக்குச் சாதனமாகக் கம்பருக்கு உதவியது எட்டெழுத்து மந்திரம்."[51]

என்பர்.

'இரணிய வதைப் படலம்' என ஒரு படலம் பாடி நரசிம்மாவதாரத்தைச் சிறப்பித்த கம்பர், உவமைகள் வாயிலாகவும் இவ் அவதாரப் பெருமையினைப் பேசுவர்.

கதிரவன் தோற்றத்தைப் பாடும்போது, இரவு என்னும் இரணியன் சீறி, கதிர்கள் என்னும் ஆயிரம் கைககளை ஓச்சி உதயமலையாகிய தூணிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கம் போன்றிருந்தது.[52]

யாவரும் அஞ்சி நடுங்கும்படித் தூணிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கமென வாலி தோன்றினான்.[53]

நரசிங்க மூர்த்தியாகிய திருமால் தூணைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டது போல் அங்காரதாரை வாயின் வழியாக உட்புகுந்த அனுமன் அவள் வயிற்றைக் கூரிய நகங்காளற் பிளந்து கொண்டு வெளிப்பட்டு வந்தான்.[54]

இராவணன் சீதையைக் காணவந்தபோது திசை யானைகள் அஞ்சின. அவை, நரசிங்கத்தின் அடிச்சுவட்டைத் துதிக்கையால் அளைந்த யானையைப் போல் அஞ்சின.[55]

இராமனது திருக்கை நகங்கள் இரணியனது மார்பைப் பிளந்த காலத்து அவ்வசுரனது இரத்தத்தால் சிவந்தனபோலச் சிவந்திருந்தன.[56]

அரக்கருடன் போரில் ஈடுபட்டிருந்த இராமனைத் தன் மகனுக்கு நேரே அவன் தந்தையைக் கொன்றானாகிய அந்த நரசிங்க மூர்த்தியே என்று கருதுவார்கள்.[57]

மேற்காட்டப்பெற்ற உவமைகளாலும் நரசிம்மாவதாரத்தின் பெருமையினைக் கம்பர் விளக்க முயன்றுள்ளார் எனலாம்.

### வாமன அவதாரம்

இதுவரை எடுக்கப்பட்ட அவதாரங்களுக்கு மாறாக முழுவதும் மானிட வடிவம் தாங்கி வந்த அவதாரம் இவ்வவதாரம். எனினும் முழு வளர்ச்சியடையாத குள்ள உருவை ஏற்றார் திருமால். இதனை, '**மிகுசிறு குள்ளனாய்**'[58] என்றார் திருமங்கை ஆழ்வார்.

வாமனன் என்ற சொல்லுக்குக் குறுகியவன் என்பது பொருள். வாமம் என்னும் சொல் அழகு எனவும் பொருள்படும். எனவே வாமனன் குறுகிய அழகிய தோற்றமுடையவன் என்பது புலனாகும். ஆதலின் ஆண்டாள் '**கோலக் குறளுரு**'[59] என்றார்.

**வாமனனும் திரிவிக்கரமனும்**

வாமன அவதாரத்தினைத் திரிவிக்கரமாவதாரம் எனவும் உரைப்பர். குள்ளக் குறளனாக மாவலியிடம் சென்ற திருமால், அவனிடம் மூன்றடி மண் பெறத் திரிவிக்கிரமனாக மாறினான். திரிவிக்கிரமன் என்ற சொல்லுக்கு மூன்றடியால் உலகளந்தவன் என்பது பொருள். திருமால் தான் கொண்ட நோக்கம் நிறைவேறக் குறிய உருவமேற்றாலும், உலகத்தினையளக்க நீள்வடிவம் கொண்டும் விளங்கினான். இவ் அவதாரபுருடன் வாமனன், குறளன், திரிவிக்கிரமன், உலகளந்தான் எனப் பல பெயர்களால் அழைக்கப் பெறுகிறான்.

**அவதார நோக்கம்**

தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க இவ் அவதாரம் எடுக்கப்பட்டது. மாவலியின் ஆணவத்தை அகற்றுதலே அவதார நோக்கமாகும். அனைத்தையும் தனதாக்கிக் கொண்ட மாவலியின் புறப்பற்றை நீக்கி அவனுக்குத் தன் திருவடிப்பேற்றினைத் திருமால் அளித்தான்.

**பழந்தமிழ் இலக்கியங்கள்**

எட்டுத்தொகை நூல்களான கலித்தொகை, பரிபாடல் ஆகியவற்றிலும், பத்துப்பாட்டு நூல்களான முல்லைப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை ஆகியவற்றிலும் இவ் அவதாரக் குறிப்பினைக் காணலாம்.

**'ஞான மூன்றடித் தாய முதல்வற்கு'**[60]

என்பது கலித்தொகை.

**'கேழுலக முற்ற அடியினை'**[61]

என்பது பரிபாடல்.

**'இரு நிலங்கடந்த திருமார்பின்'**[62]

எனப் பெரும்பாணாற்றுப்படையிலும்,

**'நீர் செல நிமிர்ந்த மாஅல்போல'**[63]

என முல்லைப்பாட்டிலும் இவ் அவதாரச் செய்தி காணப்படுகிறது.

ஆயர் குலத் தலைவனான கண்ணன் புகழினை ஆய்ச்சியர்

குரவையில் கூறும்போது மூவுலகும் ஈரடியால் அளந்தான் எனத் திருமாலது திருவடிப் பெருமையினை இளங்கோவடிகள் கூறுவர்.[64]

மணிமேகலை,

> **'நெடியோன் குறளுருவாகி நிமிர்ந்துதன்**
> **அடியிற் படியை அடக்கிய வந்நாள்**
> **நீரிற் பெய்த மூரிவார்சிலை**
> **மாவலி'[65]**

என இவ் அவதாரத்தைப் பற்றி விரிவாகப் பேசும். மாவலியின் பெயர் முதன்முதலாக இடம்பெறும் நூல் மணிமேகலை எனலாம்.

**ஆழ்வார் பாடல்கள்**

வானவர் துயர் தீர்க்க வாமன வடிவம் கொண்டது, மாவலியின் வேள்வியில் வாமனன் பிரமச்சாரி வடிவம் தாங்கிச் சென்றது, மூன்றடி மண் இரந்தது, நீரால் தாரைவார்த்தது, திரிவிக்கிரமனாகத் திசைகள் தோறும் வியாபித்தது, இரண்டடிகளால் அனைத்துலகங்களும் அளந்தது ஆகிய செய்திகள் ஆழ்வார் பாடலில் இடம்பெறுகின்றன.

மாவலி மூன்றடி மண்ணினை வாமனனுக்குத் தாரை வார்த்துக் கொடுக்கக் குலகுருவான சுக்கிராச்சாரியர் தாம் ஒரு வண்டாக மாறிக் கமண்டலத்துவாரத்தின் வாயிலை அடைத்தார். வாமனன் தன்னிடமிருந்த தருப்பையினால் துவாரத்தைக் குத்தினான். சுக்கிரன் கண் குருடானது. இதனை,

> **'சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய**
> **சக்கரக் கையனே அச்சாவோ'[66]**

என்று பெரியாழ்வார் பாடியுள்ளார். இச்செய்தி பிற இலக்கியங்களில் காணப்படவில்லை எனலாம்.

**கம்பர்**

கம்பர் தம் நூலில் வாமன அவதாரச் செய்தியினை விரிவாக இயம்பியுள்ளார். மாவலி மண் விண்களைத் தனதாக்கிக் கொண்டான். தேவர்கள் திருமாலை வேண்டத் திருமாலும் இணங்கினான்.

காசிபனென்னும் வாலறிவற்கு நீலநிறத்து நெடுந்தகையாகிய திருமால் குறளனாகப் பிறந்தான். வாமனனின் தோற்றத்தினைக் கம்பர்,

> **'முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சைக்**
> **கற்பதொர் நாவனனற் படுகையான்**

**அற்புதனற் புதரேயறியுந்தன்**
**சிற்பத மொப்பதொர் மெய்க்கொடு சென்றான்'[67]**

என விரித்துரைப்பர்.

மாவலி வேள்வி நடைபெற்ற இடத்திற்கு வாமனன் சென்றான். வாமனனை எதிர்கொண்டு மாவலி வரவேற்று முகமன் கூறினான். வாமனன் மூவடி மண் கேட்க மாவலி இசைந்தான். சுக்கிரன் தடுத்துக் கூறினான்.

ஒருவன் கொடுப்பதை மற்றொருவன் தடுப்பதால் எய்தும் கேட்டினை மாவலி சுக்கிரனுக்கு உரைத்தான்.

**எடுத்தொருவருக் கொருவர் ஈதனின் முன்னம்**
**தடுப்பது நினக்க ழகிதோ தகவில் வெள்ளி**
**கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்**
**உடுப்பதுவு முண்பதுவு மின்றி விடுகின்றாய்[68]**

என்றான் மாவலி. இப்பாடல்,

**'கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
**உண்பதூஉ மின்றிக் கெடும்'[69]**

என்னும் குறட்பாவின் கருத்தினைக் கொண்டுள்ளது.

மாவலி வாமனனுக்கு மூவடி மண் தாரை வார்த்துக் கொடுத்தான். வாமனன் திரிவிக்கிரமனாக மாறி மண், விண்களை ஈரடியால் அளந்தான். தன் மூன்றாவது அடியினை மாவலியின் முடிமேல் வைத்து அழுத்தினான். திருமால் மூவுலகாட்சியைத் தேவேந்திரனுக்கு அளித்துவிட்டுப் பாற்கடற் பள்ளிமேவினான்.

**உவமைகள்**

உலகெலாம் மூன்றடியால் அளந்தநாளில் அவ்வெற்றியை உலகுக் கறிவித்த சாம்பவானைப் போல அயோத்தியில் வள்ளுவன் இராமபிரான் திருமணச் செய்தியை அறிவித்தான்.[70]

சந்திரசைல மலை உலகளந்த நெடுமாலை ஒத்திருக்க, அதில் பொன்னலம்பியோடும் ஆரஞ்சேரருவி அந்த நெடுமால் மார்பிலணிந்த உத்தரீயம் போன்றிருந்தது.[71]

வானத்திலோங்கிய திருமாலின் திருவடி, அவ்வாறு வானத்தையளாவி வளர்ந்த அனுமன் வடிவத்தை ஒத்திருந்தது.[72]

அனுமன் கொண்ட பேருருவம் திருமாலின் திரிவிக்கிரமவதாரத்தை ஒத்திருந்தது.[73]

திரிவிக்கிரமவதார காலத்தில் சத்தியலோகம் சென்ற திருமாலின் திருவடியைப் பிரமதேவன் தன் கைக்கமண்டல நீரினால் கழுவி விளக்க அப்புனித நீரே கங்கையாகப் பெருகியது.[74]

கும்பகருணன் தோற்றம்,

> **'எண்ணினும் பெரியனாய இலங்கையர் வேந்தன் பின்னோன்**
> **மண்ணினை அளந்து நின்ற மாலென வளர்ந்து நின்றான்'[75]**

என வருணிக்கப்படுகிறது.

அனுமனைக் கண்டு தேவர்கள் வியந்ததை,

> **'அளந்தான் முனம் இவனேயென இமையோர்களும் அயிர்த்தார்'[76]**

என்பர்.

முதலிற் குறுகிய வடிவினனாயிருந்த அனுமன் மருந்து மலையைக் கொணரச் செல்லும்போது பெரு வடிவினனாக மாற, வாமனாவதார மூர்த்தி முதலிற் குறுகிய வடிவினனாயிருந்து பிறகு பேருருவு அளக்கையில் முனிவர் முதலியோர் மகிழ்வுடன் வேத மந்திரம் கொண்டு துதித்தாற்போலத் துதித்தனர்.[77]

அனுமன் நீல மலையைக் கண்டான். அம்மலை,

> **'அரியவன் உலகமெல்லாம் அளந்தநாள் வளர்ந்து தோன்றும்**
> **கரியவன் என்ன நின்ற நீலமால் வரையைக் கண்டான்'[78]**

என்றார்.

இலக்குவன் எய்த வாளி திசைகளெங்கும் பரந்தது. இதனை,

> **'........................................... திசைகளெங்கும்**
> **மாண்கலந்த மாயவன் வடிவென முழுதும் வெளவ'[79]**

என்பர்.

இராவணன் தோற்றம், உலகளந்தவன் வளர்ந்த தோற்றம்போல உயர்ந்ததாயிருந்தது.[80]

திரிவிக்கிரமனான திருமாலின் திருவடியாட்டிய நீரிலும் இராமபிரானாகிய திருமாலின் திருமுடியிலாட்டிய நன்னீர் மிக்குள்ளதனால் அதனை அச்சிவபிரான் ஏற்க இயலாது.[81]

மேற்காட்டிய உமைகள், வாமனாவதாரப் பெருமை நை உணர்த்துவனவாக அமைந்துள்ளமை மனங்கொள்ளத்தக்கது.

**பரசுராமன்**

பத்து அவதாரங்களில் மூவர் இராமன் என்னும் பெயரினைக் கொண்டு திகழ்கின்றனர். பரசு என்னும் ஆயுதந் தாங்கியவன் பரசுராமன் என்றும், கோதண்டத்தைத் தாங்கியவன் கோதண்டராமன் என்றும், கண்ணனின் சகோதரனாக வருபவன் பலராமன் என்றும் அழைக்கப் படுகின்றனர். இம்மூவருள் கோதண்டராமன் ஒருவனையே இராமன் என்று நூல்கள் குறிப்பிடுகின்றன. இராமன் என்ற பெயருடன் மூவர் இருப்பதை,

**'மூவுருவில் இராமனாய்'**[82]

என்றார் பெரியாழ்வார்.

பரசு என்ற சொல் கோடரியைக் குறிக்கும். கணிச்சி, மழு ஆகிய சொற்களாலும் கோடரி குறிக்கப்பெறும். இதனை ஆயுதமாகக் கொண்டமையின் இவன் பரசுராமன் எனப்பட்டான்.

**அவதார நோக்கம்**

கார்த்த வீரியார்ச்சுனன் என்பவன் பரசுராமனின் தந்தையாகிய சமதக்கினி முனிவரைக் கொன்று விட்டமையால் அவனை அழித்தலே இவ் அவதாரத்தின் தலையாய நோக்கம். ஆனால் பரசுராமன் இருபத்தோரு தலைமுறை அரசகுலத்தினரை அழித்ததாக நூல்கள் கூறுகின்றன. அவனிடத்திருந்த பழிவாங்கும் உணர்ச்சி, அவனை மன்னர் குலத்தையே அழிக்கத் தூண்டியது.

**தமிழ்இலக்கியங்கள்**

பரசுராமன் அரசர்களை வென்று இருபத்தோரு தலைமுறையினரைக் கொன்று யாகம் செய்தபோது நட்ட தூண் யாவரும் காண முடியாத உயரத்தை உடையதாயிருந்தது என அகநானூறு கூறுகிறது.

**மன்மருங்கறுத்த மழுவாள் நெடியோன்**
**முன் முயன்றரிதினில் முடித்த வேள்வி**
**கயிறு அரையாத்த காண்டகுவனப்பின்**
**அருங்கடி நெடுந்தூண்**[83]

என்ற பாடலில் பரசுராமன் '**மழுவாள் நெடியோன்**' எனக் குறிப்பிடப் பெறுகிறான்.

மணிமேகலை, அரசர்களைக் கொன்று மழுவினை ஏந்திய பரசுராமன்[34] என்று குறிப்பிடுகிறது.

> **'வென்றிமா மழுவேந்திமுன் மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்றதேவ'[35]**

எனத் திருமங்கை ஆழ்வார் பரசுராமனைப் பற்றிக் குறிப்பிடுவர்.

> **'நின்றிலங்கு முடியினாய் இருபத்தோர்கால் அரசுகளைக் கட்ட வென்றிநீண் மழுவா'[36]**

என்பர் நம்மாழ்வார்.

**கம்பராமாயணம்**

பாலகாண்டத்தின் இறுதிப் படலமாகப் பரசுராமப் படலம் இடம்பெறுகிறது. இராமனும் சீதையும் திருமணம் முடிந்து வரும் வழியில் பரசுராமன் எதிர்ப்பட்டு இராமனை எதிர்க்கிறான். தன்னிடமிருந்த விஷ்ணுவின் வில்லை இராமனிடம் கொடுத்து நாணேற்றச் சொல்கிறான். இராமன் அவ்வில்லை நாணேற்றி இவ் அம்புக்கு இலக்கு யாது? என்றான். தான் அரிதின் முயன்று பெற்ற தவம் முழுவதையும் அதற்கு இலக்காக்க, இராமன் விட்ட அம்பு அவன் தவத்தினை அழித்தது. இராமனை உணர்ந்த பரசுராமன் அவன் அவதாரப் பெருமை தோன்றப் பலவாறு துதித்தான்.

பரசுராமன், தான் மன்னர் குலத்தை மூவேழு தலைமுறை தன் மழுவாயுதத்தால் கொன்று அவர்களது தசையினின் றெழுந்த உதிர வெள்ளத்துறைக்கண் தன் தந்தைக்குச் செய்யத்தக்க நீர்க்கடன்களைத் தான் செய்ததாகச் சொன்னான்.

> **'மூவெழு முறைமைபாரில் முடியுடை வேந்தையெல்லாம்**
> **மேவெழு மழுவின் வாயால் வேர்அறக் களைகட்டு அன்னார்**
> **தூவெழு குருதிவெள்ளத் துறையிடை முறையினெந்தைக்**
> **காவன கடன்கணேர்ந்தேன் அருஞ்சினமடக்கிப் போந்தேன்'[37]**

என்பது பரசுராமன் கூற்று.

திருமாலின் அவதாரங்களுள் இராமனது அவதாரம் முழுமையான அவதாரம். பரசுராம அவதாரம் ஆவேச அவதாரம். பரசுராமனிடம் ஆவேசித்திருந்த சக்தி தன் காரியம் முடிந்ததும் முழுமைபெற்ற அவதாரத்திடம் தோல்வியுற்றதாக அமைந்துள்ளது.

**பலராம அவதாரம்**

திருமாலின் எட்டாவது அவதாரமாகிய பலராம அவதாரம் ஒன்பதாவது அவதாரமாகிய கண்ணன் அவதாரத்துடன் இணைத்துப் பேசப்படும் அவதாரமாகும். புத்தர் திருமாலின் அவதாரம் என்று வடமொழிப் புராணங்களான வாயுபுராணம், மச்ச புராணம் போன்றவை குறிப்பிடுகின்றன.[88] ஆனால் ஆழ்வார்கள் புத்தரை நீக்கிப் பலராமனைப் பத்து அவதாரங்களுள் இணைத்தனர். பிராமணர்கள் பௌத்தர்களோடு ஒரு சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள வேண்டுமென்ற விருப்பத்தின் காரணமாகவே புத்தரை விஷ்ணுவின் அவதாரமாக ஏற்றுக்கொண்டனர் என்று அறிஞர் வில்லியம்ஸ் கூறுவர் என்பர்.[89]

பலம் பொருந்திய இராமன் பலராமன்; இவன் பலதேவன் என்று அழைக்கப்பெறுகிறான்.

**அவதார நோக்கம்**

கண்ணன் அவதார நோக்கம் நிறைவேற உறுதுணை புரிபவன் பலராமன். பூமிக்குத் துன்பத்தைத் தரும் அசுரர்களை அழிக்கக் கண்ணனும் பலராமனும் இணைந்து செயல்பட்டனர்.

**இலக்கியங்கள்**

**'வலியொத்தீயே வாலியோனை'**[90]

என்னும் புறநானூற்று அடி பலராமனின் வலிமையை விளக்குகின்றது. பானிற உருவிற்பனைக் கொடியோன்[91] என அவன் நிறம், கொடி ஆகியவை பற்றியும் கூறுகிறது.

**'வால்வளை மேனி வாலியோன் கோயில்'**[92]

பூம்புகாரில் இருந்ததாகச் சிலம்பு பகர்கின்றது.

**கம்பர்**

விராதன் இராமலக்குவரைத் தன் தோளில் தூக்கிக்கொண்டு சென்றான். இத்தோற்றம் பாணாசுர விசய காலத்தில் பெரிய திருவடியாகிய கருடன் கண்ணனையும் பலராமனையும் தன் தோளில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்றது போன்றிருந்தது[93] என்றார் கம்பர்.

**கண்ணன் அவதாரம்**

கண்ணன் அவதாரம் தெய்வத்தன்மை நிரம்பியது. கண்ணனைப் பெரியாழ்வார்,

**'ஆயர்புத்திர னல்லன் அருந்தெய்வம்'**[94]

என்பர். விஷ்ணு அவதார புருடனாக வடிவெடுத்தாலும் கண்ணனும் விஷ்ணுவும் ஒன்று என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்குமளவிற்கு இவ் அவதாரத்தன்மை அமைந்துள்ளது.

கிருஷ்ணன் என்னும் வடமொழிப் பெயர் கண்ணன் எனத் தமிழில் வழங்குகிறது. கிருஷ்ணன் என்ற வடசொல்லுக்குக் கருநிறமுடையவனென்றும், யாவர் மனத்தையும் கவர்பவனென்றும், அனைத்துத் தொழில்களையும் செய்பவனென்றும், அசுரர்கள் உயிர்களைப் பறிப்பவனென்றும் பலவகைப் பொருள் உண்டு.[95]

கண்ணன் என்பதற்கு, அனைவருக்கும் கண்ணாக உள்ளவன் என்ற பொருளுண்டு. கம்பர் இராமனுக்குக் கண்ணன் என்ற பெயரினைச் சூட்டுவதோடு அப்பெயர் விளக்கத்தையும் தருவர்.

**'................................ யாவர்க்கும் கண்ணனென்றே**
**ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்திவிட்டான்'**[96]

என்பது கம்பர் வாக்கு.

ஆழ்வார்கள் கண்ணனைப் பல பெயர்களால் அழைத்தனர். கேசவன், பார்த்தசாரதி, மணிவண்ணன், அஞ்சனவண்ணன், திருவோணத்தான், தாமோதரன், கோவிந்தன், வாசுதேவன், பின்னை கேள்வன், மதுசூதனன், சனார்த்தனன் ஆகியன கண்ணனுக்கு வழங்கும் வேறு பெயர்கள்.

**அவதார நோக்கம்**

தேவர்கட்கு இடையூறு விளைவித்து வந்த கம்சனை அழிப்பதே அவதார நோக்கமாகும். கம்சனை அழித்த பின்பும் கண்ணன் இப்பூவுலகில் வாழ்கிறான். குருட்சேத்திரப் போரில் அர்ச்சுனனுக்குத் தேரோட்டியாக அமர்ந்து பகவத் கீதையை உலகுக்கு அளிக்கிறான். சமய இலக்கியத்திற்குக் கொடுமுடிபோல் பகவத் கீதை திகழ்கிறது. கண்ணனது அவதாரப் பெருமையினைப் பகவத் கீதை நன்கு உணர்த்துகிறது.

**ஆழ்வார்கள்**

ஆழ்வார்கள் கண்ணன்பால் மிகுந்த ஈடுபாடு காட்டினர்.

> **'கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்**
> **உண்ட வாயன் என்உள்ளம் கவர்ந்தானை'[97]**

என்றார் திருப்பாணாழ்வார்.

> **'கண்ணிநுண் சிறுதாம்பினால் கட்டுண்ணப்**
> **பண்ணிய பெருமாயன்'[98]**

என்பர் மதுரகவி ஆழ்வார்.

குழந்தைக் கண்ணனின் குறும்பில் ஈடுபட்ட பெரியாழ்வார்,

> **'உறியை முற்றத்து உருட்டி நின்றாடுவார்**
> **நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்**
> **செறிமென் கூந்தல் அவிழ்த்திளைத் தெங்கும்**
> **அறிவழிந்தனர் ஆய்ப் பாடியாயரே'[99]**

எனப் பாடுவர்.

ஆண்டாள் கண்ணனைத் தன் மணாளனாக எண்ணிப் பரவசமடைவர்.

> **'மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்தென்னைக்**
> **கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழிநான்'[100]**

என்பது ஆண்டாள் அமுதமொழி.

தாம் கண்ணனுக்கு ஆளாதலின் சிறப்பினை,

> **'கண்டும் தெளிந்தும் கற்றார் கண்ணற்காளன்றி யாவரோ'[101]**

என்பர் நம்மாழ்வார்.

**கம்பராமாயணத்தில் கண்ணன் அவதாரம்**

இராமாவதாரம் முந்தியது; கண்ணன் அவதாரம் பிந்தியது. எனினும் கம்பர் தம் நூலில் கண்ணன் அவதாரத்தைக் குறிப்பிட்டுள்ளார். கண்ணனது

அவதாரத்தில் பெரிதும் ஈடுபட்ட கம்பர் '**கண்ணன்**' என்னும் பெயரைத் திருமாலையும், இராமனையும் குறிக்கப் பலவிடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

> **'தாமரைக் கண்ணன்'**[102]
>
> **'கண்ணனே இதுகண்டிரும் பின்னென்றாள்'**[1]
>
> **'கதிர்கொள் தாமரைக் கண்ணனை'**[104]
>
> **'கண்ணனைக் கண்ணினோக்கிக் களித்தனன்'**[105]
>
> **'மெய்ஞ்ஞானக் கண்ணருள் செய் கண்ணன்'**[106]
>
> **'கமலக் கண்ணனைக் கையினிற் காட்டினாள்'**[107]
>
> **'தடம் பெருங்கண்ணன்'**[108]
>
> **'புண்டரீகக் கண்ணன்'**[109]
>
> **'கங்குற் பொழுதுந் துயிலாத கண்ணன்'**[110]
>
> **'கருணையங் பொயிலுளிருந்த கண்ணன்'**[111]
>
> **'கார்முகில் கமலம் பூத்த தன்றிவன் கண்ணன் கொல்லாம்'**[112]
>
> **'கண்ணனே எளியேமிட்ட கவசமே'**[113]

மேற்கண்டவற்றால் கண்ணன் என்ற பெயர் கம்பரைப் பெரிதும் ஈர்த்திருந்தமை புலனாகும். சடையப்ப வள்ளலின் பெயர்களுளொன்று கண்ணன் என்பதாலும் அவர் இச்சொல்லை மீண்டும் மீண்டும் பயன்படுத்தியிருக்கக் கூடும்.

## கண்ணனது லீலை

கம்பர் தம் காப்பியத்தில் கண்ணன் பற்றிய செய்திகளைக் கவிக் கூற்றாக அமைத்தலின் அது கால வழுவன்று என்பது போதரும்.

இடைக்கன்னியர் மகாகாளியைக் குறித்து நோற்றனராகி, யமுனையில் நீராடுமாறு தமது ஆடைகளைக் கரையே வைத்துச் செல்ல அதனையுணர்ந்த கண்ணபிரான் அத்துகில்களையெல்லாம் வாரியெடுத்துக் கடம்ப மரத்தில் மேலேறியிருந்து நிர்வாணமாக நதியில் நீராடிய அன்னார் பாவத்தை யொழிக்க இருகையாலும் தொழுமாறு கூறி, அவர்கள் அங்ஙனம்

செய்ய அன்னாரது சேலையைக் கொடுத்தனனென்ற செய்தி நூல்களில் இடம்பெறுகிறது.

கண்ணனது இச்செயலைக் கம்பர் தம் காப்பியத்தில் உவமையாகப் பயன்படுத்தியுள்ளார். நதிவெள்ளம் முல்லை நிலத்துச் சென்றமை கூறப்படுகிறது. பால் முதலியவற்றை வாரித் தன்னுள் கொள்ளுதல், குருந்த மரங்களை முறித்தல், ஆயர் மாதர் உடைகளைக் கவர்ந்து செல்லுதல் முதலியவை கண்ணனுக்கும் வெள்ளத்திற்குமுள்ள பொதுவான இயல்புகள். இதனைக் கம்பர்,

> 'செறிநறுந் தயிரும்பாலும் வெண்ணெயும் தெளிந்தநெய்யும்
> உறியொடு வாரியுண்டு குருந்தொடு மருதமுந்தி
> மறிவிழி ஆயமாதர் வனைதுகில் வாருநீரால்
> பொறிவரி அரவினாடும் புனிதனும் போலுமன்றே'[114]

என்பர்.

ஒரு யானை தன்னைக் கட்டியிருந்த கட்டுத்தறியைப் பேர்த்து இழுத்துச் சென்றது. அக்கட்டுத்தறி மோதியதனால் இரண்டு மாமரங்கள் முறிந்து விழுந்தன. இதற்குக் கண்ணன் தன் தாயால் கட்டப்பட்ட உரலை ஈர்த்துக்கொண்டு செல்லுகையில் அதனால் மோதப்பட்டு இரட்டை மருத மரங்கள் முறிந்து விழுந்த செயல் உவமையாகும்.

> 'திரண்ட தாணெடுஞ் செறிபணை மருதிடையொடியப்
> புரண்டு பின்வரு முரலொடும் போனவன் போல
> உருண்டு காறொடர் பிறகிடு தறியோடு மொருங்கே
> இரண்டு மாமர மிடையிற நடந்ததோ ரியானை'[115]

எனப் பாடுவர்.

வால்மீகி, இராமாயணக் காலத்தில் வாழ்ந்தவர். ஆதலின் பிந்திய அவதாரமாகிய கண்ணன் அவதாரத்தைத் தம் காவியத்தில் இடம்பெறச் செய்ய வாய்ப்பில்லை. இவ் அவதார காலத்திற்குப் பின் வாழ்ந்தவராகிய கம்பர் கண்ணன் அவதாரச் சிறப்பைத் தம் நூலுள் பாடத்தக்க வாய்ப்பினைப் பெற்றார். இவற்றால் கண்ணனது இளமைப் பருவ விளையாட்டுக்களில் கம்பருக்கிருந்த ஈடுபாடு புலனாகும்.

இவ் ஆய்வாளர் அறிந்தவரை கல்கி அவதாரத்தைக் கம்பர் பாடவில்லை.

**தொகுப்புரை**

இறைவன் வினைவயத்தாலன்றித் தன் இச்சையால் எடுக்கும் அவதாரங்கள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை பத்து ஆகும். உலகில் தீமையை அழித்து நன்மையை நிலைநாட்டவே இறைவன் அவதாரமெடுக்கிறான். மச்சம், வராகம், கூர்மம் ஆகிய அவதாரங்களைக் கம்பர் விரிவாகப் பாடவில்லை. வான்மீகத்தில் இல்லாத நரசிம்மாவதாரத்தை இரணியவதைப் படலம் சிறப்பாகப் பேசுகிறது. வால்மீகியை ஒட்டியே கம்பர் பரசுராமவதாரத்தைப் படைத்துள்ளார். வாமன அவதாரப் பெருமையினைக் கம்பர் சிறப்பாகப் பாடியுள்ளார். பலராம அவதாரத்திற்குக் கம்பர் சிறப்பிடம் தரவில்லையெனினும், கண்ணன் அவதாரத்தில் கொண்ட ஈடுபாட்டினை, அவர் கண்ணன் என்ற பெயரைப் பலவிடங்களில் பயன்படுத்தியிருப்பதன் மூலம் அறியலாம். கண்ணனின் பாலப்பருவ விளையாட்டுக்களைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். இவ் அவதார காலத்திற்குப் பின்னர்க் கம்பர் வாழ்ந்தாராதலின், கண்ணனின் அவதாரத்தைத் தம் நூலில் சிறப்பித்துப் பேச அவருக்குத் தடையேதும் இருக்கவில்லை எனலாம்.

## சான்றெண் விளக்கம்

1. **கலைக்களஞ்சியம்,** *தொகுதி - 1, ப.227.*
2. (in Hinduism) the descent to earth of a deity in human, animal or super human form.
   - ***The Oxford Paper Pack Dictionary,*** p.51.
3. Avatar a term used in Hindu mythology for incarnations of the deity. Vishnu is supposed to have appeared in ten different incarnations.
   - ***An Encyclopaedia of Religions,*** p.45.
4. Avatara (Sanskrit-descent) in Hinduism the incarnation of a deity in human or animal form to counteract some particular evil in the world.
   - ***The New Encyclopedia Britanica Micropaedia,*** Vol. I, p.677.
5. **திருவாய்மொழி,** *3.5.5.*
6. **Bagavad Gita,** 4.8.8.
7. **பாகவதம்,** *10.1.42.*
8. *சற்குணம், செ.,* **சங்க கால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள் - ஓர் ஆய்வு,** *டாக்டர் பட்ட ஆய்வேடு, பக். 15 - 16.*
9. **பரிபாடல் - 3,** *அடி 81 - 82.*
10. In the later writings called Puranas, the number was increased to eleven and even to twenty or twenty two.
    - ***An Encyclopedia of Religions,*** p.45.
11. **பெரியாழ்வார் திருமொழி,** *4.9.9.*
12. **கலைக்களஞ்சியம்,** *தொகுதி - 1, ப.227.*
13. **பெரியாழ்வார் திருமொழி,** *3.3.7.*
14. *மேலது, 3.9.2.*
15. **நாச்சியார் திருமொழி,** *8.5.*
16. **பெருமாள் திருமொழி,** *9.9.*
17. **திருச்சந்த விருத்தம்,** *28.*
18. **பெரிய திருமொழி,** *3.4.1.*
19. **திருவாய்மொழி,** *3.4.8.*
20. **பெரியாழ்வார் திருமொழி,** *4.9.9.*
21. **கந்தபுராணம்,** *1759.*
22. **வில்லி பாரதம்,** *ஆதி பருவம், 7.81.*
23. II *: 5 : 2.*
24. **பெரிய திருமொழி,** *11.4.2.*
25. I *: 9 : 24.*
26. V *: 1 : 41.*

27. IV : 3 : 43.
28. சற்குணம், சொ., **சங்க கால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் தசாவதாரங்கள் - ஓர் ஆய்வு,** ப. 59.
29. **பரிபாடல்,** - 3, அடி - 23 - 24.
30. **பெரிய திருமொழி,** 3.2.3
31. III : 1 : 58.
32. IV : 3 : 43.
33. V : 7 : 8.
34. V : 11 : 5.
35. VI : 36 : 215.
36. **பாகவதம்,** ஏழாவது ஸ்கந்தம், அத்தியாயம் 1-4.
37. **விஷ்ணு புராணம்,** முதல் அம்சம், அத்தியாயம் 6-20.
38. **பரிபாடல்** 4, அடி 10-21.
39. **சிலப்பதிகாரம்,** ஆய்ச்சியர் குரவை, முன்னிலைப்பரவல், 3.
40. **பெரிய திருமொழி,** 1.7.
41. ராதாகிருஷ்ணபிள்ளை, எம்., **கம்பர், கம்பன் கவி அமுதம்,** ப.6.
42. செல்வகேசவராய முதலியார், தி., **கம்பநாடர்,** ப. 62.
43. IV : 7 : 71.
44. IV : 16 : 49.
45. VI : 3 : 22.
46. VI : 3 : 23.
47. VI : 3 : 25.
48. VI : 3 : 28.
49. VI : 3 : 42.
50. VI : 3 : 44.
51. குருசாமி, மா. ரா. போ., **இராமாயணச் சிந்தனைகள்,** ப. 70.
52. I : 15 : 1.
53. IV : 7 : 29.
54. V : 1 : 82.
55. V : 4 : 9.
56. V : 5 : 48.
57. VI : 31 : 210.
58. **பெரிய திருமொழி,** 3.10.5.
59. **நாச்சியார் திருமொழி,** 4.9.
60. **கலித்தொகை** 124, அடி - 1.
61. **பரிபாடல்** 3, அடி 20.
62. **பெரும்பாண்** அடி - 29.

63. **முல்லைப்பாட்டு,** *அடி 3.*
64. **சிலப்பதிகாரம்,** *ஆய்ச்சியர், படர்க்கைப் பரவல் 1.*
65. **மணிமேகலை** *4, அடி - 124.*
66. **பெரிய திருமொழி,** *1.8.7.*
67. I *: 8 : 22.*
68. I *: 8 : 33.*
69. **திருக்குறள்,** *அழுக்காறாமை 4.*
70. I *: 13 : 8.*
71. I *: 14 : 45.*
72. IV *: 14 : 70.*
73. V *: 5 : 103.*
74. VI *: 21 : 116.*
75. VI *: 15 : 57.*
76. VI *: 21 : 116.*
77. VI *: 23 : 41.*
78. VI *: 23 : 59.*
79. VI *: 27 : 41.*
80. VI *: 34 : 27.*
81. VI *: 38 : 35.*
82. **பெரியாழ்வார் திருமொழி** *4.5.9.*
83. **அகநானூறு,** *220, அடி - 58.*
84. **மணிமேகலை** *22, அடி - 25.*
85. **பெரிய திருமொழி,** *5.3.1.*
86. **திருவாய்மொழி,** *6.2.10.*
87. I *: 22 : 33.*
88. *சற்குணம், சொ.,* **சங்க கால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள் - ஓர் ஆய்வு,** *ஆய்வேடு, ப. 170.*
89. *மேலது, ப. 170.*
90. **புறநானூறு,** *56, அடி 12.*
91. *மேலது 58, அடி - 14.*
92. **சிலப்பதிகாரம்,** *இந்திரவிழவு, அடி - 171.*
93. III *: 1 : 38.*
94. **பெரியாழ்வார் திருமொழி,** *1.1.7.*
95. **வில்லிபாரதம்,** *கிருட்டினன் தூதுச் சருக்கம், முன்னுரை.*
96. I *: 19 : 6.*
97. **அமலானாதிப்பிரான்,** *10.*
98. **கண்ணிநுண் சிறுதாம்பு,** *1.*

99. பெரியாழ்வார் திருமொழி, *1.1.4.*
100. நாச்சியார் திருமொழி, *6.6*
101. திருவாய்மொழி, *7.5.7.*
102. I : *8 : 49.*
103. I : *19 : 26.*
104. II : *6 : 12.*
105. II : *6 : 41.*
106. III : *5 : 35.*
107. III : *6 : 15.*
108. IV : *6 : 9.*
109. V : *5 : 89.*
110. VI : *1 : 2.*
111. VI : *4 : 50.*
112. VI : *4 : 137.*
113. VI : *30 : 72.*
114. I : *1 : 15.*
115. I : *14 : 3.*

# இயல் 5

## கம்பரும் இராமாவதாரமும்

### முன்னுரை

கம்பர் திருமாலை வழிபட்டவர். திருமாலின் அவதாரங்களுள் இராமாவதாரத்தில் அவருக்கு ஈடுபாடு மிக்கிருந்தது. எனவே அவ் அவதாரப் பெருமையை அவர் தம் நூலில் மிக விரிவாகவும், ஆழமாகவும், நுட்பமாகவும் விளக்க முற்படுகிறார். இராமாவதாரத்தில் மானிடத்தன்மை ஓங்கி நிற்றலின் இதனை மிகுதியும் முழுமைபெற்ற அவதாரம் எனலாம். இராமனது அவதாரத் தன்மையை ஆராய இவ்வியல் முற்படுகிறது. கம்பரின் கடவுட் கோட்பாட்டை வரையறுக்க இவ்வியல் மேலும் துணைபுரியும்.

### திருமாலின் அவதாரங்கள் - இராமாவதாரம்

அவதார மூலமே தம் அடியார்களைக் காத்தலாகிய செயலை மேற்கொண்ட திருமால், அம்முறையிலேயே மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன அவதாரங்களை எடுத்தார். பலராம, பரசுராம அவதாரங்கள் இறைவனின் அம்சாவதாரங்களாம். அம்சாவதாரமாவது இறைவனின் ஆற்றலில் ஒரு பகுதியை மட்டுமே கொண்டு விளங்குதல். இராம, கிருட்டின அவதாரங்கள் பூரண அவதாரங்கள் '**கிருஷ்ணாவதாரத்தில் பரம்பொருள் தன் தெய்வத்தன்மை தோன்றும்படிச் செய்ய நேர்ந்த சந்தர்ப்பங்கள் பல உள. ஆனால் இராமவதாரத்தில் அத்தன்மையைக் காண்டல் அரிதாதலால் இதனைப் பரிபூர்ண அவதாரம் - அதாவது மானிடத்தன்மை ஓங்கி நின்ற பிறவி என்றே சொல்வது பொருந்தும்**''[1] என்பர். இவ் அவதாரச் சிறப்பினைச் சங்கப் பாடல்கள், காப்பியங்கள், மற்றும் ஆழ்வார் பாசுரங்கள் பரக்கப் பேசுகின்றன. கம்பரது காப்பியம் இராமனது அவதார இயல்புகளை விரிவாக உரைக்கின்றது.

### சங்கப் பாடல்கள்

சங்க இலக்கியங்களில் மாயோன், நெடியோன், முந்நீர் வண்ணன் ஆகிய பெயர்கள் திருமாலைக் குறிக்கும் வேறு பெயர்களாம்.

தொல்காப்பியத்தில், **கட்டில் நீத்த பால்** என்னும் புறத்துறைக்கு நச்சினார்க்கினியர் சங்க காலத்தில் வழங்கிய இராமாயணத்தினின்றும் ஒரு பாடலை மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார். இப்பாடலில் இராமன் திருமாலென்றும், அவன் பேராற்றல் உடையவன் என்றும் காட்டப் பெறுகிறான்.

> **'.......................................... இஃதெவன்**
> **குறித்தன நெடியோன் கொல்லோ மொய்தவ**
> **வாங்கு சிலை இராமன்'[2]**

சங்க காலத்தில் வழக்கிலிருந்தது இவ் இராமாயணப் பாடல் எனலாம். வீரசோழிய உரையில் கண்ட இராமாயண வெண்பா இராமனைத் திருமாலென்றே கூறி அவனை எதிர்த்த இராவணன் ஆற்றலை அவனது ஆற்றலுடன் ஒப்பிட்டுப் பேசுவதைக் காணலாம்.[3] இதனால் வெண்பா வடிவில் ஓர் இராமாயண நூல் சங்க காலத்தில் இருந்தமை போதரும்.

> **'இருநிலங் கடந்த திருமறு மார்பின்**
> **முந்நீர் வண்ணன் பிறங்கடை'[4]**

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் சோழனைத் திருமாலின் வழித்தோன்றல் எனக் கூறுகின்றன. சோழர்கள் சூரிய குலத்தினர். இராமன் சூரிய குல முன்னோன் ஆதலின் இங்குத் திருமாலென்றது இராமன் எனக் கொள்ளுதலே பொருத்தமாகும்.

கோடிக்கரையில் ஓர் ஆலமரத்தின் கீழ் இராமன் குரங்கினத் தவரோடு மந்திராலோசனை செய்தான். அம்மரத்தின் மீதிருந்த பறவை இனங்கள் பேரொலி செய்து அவர்க்கு இடையூறு விளைத்தன. அதனைக் கண்ட இராமன் தன் கடவுட்டன்மையால் அவ்வொலியை அவித்தான் என்ற செய்தி மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனாரின் அகநானூற்றுப் பாடலில் உவமையாக ஆளப்பட்டுள்ளது.

> **'வெல்போரிராமன் அருமறை கவித்த**
> **பல் வீழாலம் போல**
> **ஒலி அவிந்தன்றிவ் அழுங்கலூ ரே'[5]**

**காப்பியங்கள் - சிலப்பதிகாரம்**

இராமன் திருமாலின் அவதாரம் என்பதை வெளிப்படையாகக் குறிப்பிடும் முதல் நூல் சிலப்பதிகாரம் ஆகும். இதில் இளங்கோவடிகள்,

இராமன் வேதமுதல்வனாகிய பிரமனைப் படைத்த திருமாலே என்பர். கோவலன் தனக்கு நேர்ந்த துன்பம் பற்றிக் கவுந்தி அடிகளிடம் கூற, அப்போது அத்துறவியார்,

> **'தாதை ஏவலின் மாதுடன் போகிக்**
> **காதலி நீங்கக் கடுந்துய ருழந்தோன்**
> **வேத முதல்வற் பயந்தோ னென்பது**
> **நீயறிந் திலையோ நெடுமொழியன்றோ'[6]**

எனக் கூறினார். சமணத் துறவியாகிய கவுந்தி அடிகள் திருமாலின் அவதாரத் தத்துவத்தில் ஈடுபாட்டுடன் மொழிவது குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும் திரிவிக்கிரமனாக மூவுலகை ஈரடியால் அளந்த இராமன் தம்பியொடுங் கான் போந்து சோவென்னும் அரணை வென்று இலங்கையை அழித்தான் என்பதை,

> **'மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பாவகைமுடியத்**
> **தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங்கான் போந்து**
> **சோவரணும் போர் மடியத் தொல்லிலங்கை கட்டழித்த**
> **சேவகன் சீர்கேளாத செவியென்ன செவியே**
> **திருமால் சீர்கேளாத செவியென்ன செவியே'[7]**

என ஆயர்குலப் பெண்கள் குரவைக் கூத்தாடித் திருமாலைப் பாடிப் பரவினர். இராமனைச் சேவகன் என்றார் இளங்கோவடிகள் என்பது ஈண்டு நோக்கத்தக்கது.

### மணிமேகலை

திருமால் இராமனாக அவதரித்ததை மணிமேகலை உணர்ததுகிறது. காயசண்டிகை என்னும் பெண் யானைத்தீ என்னும் நோயால் பீடிக்கப்பட்டாள். எவ்வளவு உண்டாலும் அவள் பசி அடங்கவில்லை. வாய்வழிச் சென்ற உணவு அவள் பசியை அடக்காமல் மறைந்த புதுமைக்கு உவமை கூறும் முறையால் இராமன் சேதுவில் அணை கட்டியபொழுது குரங்குகள் எடுத்தெறிந்த கற்கள் கடலில் சென்று மறைந்துவிட்டமை உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

> **'நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி**
> **அடல் அருமுந்நீர் அடைத்த ஞான்று**
> **குரங்கு கொண்டெறிந்த நெடுமலை யெல்லாம்**

**அணங்குடை அரக்கர் வயிறு புக்காங்கு'**[8]

இதில் **'நெடியோனாகிய திருமாலே இந்நிலவுலகில் இராமனாகத் தோன்றினான்'** எனச் சாத்தனார் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

**தேவாரம்**

இராமேச்சுரம் இராமனால் கட்டப்பட்ட கோயில் என்பார் திருநாவுக்கரசர்.

**'செங்கண் மால்செய்த கோயில்திரு இராமேச்சுரத்தை'**[9]

என்பது அவர் வாக்கு. இங்கு இராமனைச் **'செங்கண்மால்'** என்றார் அப்பர் பெருமான்.

**திவ்வியப் பிரபந்தம்**

முதலாழ்வார்கள் இராமனைத் தம் பாசுரங்களில் சிறப்பித்து உரைக்கின்றனர். ஒருமுறை படைப்புக் கடவுளான பிரமனை வணங்கி வரம் பெறுவதற்காக இராவணன் சென்றபோது குழந்தை வடிவிலிருந்த திருமால் அவனது பத்துத் தலைகளையும் எண்ணித் தான் இராமன் என்பதை உணர்த்தினான். இதைப் பொய்கையாரும்[10], பேயாரும்[11] குறிப்பிடுவர்.

திருமழிசை ஆழ்வார் யோக வலிமையால் இராமாயணக் காட்சியைக் காண்கிறார்.

**'இது இலங்கை ஈடழியக் கட்டிய சேது<br>இது விலங்கு வாலியை வீழ்த்தது - இதுவிலங்கை<br>தானொடுங்க வில்நுடங்க தண்டார் இராவணனை<br>ஊனொடுங்க எய்தான் உகப்பு'**[12]

என்பது அவர் பாடல்.

**நம்மாழ்வார்**

புல் எறும்பு முதலாக அனைத்து உயிர்களுக்கும் நற்கதியளிப்பவன் இராமபிரானென்றும், மனிதர்களை ஈடேற்றுவதற்காக நாட்டிற் பிறந்து படாதன பட்டு, நாட்டு மக்களை வருத்தும் அரக்கரை அழித்து உலகோரைக் காத்து உய்யச் செய்தவன் அவன் என்றும் கூறுகிறார். இவைகளைக் கேட்டும் நாராயணனுக்கு ஆளாகாமல் இருக்க இயலுமா? என்பர் நம்மாழ்வார்.

*'கற்பார் இராமபிரானை யல்லால் மற்றும் கற்பரோ
புற்பா முதலா புல்லெறும்பு ஆதியொன்றின்றியே
நற்பா லயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே'*[13]

*'நாட்டிற் பிறந்தவர் நாரணற் காளன்றி யாவரோ
நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டை யளித்து உய்யச் செய்து நடந்தமை கேட்டுமே'*[14]

இதில் நம்மாழ்வார் இராமனின் இறைத்தன்மையை வெளிப்படுத்துகிறார்.

**குலசேகர ஆழ்வார்**

இராமனை மூன்று பதிகங்களாற் பாடியவர் குலசேகரர். இதனால் இவரைப் பெருமாள் என்றே வைணவ உலகம் பாராட்டும். **'சேக்கிழார் பெருமானுக்குப் பெரியபுராணம் பாடச் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் 'தில்லைவாழ் அந்தணர்' என்னும் பதிகம் கிடைத்தது. அதுபோல இராமாவதாரம் பாடத் திருவுள்ளம் பற்றிய கவிச்சக்கரவர்த்திக்கு 'அங்கணெடுமதில்' என்னும் பதிகம் கிடைத்தது'**[15] என்பர். குலசேகரர் இராமனைக் குழந்தையாகப் பாவித்துத் தாலாட்டுப் பாடுகிறார்.

*'தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே
யாவரும் வந்தடிவணங்க அரங்கநகர் துயின்றவனே
காவிரி நன்னதிபாயும் கணபுரத்தென் கருமணியே
ஏவரி வெஞ்சிலைவலவா இராகவனே தாலேலோ'*[16]

என்பது ஒரு தாலாட்டுப் பாடல்.

**'..... வனம் சென்ற இராமனை எண்ணித் தசரதன் புலம்பும் பிரிவுத் துயரையும், தந்தை மகன் உறவு நிலையில் இவர் (குலசேகரர்) அனுபவிக்கிறார். மேலான பரம்பொருள் தனக்கு மகனாய்ப் பிறந்தும் அரச உரிமையைத் துறந்து தானே விரும்பி நாடு கடந்த கொடுமை இந்தப் பிரிவை ஆழமுடையதாக்குகிறது. கடவுளைப் பிரிந்த பக்தனுக்குச் சாவு மேலானது. தசரதன் இறந்துபடுகிறான். மனிதன் என்பவன் முழுதும் கடவுளைச் சார்ந்தே இருக்கிறான். அன்பினாலும் பக்தியினாலுமே இறைவன் மனிதனிடம் வெளிப்படுகிறான் என்பதை இது காட்டுகிறது'**[17] என்பர்.

இராமனது தெய்வத்தன்மையில் குலசேகரர் பெரிதும் ஈடுபாடு காட்டினார் என்பதை இக்கூற்று அரண் செய்கிறது.

**பெரியாழ்வார்**

நெற்றிக் கருங்குழல் என்னும் பதிகத்தில் அசோகவனத்தில் இராமபிரானையே எண்ணியெண்ணி உருகியிருந்த பிராட்டிக்கு அனுமன் அடையாளம் தெரிவிப்பதாக அமைந்துள்ள பெரியாழ்வார் பாடல் ஒன்றின் செய்தி வான்மீகத்திலும் கம்பரிலும் இல்லை. பிராட்டி மல்லிகை மாலையால் இராமனைப் பிணித்ததை அனுமன் அடையாளங்களுள் ஒன்றாகச் சீதையிடம் கூறினான்.

> **'அல்லியம் பூமலர்க் கோதாய் அடிபணிந்தேன் விண்ணப்பம்**
> **சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே**
> **எல்லியம் போதினிதிருத்தல் இருந்ததோரிட வகையால்**
> **மல்லிகை மாலை கொண்டு அங்கு ஆர்த்ததுமோர் அடையாளம்'[18]**

இப்பகுதியைச் சுந்தரகாண்டத்தில் சேர்த்துவிட்டால் அது பாலில் கலந்த சர்க்கரைபோல அற்புதமான சுவையைச் சேர்க்குமென்பர்.[19]

**ஆண்டாள்**

திருப்பாவையில் ஆண்டாள்,

> **'அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி**
> **சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்திறல் போற்றி'[20]**

என இராமனைப் போற்றுகிறார்.

**தொண்டரடிப் பொடியாழ்வார்**

இவ் ஆழ்வார் இராமனைப் பரதெய்வம் என அறுதியிட்டுரைக்கிறார்.

> **'தலையறுப் புண்டும் சாகேன்**
> **சத்தியம் காண்மின் ஐயா**
> **சிலையினால் இலங்கை செற்ற**
> **தேவனே தேவனாவான்'[21]**

என்பது அவரது வாக்கு.

இராமன் கடலில் அணை கட்டியபோது, ஓர் அணில் கடலில் குதித்து மணலிற் புரண்டு அணையை அடைத்துத் தானும் இராம காரியத்திற்கு உதவியது. இராமன் அவ் அணிலை அன்போடு வருடியதால் அதன் உடலில் மூன்று கோடுகள் உண்டாயின என்பது செவிவழிச் செய்தி. அணிலின் செயலைத் தொண்டரடிப் பொடி ஆழ்வார்,

> **'குரங்குகள் மலையைத் தூக்கக்**
> **குளித்துத் தாம் புரண்டிட் டோடி**
> **தரங்க நீரடைக்க லுற்ற**
> **சலமிலா அணிலும் போலேன்'**[22]

என அணிலின் செயலைப் பாராட்டினார். இதனால் இராமன் மீது ஆழ்வார் கொண்டிருந்த பக்தி புலனாகிறது.

## திருமங்கை ஆழ்வார்

திருமங்கை ஆழ்வாரின் திருநெடுந் தாண்டகம் பிற அவதாரங்களைப் போல் இராமாவதாரத்தையும் உயர்த்திப் பேசுகிறது. இவ் ஆழ்வார் உலகை இடந்தவனும், உண்டவனும், உமிழ்ந்தவனும், அளந்தவனும், ஆண்டவனும் இராமனே என்பதை,

> **'தேராளும் வாளரக்கன் செல்வம் மாளத்**
> **தென்னிலங்கை முன் மலங்கச் செந்தீஓங்கி**
> **போராளன் ஆயிரந்தோள் வாணன் மாளப்**
> **பொருகடலை அரண் கடந்து புக்குமிக்க**
> **பாராளன் பாரிடந்து பாரையுண்டு**
> **பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட**
> **பேராளன் பேரோதும் பெண்ணைமண்மேல்**
> **பெருந்தவத்தள் என்றல்லாற் பேசலாமே'**[23]

எனத் திருமாலின் செயல்களை இராமன் மீது ஏற்றி உரைப்பதன் மூலம் அவனது பரத்துவம் வெளிப்படுத்துவது மனங்கொள்ளத்தக்கது.

## கம்பர் இராமாவதாரத்தை விளக்கும் விதம்

கம்பர் தம் நூலில் இராமாவதாரப் பெருமைகளை விரிவாக விளக்குகிறார். அவற்றைப் பின்வருமாறு பகுத்துக் காணலாம்.

1. நூற்பெயர்
2. வால்மீகி இராமனும் கம்பராமனும

3. அவதார நோக்கம்
4. மானுடப் பண்பு
5. இராமாவதாரம் - கவிக்கூற்று
6. இராமாவதாரம் - பாத்திரக்கூற்று

**நூற்பெயர்**

கம்பர் இயற்றிய காப்பியம் கம்பராமாயணம் என இன்று வழங்கப்படுகிறது. ஆயினும் நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் இராமாவதாரம் என்பதாகும். இதனை,

> **'நடையினின்றுயர் நாயகன் தோற்றத்தின்**
> **இடைநிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்**
> **தொடை நிரம்பிய தோமறு மாக்கதை'[24]**

என்னும் தற்சிறப்புப் பாயிரத்தால் அறியலாம்.

**'தெய்வமே மானிடமாக அவதரித்து உத்தம மானிடத் தன்மையை உலகுக்குணர்த்திய நிலையைச் சிறப்பிப்பதே கம்பர் மேற்கொண்ட காப்பிய நோக்கம் என்பதை இவர் சூட்டிய நூற்பெயரே குறிக்கும்'[25]** என்பாரது கூற்று இதனை மேலும் அரண் செய்வதாக அமைந்துள்ளது.

பரம்பொருள் அல்லதை அழித்து நல்லதை நிறுத்த மண்ணிற்கு இறங்கி வந்து அவதரிப்பதே காப்பியத்தின் பாடுபொருளாக இருப்பதால் 'இராமாவதாரம்' என்று தம் நூலுக்குப் பெயர் இட்டிருப்பார் என்று கூறுவது பொருத்தமாகத் தோன்றுகிறது.

> **'ஆறுகொள் சடிலத்தானும் அயனுமென் றிவர்களாதி**
> **வேறுள குழுவையெல்லாம் மானுடம் வென்றதம்மா'**

என மானிடத்தின் வெற்றியைப் பாடியிருப்பதும் இராமாவதாரம் என்ற பெயரை வலியுறுத்துகிறது.[26]

இறைவன் பிறவாமையை இயல்பாகக் கொண்டவன். எனினும் உயிர்களை ஈடேற்றவே பிறவியெடுக்க விரும்புகிறான் என்பதைப்

> **'பிறப்பில் பல்பிறவிப் பெருமாள்'[27]**

என்று ஆழ்வார் அருளிச் செய்தார்.

இறைவன் எடுக்கும் பிறவி பகவதவதாரம் எனப்படும் இதனால்

திருமாலின் அவதாரச் சிறப்பை விளக்குவதே கம்பரின் காப்பிய நோக்கமாக இருந்தது என்பதையும், இதனால் இந்நூலுக்குக் கம்பரிட்ட இராமாவதாரம் என்ற பெயர் பொருத்தமானதே என்பதையும் உணரலாம்.

## வால்மீகி இராமனும் கம்பராமனும்

வால்மீகி இராமாயணத்தில் இராமன் பல நற்குணங்கள் நிறைந்த ஒப்பற்ற தலைவனாகச் சித்திரிக்கப் பெறுகிறான். அந்நூலில் அவனது தெய்வீகப் பண்பைவிட மானுடப் பண்பே மேலோங்கியுள்ளது. இதனை முதறிஞர் இராஜாஜி பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

> "வால்மீகியார் எழுதிய இராமாயணத்தில் இராமன் ஓர் அவதார புருடனாக அல்லாமல் ஓர் ஒப்பற்ற கதைத் தலைவனாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறான். சில அதிகாரங்களில் அவனை ஓர் அவதார புருடனாகக் குறிப்பிட்டிருந்தாலும் கதைத் தொகுதியில் அவனைத் தெய்வீக அருள்பெற்ற ஓர் இளவரசனாகவே காட்டுகிறார்"[28].

வால்மீகியைப் போன்று கம்பர் தம் காப்பிய நாயகனை மனிதர்களில் சிறந்த மனிதனாக - புருடோத்தமனாக மட்டும் படைக்கவில்லை. கம்பரையும் வால்மீகியையும் ஒப்பிட்டுக் காணும்போது வால்மீகி இராமன் பல்வேறு நற்குணங்கள் நிறைந்த மாவீரனாகத் திகழ்வதையும், கம்பராமன் தெய்விகம் மிக்க தலைவனாக விளங்குவதையும் அறியமுடிகிறது.

> "கம்பர் காலத்தில், சிறந்த மனிதனாக விளங்கிய இராமன் தெய்வ நிலைக்கு உயர்வதோடு அவன் பெயரை உச்சரித்தாலே வானுலகு கிட்டும் எனக் கருதப்பட்டது. மூன்று நான்கு இடங்களில் வான்மீகி இராமனைத் தேவனாகக் காட்டுகிறார். அவற்றையும் தற்கால ஆய்வாளர்கள் இடைச்செருகல் எனக் கருதுகின்றனர். வான்மீகத்தில் இராமன் நற்குணங்கள் நிறைந்த இளவரசன்; ஒரு மனிதனே. ஆனால் தெய்வீகம் கலவாத இராமனைக் கம்பரில் காணல் அரிது. அவனே பரம்பொருள்; அவனே நாராயணன். அவனே பாற்கடலில் அறிதுயில் கொண்ட பரமன். அவனே மறைகளாலும் அறியப்படாதவன். மாயமானைப் பின்தொடரும் அவன் திருவடிகளே மூன்றுலகங்களையும்

> அளந்தவை. இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் நோக்கி மாறிப் புக்கிதயம் புகுந்தது, கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப் பின் கூடிய நிலையல்லவா? இதுவே தொடக்கம் முதல் இறுதிவரை இராமனை இறைநிலையில் வைத்துப் பேசுவது, அவனை உணர்ச்சிமிக்க மானுடனாகச் சித்திரிப்பதற்குத் தடையாக இல்லை. ..... தெய்வீகமும் மானிடமும் இணைந்து செல்லும் இந்த இணைநிலை விவிலியத்திலும் சுவர்க்க மீட்சியிலும் இடம்பெறும் கிறித்து பெருமானோடு ஒப்பிட்டுக் காணத் தக்கதாகும்."[29]

என்பர் வ.வே.சு.ஐயர். இதனால் வால்மீகி ராமாயணத்தில் இடம்பெறும் இராமன் மானுடப் பண்பு விஞ்சிய தலைவன் என்பதையும், கம்பராமன் தெய்வப் பண்பு விஞ்சிய அவதாரம் என்பதையும் அறியமுடிகிறது.

**அவதார நோக்கம்**

அறத்தை நிலைநிறுத்தவும், மறத்தை வீழ்த்தவும் இறைவன் இராமனாக அவதரித்தான். இராமன் '**நல்லறம் நிறுத்தத் தோன்றியவன்**'[30]. மூவர்க்கும் தலைவனாகிய மூர்த்தியே அறத்தைக் காக்கக் காகுத்த வேடந்தாங்கி வந்தான்[31] என்றான் கம்பரின் வீடணன். தான் பிறந்ததன் நோக்கம் அந்தணர்களைக் காத்தற்பொருட்டே என்பதை,

> 'அறந்தவா நெறி அந்தணர் தன்மையை
> மறந்த புல்லர் வலி தொலையேனெனில்
> இறந்து போகினு நன்றிது வல்லது
> பிறந்து யான்பெறும் பேறென்ப தியாவதே'[32]

எனத் தன் பிறவியின் நோக்கத்தை இராமன் விளக்கினான்.

> 'விரிந்த தீவினை செய்த வெவ்விய தீவினையாலும்
> அருங்கடையின் மறையறைந்த அறஞ்செய்த வறத்தாலும்'[33]

கோசலை இராமனைப் பெற்றாள் என்றார் கவி. இதனாலும் அவதார நோக்கம் நன்கு புலனாகிறது.

**கம்பரின் ஈடுபாடு**

கம்பர் தாம் இராமன்பால் கொண்ட ஈடுபாடு புலப்படுமாறு

காப்பியத்தின் இடையிடையே பேசுகிறார். அவர் இராமனை '**எனை ஆள் வரதன்**'[34], '**எமையுடை இறைவன்**'[35], '**எங்கள் நாயகன்**'[36] என்னும் தொடர்களால் குறிப்பிடுவதனால் அவரது இராம பக்தி வெளிப்படுகிறது.

## இராமனின் மானுடப் பண்பு

தெய்வமே மனிதனாகத் தோன்றிச் செயல்பட்ட கதையே இராமாயணம். இறைவன் மனித வடிவில் வந்து செயற்கரிய செய்து, பகையை அழித்து வெற்றி வாகை சூடுகிறான். மனிதப் பண்பில் உயர்ந்து நிற்பவர்கள் தெய்வ நிலைக்கு உயரமுடியும். இங்குக் கம்பர் மனிதப் பண்பும், தெய்வீக ஆற்றலும் நிறைந்துள்ள ஒரு பாத்திரமாக இராமனைப் படைத்துள்ளார். இவ்விரு பண்புகளுள் எது மேலோங்கியுள்ளது என அறியவியலா வகையில் இராமனது பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

> **"பரம்பொருளே மனிதனாக அவதரித்த கதையைக் கம்பர் காப்பியமாகப் பாடுவதால் காப்பியத் தலைவன் மனித நிலையிலும் தெய்வ நிலையிலும் காட்டப்பட வேண்டியவனாகிறான். அரிஸ்டாடில் கொள்கைப்படி இது முன்னுக்குப் பின் தொடர்பில்லாமல் அமையும் பண்பு. ஆனால் கம்பர் இச்சிக்கலை மிக நுட்பமாகக் கையாண்டு இரண்டிற்கும் முரண் தோன்றாதவாறு ஒருமைப் பாத்திரமாகப் புனைந்து விடுகிறார்"**[37]

என்பர். இதனால் மானுடப் பண்பும், இறை இயல்புகளும் ஒருங்கே அமையப்பெற்ற நாயகனாக இராமனைக் கம்பர் புனைந்துள்ளார் என்பது மனங்கொள்ளத்தக்கது.

## அழியா அழகன்

மனிதனாக இம்மண்ணிற் பிறந்த இராமன் அழகிய தோற்றமுடையவன்; நெடிய உருவினன்; தாள்தோய் தடக்கையன்; ஆடவர் பெண்மையை அவாவும் மராமரம் போல் வளர்ந்த தோளினன். அவனது நடை சிங்கம், காளை, யானை, மேரு ஆகியவற்றை ஒத்திருக்கும்.[38] அவன் முகம் சந்திரனுக்கு ஒப்பானது. அவனது கூந்தல் இந்திரநீலம் போற் கரியது. அவனை '**அழியா அழகுடையான்**'[39] எனக் கம்பர் பாராட்டுவர்.

## மூத்தோர் சொல் போற்றல்

இராமன் தாய், தந்தை, ஆசான், இறைவன் என்னும்

நாற்பெருங்குரவரைப் பணிந்து ஒழுகியவன். அவன் தன்னைப் பெற்ற தாய் கோசலையையும், வளர்த்த தாய் கைகேயியையும் வணங்கி வழிபட்டான். தசரதனிடம் தான் பெற்ற வரங்களை இராமனுக்குத் தெரிவிக்கக் கைகேயி இராமனை வரவழைத்தாள். கைகேயியின் முன்னிலையில் வந்த அவன் அவளைத் தரையில் வீழ்ந்து வணங்கினான். பின்னர் எழுந்து வளைந்து வாய் பொத்தி நின்றான். அவன் நிலை மாலையில் வீடு வந்து சேர்ந்த தாய்ப்பசுவினைக் கண்ட கன்று போன்றிருந்தது. இதனை,

> **'வந்தவ டன்னை சென்னி மண்ணுற வணங்கிவாசச்**
> **சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையிற் புதைத்து மற்றைச்**
> **சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்றான்**
> **அந்திவந் தடைந்த தாயைக் கண்டவான் கன்றினன்னான்'[40]**

என்பர்.

**'தசரதன் கொடுத்த இரண்டு வரங்களை நான் உனக்குச் சொல்வேன்'[41]** எனக் கைகேயி சொல்ல, **'என் தந்தை ஏவத் தாங்கள் வாயினாற் சொன்னால் அது நான் பெற்ற பேறாகும்'[42]** என்றான்.

'நாட்டை ஆளும் பொறுப்பை ஏற்க' என்றான் தசரதன். **'தந்தை ஏவியதைச் செய்தலன்றோ என் கடமை. அதிலே என்ன நீதியுளது'[43]** என அப்பணியை ஏற்க இசைந்தான். **'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை'** என்னும் முதுமொழி போற்றும் பண்பினனாக விளங்கினான் என்பதை அறியலாம்.

இராமன் வசிட்டனையும், விசுவாமித்திரனையும் ஆசான்களாக ஏற்று அவர்தம் சொல்வழி நின்றான். **'தாடகையைக் கொல்க'** என விசுவாமித்திரன் இராமனிடம் கூறினான். தாடகை பெண்ணாதலின் முதலில் தயங்கினான். இத்தகைய கொடியவள் பெண்ணாகாள் என முனிவன் பல சான்றுகளைக் காட்டிச் சொல்ல, **'அறனல்லவும் எய்தினால் அது செய்க என்று ஏவினால், உன் உரையையே வேதமாகக் கொண்டு செயல்படுவதே அறச் செயலாகும்'[44]** என்று கூறித் தாடகையை வதைத்தான். இதனால் இராமன் மூத்தோர் மொழி போற்றிச் செயல்பட்ட பண்பினை அறியலாம்.

### மக்களிடம் அன்பும் பரிவும்

இராமன் இட்சுவாகு மன்னன் வழிவந்த பெருமகன். மக்கள் தலைவன். அதனால் மக்களிடம் பேரன்பு செலுத்தினான். அவன்

இளையனாயிருந்தபோதே மக்களைக் கண்ட காலை அவர் நலம் உசாவினான். இது அவனது அருங்குணமாகும். இதனைக் கம்பர்,

> **'எதிர் வருமவர்களை எமையுடை இறைவன்**
> **முதிர்வரு கருணையின் முகமல ரொளிரா**
> **எதுவினை இடரிலை இனிது நுமனையும்**
> **மதிதரு குமரரு வலியர் கொலெனவே'[45]**

என இராமனது சீரிய பண்பு புலப்படுமாறு பாடுகிறார்.

இந்த உலகத்து உயிர்க்கெலாம் இராமனிற் சிறந்தவரில்லை என்று மந்திரிகள் கூறினர். மக்கள் தங்கள் கண்ணினும், உண்ணும் நீரினும், உயிரினும் அவனையே பெரிதும் உவந்தனர். இதை வசிட்டன்,

> **'கண்ணினு நல்லன் கற்றவர் கற்றிலாதவரும்**
> **உண்ணு நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்'[46]**

எனப் பாராட்டினான்.

தசரதன் இராமனுக்கு முடிசூட்ட விரும்புவது பற்றி வசிட்டன் மன்னர்களுக்கு அறிவித்தான். இம்முடிவை அவர்கள் வரவேற்குமுகமாக,

> **'ஊருணி நிறையவு முதவுமாடுயர்**
> **பார் கெழு பயன் மரம் பழுத்தற் றாகவும்**
> **கார்மழை பொழியவுங் கழனிவாய் நதி**
> **வார்புனல் பெருகவும் மறுக்கின்றார்கள் யார்'[47]**

என்றனர். இப்பாடல்,

> **'ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்**
> **பேரறி வாளன் திரு'[48]**

> **'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்**
> **நயனுடையான் கட் படின்'[49]**

ஆகிய குறட்பாக்களை ஒட்டி அமைந்துள்ளமை நோக்கத்தக்கது.

**சமநோக்கு**

உலகில் பட்டம், பதவி, செல்வம் ஆகியவற்றில் பற்றற்றிருக்கும் தன்மையினைச் சான்றோர் போற்றுவர். இதனை **'வேண்டாமை யன்ன**

விழுச் செல்வம்'[50] என்றார் வள்ளுவர். இராமனிடம் தசரதன் '**அரசபதவியை மேற்கொள்க**' என்றான். அவன் அதைக் '**காதலுற்றிலன், இகழ்ந்திலன், கடனிதென்றுணர்ந்தான்**'[51]. பரதன் நாடாள வேண்டும்; இராமன் பதினான்காண்டுகள் காடாள வேண்டும் என்பது அரச கட்டளை என்றாள் கைகேயி. அதுகேட்ட அவன் முகம் அன்றலர்ந்த செந்தாமரையினை வென்றது.[52] இரு நிலைகளிலும் அவன்முகம் '**சித்திரத்தினலர்ந்த செந்தாமரையினை ஒத்திருந்தது**'[53]. நாடாள்வதையும், காடேகுவதையும் அவன் ஒன்றாகவே கருதினான். சம நோக்கினைக் கம்பர் இராமனது அரிய பண்புகளுள் ஒன்றாகக் காட்டுவர்.

**தம்பியரிடம் அன்பு**

இராமன் தன் தம்பியர் மீது மிகுந்த அன்பு செலுத்தினான். தாய் உரைகொண்டு தந்தைஉதவிய அரசை ஏற்காது புழுதி படிந்த மேனியோடும், சடை முடியோடும் இலங்கிய தம்பி பரதன் தோற்றங்கண்டு கலங்கினான். தன்பொருட்டு ஏற்பட்ட துயரத்தினால் துவண்ட மேனியனாய், நீர்வார் கண்ணினனாய் அவலமே உருவாகத் தன்னை நோக்கி வந்த பரதனைத் தழுவினான். பரதன் மீது கொண்ட சுழிவிரக்கத்தினால் இராமனது கண்கள் சொரிந்த கண்ணீர் பரதனது சடைக் கற்றையை நனைத்து மேலும் வழிந்தோடியது.[54]

இலக்குவன் பிரம்மாத்திரத்தினால் கட்டுண்டுக் கிடந்த போது இராமன் புலம்பியது அவன்பால் வைத்த அன்பின் மிகுதியைக் காட்டுவதாகும். தனக்கும் சீதைக்கும் இலக்குவன் அமைத்த பர்ணசாலையைப் பார்த்து,

> '**என்று கற்றனை நீஇது போலெனா**'[55]

என வினவிக் கண்ணீர் சொரிந்தான்.

வேடர் குலத்திற் பிறந்த குகனையும், வானரனாகிய சுக்கிரீவனையும், அரக்கர் குலத்துத் தோன்றிய வீடணனையும் தன் தம்பியராக ஏற்பதன் வாயிலாகக் கம்பர் பரந்துபட்ட சகோதரத்துவத்தை இராமன் மூலம் உலகிற் குணர்த்த விழைகிறார் என்பது கருதத்தக்கது.

**சான்றாண்மை**

> '**இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
> **என்ன பயத்ததோ சால்பு**'[56]

என்றார் திருவள்ளுவர். இச்சான்றாண்மைப் பண்பினை இராமனிடம் காண முடிகின்றது. தனக்குத் தீங்கிழைத்த தாய் கைகேயியையும், அதற்குக் காரணமாக அமைந்த தம்பி பரதனையும் இராமன் வெறுத்தானல்லன். மாறாக அவர்கள் மீது அன்பு பாராட்டினான். கம்பர் படைத்துள்ள இராமனுக்கும், வான்மீகியின் இராமனுக்கும் இதுவே வேறுபாடு.

தசரனிடத்து வரம் பெற்ற கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்புவதில் உறுதியாக நின்றாள். தசரதன் எவ்வளவோ வேண்டியும் மனம் இளகினாளல்லள். இந்நிலையில் தசரதன் **'கைகேயி என் மனைவியாகாள்; பரதன் என் மகனாகான்'**[57] என்றான். அதனால் பரதன் தன் தந்தைக்கு ஈமக் கடன் இயற்றும் தகுதியை இழந்தான்.

இராவணன் உள்ளிட்ட அரக்கரை அழித்து இராமன் அயோத்திக்குப் புறப்படும் தருணத்தில் தசரதன் வானுலகினின்று மீண்டு வந்தான். அவன் இராமனிடம் **'இருவரங்கள் கேட்க'** என்றான். அப்போது,

> **'தீயளென்று நீதுறந்த என்தெய்வமும் மகனும்**
> **தாயும் தம்பியுமாம் வரம் தருக'**[58]

என இரு வரங்களை இராமன் கேட்டான். அப்போது இராமனை உயிர்கள் வாழ்த்தின. இங்கு இராமனது சான்றாண்மை நன்கு வெளிப்படுவது புலனாகும்.

### இராமன்-திருமாலின் அவதாரம்

திருமாலே இராமனாக அவதரித்தான் என்பது கம்பர் கருத்து. இக்கருத்தினைக் கவிக் கூற்றாகவும், பாத்திரங்கள் கூற்றாகவும் காப்பியத்தில் அமைக்கிறார். நூலில் இடம்பெறும் மானிடப் பாத்திரங்கள் தெய்வத் தன்மை நிரம்பியவர்கள். வானுலகத் தேவர்களே வானரங்களாகத் தோன்றினராதலின் அவர்கள் இராமனின் அவதாரத் தன்மையை உணர்ந்திருந்ததில் வியப்பில்லை. வாலி, இராவணன் முதலானோர் இராமனால் தண்டிக்கப்பட்டு ஞானம் வரப்பெற்று அவனது இறைத்தன்மையினை உணர்ந்து போற்றினர். சாப நீக்கம் பெற்ற விராதன், கவந்தன் ஆகியோர் இராமனின் இறை இயல்பினைப் போற்றித் துதிக்கின்றனர். இந்திரன், வருணன், பிரமன், சிவன் முதலான கடவுளர்களும், வானுலகத் தேவர்களும் இராமனைத் திருமாலின் அவதாரமெனக் காப்பியப் போக்கின் இடையிடையே மொழிகின்றனர்.

### கவிக் கூற்று

கவிக் கூற்றாவது கவி பாத்திர வாயிலானன்றித் தாமே கூறும்

கூற்றாம். இது கார்முகில் வண்ணனும் தாமரைக் கண்ணனும், பாற்கடல் துயின்றோன், இராமன் பிறந்த அயோத்தி, திருமாலும் திருமகளும், இராமனும் கங்கையும், பிரமனை ஈன்றவன், இராமனளித்த வைகுந்த பதவி, உலகை உண்டவன், சங்கர நாராயணத் தோற்றம், இறைத்தன்மையும் திருவடிப் பெருமையும், இராம நாமச் சிறப்பு ஆகிய தலைப்புக்களில் ஆராயப்பட்டுள்ளது.

கம்பர் கவிச் சக்கரவர்த்தி. அவரைத் தெய்வமாக் கவி எனலாம். அவர் இராமனைத் தெய்வமென உணர்ந்து நூலில் ஆங்காங்கே சுட்டிச் செல்கிறார். அவர்க்கு மூலம் ஆழ்வார்களின் அருளிச் செயல்களே எனலாம். இராமனது கரிய தோற்றமும் கமலக்கண்களும் அவருக்குத் திருமாலையே நினைவூட்டுகின்றன. பாற்கடலில் அரவணைப் பள்ளியில் அறிதுயில் கொண்டவனும், தன் பாதத்தில் கங்கையைத் தோற்றுவித்தவனும், பிரமனை ஈன்றவனும், வீடுபேற்றினை அளிக்க வல்லவனும், உலகை உண்டவனும், முதலைக்கு அருள் புரிந்தவனும் இராமனே எனக் கம்பர் வலியுறுத்துகிறார்.

### கார்முகில் வண்ணனும் தாமரைக் கண்ணனும்

இராமன் கார்முகில் வண்ணன். அவன் மேனிக்குக் கடல், மேகம், நீலக்கல், காயாம்பூ போன்ற பல பொருள்கள் உவமையாக ஆளப்படுகின்றன. இதைக் கம்பர்,

> *'கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயாநறும்போதோ*
> *படர் பூங்குவளை நறுமலரோ நீலோற்பவமோ பானலோ'*[59]

என்பர்.

மேலும் அவன் மேனியின் அழியாத அழகு கம்பரைப் பெரிதும் ஈர்க்கிறது. இராமனது மேனி நிறத்திற்கு உவமை தேட முற்பட்டு,

> **'மையோ மரகதமோ மறிகடலோ மழை முகிலோ**
> **ஐயோ இவன் வடிவென்பதோர் அழியா அழகுடையான்'**[60]

என வியந்து பாராட்டுவர். திருமாலின் கருநிறத் திருமேனியழகில் ஈடுபட்ட பெரியாழ்வாரும்,

> **'குன்றாடு கொழுமுகில்போல் குவளைகள்போல் குரைகடல்போல்**
> **நின்றாடு கணமயில் போல் நிறமுடைய நெடுமால்'**[61]

என்றார்.

இராமனின் கரியகோலத் திருமேனியைக் கண்ட கம்பர் அவனைத் திருமாலெனவே கருதுவர் எனலாம்.

இராமன் கமலச் செங்கண்களை உடையவன். இராமனைக் கண்ட தண்டகவன முனிவர்கள் கதிர்கொள் தாமரைக் கண்ணனை மதுரவாரி அமிழ்தெனத் தங்கள் கண்களால் மாந்தினர்.[62]

ஞாயிற்றின் ஒளிபட்டுத் தாமரை மலருமல்லவா? இங்கு அஞ்சன நாயிறன்ன ஐயனின் மேனியொளிபட்டுச் சீதையின் முகத் தாமரை மலர்ந்தது.[63] இராமனது மேனி முழுதும் தாமரை மலர்கள். அதனால் அவன் மேனி 'புண்டரீகத் தடம் காடு'[64] எனப்பட்டது.

இராமன் கை, கால்கள் பவழத்தாலானவை. இதனைத்

> **'துப்பினாற் செய்த கையொடு கால்பெற்ற துளிமஞ்சு**
> **ஒப்பினான்'[65]**

என்பர். அவன்,

> 'குருநிறத் தொருதனிக் கொண்டலா மெனாக்
> கருநிறத் தழகன்'[66]

என்பர்.

இராமன் ஒரு மலையைப் பொருந்தி நின்றான். அவன் கை, கால், வதனம், கண் அத்தனையும் கமலங்கள். அவனோ காளமேகம். இதனை,

> **'அமலத்திண் கரமும் காலும் வதனமும் கண்ணுமான**
> **கமலத்தின் காடு பூத்த காளமா மேகமொத்தான்'[67]**

என்றார் கவி.

மலையொத்த வீரர் நடுவே நின்ற இராமன்,

> **'பொற் குவட்டிடையே தோன்றும் மரகதக் குன்றம் போன்று'[68]**

காட்சியளித்தான்.

திருமாலின் தோற்றத்தில் ஆழ்வார்கள் ஈடுபட்டுப் பாடிப் பரவினர்.

> **'கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்**
> **கைத்தலமும் அடியிணையும் கமல வண்ணம்'**

என்றார் திருமங்கை ஆழ்வார்.

**பாற்கடல் துயின்றோன்**

அரவணையில் அறிதுயில் கொண்ட திருமாலே இராமனாக அவதரித்தான் என்பது கம்பர் கொள்கை. இராமன் இரவு முழுவதும் சீதையின் நினைவால் உறங்காதிருந்தான். ஆதலின் விடிந்தபின் நெடுநேரம் உறங்கினான். அவன் தனக்கேயுரிய பாற்கடலை விடுத்துத் துயரக் கடலில் துயின்றான் எனக் கம்பர் கழிவிரக்கம் தோன்றப் பாடுகிறார்.

> **'கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச் சிலைத்தடக்கை கொண்ட கொண்டல்**
> **எல்லாழித் தேரிரவி இளங்கரத்தால் அடிவருடி அனந்தல் தீர்ப்ப**
> **அல்லாழிக் கரைகண்டான் ஆயிரம் வாய்மணி விளக்கம் அழலும் சேக்கை**
> **தொல்லாழித் துயிலாதே துயராழி நெடுங்கடலில் துயில் கின்றானே'[70]**

இதில் திருமால் துயின்ற படுக்கையினை, ஆயிரம் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டது என்றார்.

மிதிலையில் இராமனுக்கும் சீதைக்கும் நடைபெறவிருந்த திருமண ஏற்பாட்டினைச் சொல்ல வரும்போது,

> **'அராவணைத் துறந்து போந்து அயோத்தி எய்திய**
> **இராகவன் செய்தியை இயம்புவாமரோ'[71]**

என்றார்.

இமையவர்க்கெலாம் தன்னையே அனையதோர் கோலம் தாங்கிய இராமன்,

> **'பன்னக மணிவிளக் கயலும் பாயலுள்**
> **அன்னவர் தவத்தினால் அனந்தல் நீங்கினான்'[72]**

ஆகிய திருமாலேயாவான். திருமணத்திற்குப் பின் இராமனும் சீதையும் துயின்ற பாயல்,

> **'பாற்கடல் அன்னதோர் பாயல்'[73]**

எனப்பட்டது. இராமன் **'அண்டசத் தருந்துயில் துறந்த ஐயன்'[74]** ஆவான்.

சீதையைப் பிரிந்த இராமன் துயரக் கடலில் மூழ்கினான். விடியற் காலை நேரம். புட்கள் ஒலியும், அம்பறாத் தூணியிலுள்ள அம்புகளின் ஒலியும் இல்லையாயின் இராமன் உயிர் நீங்கியிருக்கும். இவ்வொலிகள் அவனது பிரிவுத் துயரை மறக்கச் செய்தன. அவன் யாவன்? அவன்,

> **'வெள்ளஞ் சிலம்பு பாற்கடலில் விரும்புந்துயிலை வெறுத்தளியும்**
> **கள்ளும் சிலம்பும் பூங்கோதை கற்பின் கடலில் படிவான்'**[75]

ஆகிய இராமனாவான். இதனால் பாற்கடல் துயின்ற பரந்தாமனே இராமன் என்பார் கம்பர். திருமால் அரவணை துயின்றுள்ள நிலையினை ஆழ்வார்கள் அருளிச் செய்தனர்.

> **'ஆலத் திலையான் அரவணை மேலான்**
> **நீலக் கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்'**[76]

என்றார் பெரியாழ்வார்.

> **'பைவிரியும் வரியரவில் படுகடலுள் துயிலமர்ந்த பண்பா'**[77]

என்றார் திருமங்கை ஆழ்வார்.

அரவணையில் அறிதுயிலமர்ந்த திருமாலின் பண்பினைக் கம்பர் இராமன் மீது ஏற்றி மொழிகிறார். ஆழ்வாரின் பாடல்கள் கம்பர் பாடல்களுக்கு முன்னோடியாய் அமைந்து கம்பர் கருத்தினுக்கு அரண் செய்வதாய் உள்ளன.

## இராமன் பிறந்த அயோத்தி

புண்ணியம் புரிந்தவர்கள் சென்று சேருமிடம் சுவர்க்கம் என்று வேதங்கள் சொல்கின்றன. இம்மண்ணுலகில் இராமனைத் தவிர தவத்தையும் அறத்தையும் வளர்த்தவர்கள் வேறு யாருளர்? அவ் இராமனே இவ் அயோத்தியிலிருந்து ஏழுலகங்களையும் ஆண்டானெனில் இதனினும் சிறந்த போகபூமி வேறுளதோ?[78]

பேரருளும் அறமும் துணையாகத் தம் பகைப் புலன்களைக் களைந்து அவிக்கும் தவமும் ஞானமும் புணர்ந்தோர் யாவர்க்கும் புகலிடமானவன் செங்கண்மால். அவனே அவ் அயோத்தியில் இராமனாகப் பிறந்து திருமகளாகிய சீதையோடும் பல ஆண்டுகள் வீற்றிருந்தானென்றால் இப்பெரிய உலகத்தில் அந்நகரைக் காட்டிலும் அழகிய நகரம் தேவருலகத்தும் உளதோ? இல்லை[79] என்பது கம்பரின் கருத்து. அயோத்தியில் வாழ்ந்த

அண்ட சராசரங்களையும் நற்கதியில் உய்த்தவன் இராமபிரான்[80] என்ற நம்மாழ்வார் கூற்றும் இங்கு நினைவு கூரத்தக்கது.

**இராமனும் சீதையும் - திருமாலும் திருமகளும்**

திருமாலும் திருமகளும் இராமனும் சீதையுமாக இவ்வுலகில் பிறந்தனர் என்பர் கம்பர். இராமன் இலக்குவனுடனும், விசுவாமித்திரனுடனும் மிதிலை நகர் நோக்கி வந்தான். மிதிலை நகரிலிருந்த கொடிகள் காற்றில் ஆடி அசைந்தன. இது, '**யான் செய்த தவத்தால் திருமகள் தாமரையினின்று நீங்கி வந்து இங்கு உள்ளாள். ஆதலின் நீ இவண் வருக**'[81] என்று கொடிகளாகிய தன் கைகளை நீட்டி மிதிலைமாநகர் இராமனை வரவேற்றது போன்றிருந்தது. மேலும் அந்நகர்,

> **'சீதையைத் தருதலாலே திருமகளிருந்த செய்ய**
> **போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில் மிதிலை'**[82]

என வருணிக்கப்படுகிறது.

இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் நோக்கினர். அவர்கள் நெஞ்சங்கள் கலந்தன. இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர். இதில் மானிடக் காதல் இடம்பெறுகிறது. அடுத்து, கருங்கடற் பள்ளியில் கலந்திருந்த திருமாலும் திருமகளுமே சிறிது காலம் பிரிந்திருந்து பின்னர் இராமனும் சீதையுமாக மண்ணுலகிற் பிறந்து கூடினர். இதனை,

> **"மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்**
> **ஒருங்கிய இரண்டுடற்கு உயிரொன்றாயினார்**
> **கருங்கடற் பள்ளியிற் கலவிநீங்கிப் போய்ப்**
> **பிரிந்தவர் கூடினாற் பேச வேண்டுமோ"**[83]

என்றார்.

இராமன் மார்பு, '**மெய்த்திருவிருக்கும் அலங்கல் மார்பு.**'[84] மந்தரையின் சொற்கேட்டு மனம் மாறிய கைகேயி அணிகலன்களைக் கழற்றி எறிந்து தலைவிரி கோலமாகக் கிடந்தாள். '**சானகியாகிய கடிகமழ் கமலத்து அவ்வை அயோத்தியை விட்டு நீங்கிவிடுவாளாதலின் கைகேயி திருமகளின் மூத்தாளாகிய தவ்வை போற்கிடந்தாள்**'[85] என்பார் கவி.

இராமன் தான் வனம் செல்லவிருப்பதைச் சீதைக்குத் தெரிவித்தான். இது கேட்ட சீதை வருந்தினாள். பாற்கடலில் சேர்ந்து உறைந்ததை விடுத்து இப்பூலகில் பிறந்த பின் பிரியாதவளாகிய அவள், '**நான் உன்னைப் பிரிந்து**

போகிறேன்' என்ற சொல்லைப் பொறுத்துக் கொள்வாளோ? மாட்டாளன்றோ? இதைக் கம்பர்,

> "துறந்து போமெனச் சொன்ன சொற்றேறுமோ
> உறைந்த பாற்கடற் சேக்கை உடனொரீஇ
> அறந் திரும்புமென்றையன் அயோத்தியில்
> பிறந்த பின்பும் பிரியல ளாயினாள்"[86]

என்பர்.

சீதை பண்டு அமிழ்தினொடு பிறந்த திருமகள். **'தாமரை மலரினின்று நீங்கிக் காலடிகள் தரையில் தோயுமாறு வந்தவளும் அவளே'**[87] ஆவாள். இதனால் இராமனும் சீதையும் இம்மண்ணில் மானிட வடிவம் தாங்கி வந்தாரெனினும் அவர்கள் திருமாலும் திருமகளும் ஆவார்கள் என்பது கம்பர் கருத்து எனக் கொள்ள முடியும்.

**இராமனும் கங்கையும்**

கங்கை திருமாலின் பாதத்தில் தோன்றியது. இராமன் கங்கையில் நீராடினான். இதை, **'தன் பாதங்களில் பிரமனின் அழகிய கையால் திருமஞ்சனம் செய்த நீராகிய கங்கையில் நீராடினான்'**[88] என்பார்.

கங்கை, **'என்னைப் பெற்ற உன்னால் என் பாவங்களை நீக்கினேன்'**[89] என்றது. செந்தாமரை போலும் திருவடிகளை முன்பு தீண்டியமையால் கங்கை தன்னை அடைந்தாருடைய பாவங்களைப் போக்கினாள். தற்போது இராமனது திருமேனி முழுவதும் அளையப் பெற்றதால் இனி உயிர்கள் நரகத்தில் தங்குமோ?[90] என்பார் கம்பர்.

திருமால் பாதத்தில் தோன்றிய கங்கையை இராமனின் பாதத்தில் தோன்றியதாகக் கம்பர் கூறுகிறார்.

**பிரமனை ஈன்றவன்**

கோசலை திருமாலை ஈன்றாள் என்பதைக் கம்பர், **'இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன் தன்னை ஈனப் பெருந்தவம் செய்த நங்கை**[91] என்பார். **மேலும் இராமனைச் 'சது முகன் தாதை'**[92] **என்றும், மும்மையால் உலகம் தந்த முதல்வற்கு முதல்வன்'**[93] என்றும் கூறுவர்.

பிரமன் திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றியவன் என்பதைப் பெரியாழ்வார்,

*'உந்தி எழுந்த உருவ மலர்தன்னில்*
*சந்தச் சதுமுகன் தன்னைப் படைத்தவன்'*[*]

என்றார்.

*'பிரமனைத் தன் உந்தியிலே தோற்றுவித்து'*[95] என்பது திருமங்கையாழ்வார் வாக்கு.

இவ் ஆழ்வார்களின் கூற்றுக்கள் கம்பரின் கருத்தினை வலியுறுத்தும் வகையில் அமைந்துள்ளன.

**இராமனளித்த வைகுந்த பதவி**

*'நாறிணர்த் துழாயோன் நல்கினல்லதை*
*ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்'*[96]

என்பது பரிபாடல்.

தசரதன் இறந்த பின்னர் அவன் எல்லா உலகினும் மேலான வைகுந்தம் அடைந்தான். இந்திரன் முதலாய தேவர்கள் சேர்ந்து தசரதனை ஒரு விமானத்தில் ஏற்றிப் பிரம உலகத்திற்கு மேலான மீள்கிலா உலகில் கொண்டு சேர்த்தனர்.

*'இந்திரன் முதல்வராய கடவுளர் யாருமீண்டி*
*சந்திரனனைய தாங்கோர் மானத்தைத் தலையில் தாங்கி*
*வந்தனன் எந்தை தந்தை எனமனங் களித்து வள்ளல்*
*உந்தியான் உலகின் உம்பர் மீள்கிலா உலகத்துய்த்தார்'*[97]

எந்தை தந்தை யென்றதனால் எந்தையாகிய இராமனின் தந்தையெனத் தசரதனை இந்திரனும் பிற கடவுளரும் தெரிவித்தனர். **'மீள்கிலா உலகம்'** என்பதைப் பின்னர் வசிட்டன் **'விண்டுவின் உலகு'**[98] என்றான்.

இராமனால் கொல்லப்பட்ட அரக்கரும் தேவராயினர். உயிர்கள் வீடு பேறடைந்தன.

*'வஞ்சகத் தரக்கரை வள்ளல்தான்*
*செஞ்சரத் தூய்மையால் தேவராக்கினான்'*[99]

என்றும்,

*'சூடுபெற்றையனே தொலைக்கு மன்னுயிர்*

***வீடு பெற்றன'***[100]

என்றும் இராமன் பெருமை பேசப்படுகிறது.

இதனால், இராமனைச் சார்ந்தோரும், அவனால் தொலைக்கப் பட்டோரும் வீடுபேறடையும் பெற்றி உணர்த்தப்படுகிறது.

**உலகை உண்டவன்**

இராமனைக் கம்பர் மண் வயிற்றடக்கிய மாயன்[101] என்றார். அவன் வாயிதழ் வையம் நுங்கிய வாயிதழ்[102] என வருணிக்கப்படுகிறது.

***'இரக்கம் வந்தெரிந்த காலத்து உலகெலாம் ஈன்று மீளக் கரக்கு நாயகன்'***[103]

என்றும்,

***'உற்றொரு தனியே தானேதன்கணே உலகமெல்லாம் பெற்றவன்'***[104]

என்றும்,

***'மூரிநீர் அண்டமெல்லாம் வயிற்றிடை முன்னங்கொண்ட ஆரியன்'***[105]

என்றும் கம்பர் கூறுவதால், திருமாலாகிய இராமன் உலகினை உண்டு உமிழ்ந்தவன் என உணர்த்தப்படுகிறது. இதனை,

***'வையமேழு முண்டு ஆலிலைவைகிய மாயன்'***[106]

எனத் திருமங்கை ஆழ்வாரும்,

***'ஞாலமேழு முண்டு பாலனாய பண்பனே'***[107]

எனத் திருமழிசை ஆழ்வாரும் உலகை உண்டு உமிழும் திருமாலின் இயல்பினை விளக்குகின்றனர். ஆழ்வார்கள் கம்பருக்கு முன்னோடியாக விளங்குவது இங்கு உணரத்தக்கது.

**இராமன் திருமாலே**

கம்பர் இராமனைத் திருமாலென வெளிப்படையாகக் குறிப்பிடுகிறார். அவனைக் கொடிய வினைகளைத் தீர்க்கும் **'மெய்ம்முதல்'**[108]

என்றும் ஆதிசேடனாக உலகைத் தாங்குபவன் அவனே என்றும் குறிப்பிடுகிறார்.[109]

சங்கினை ஏந்திய கையில் இராமன் வில்லினை ஏந்தினான். இதை,

**'சங்குறை கரத்தொடு தனிச்சிலை தரித்தான்'**[110]

என்றார்.

மெய்ப்பொருளுக்கு வசிட்டன் இராமன் எனப் பெயரிட்டான். மெய்ப்பொருளாகிய திருமால் கசேந்திராழ்வானுக்கு அருள் புரிந்ததை இராமன் மேலேற்றி,

**'கராமலையத் தளர் கைக்கரி எய்த்தே**
**அராவணைத் துயில்வோயென அந்நாள்**
**விராவி அளித்தருள் மெய்ப் பொருளுக்கே**
**இராமனெனப் பெயர் ஈந்தன னன்றே'**[111]

என விளக்குகிறார்.

தாடகையைக் கொல்ல அம்பைத் தொட்டவன் திருமாலே என்பதை, **'மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்'**[112] என்றார். **'மண் கடந்த மரர் வைகும் வான் கடந்தான் தான் வருந்திக் கடைந்த அமுதத்தைப் பிறர்க்கு ஊட்டித் தான் இராமனாகிக் கானகம் எய்தி மெல்லிய கீரை உணவை உண்டான்'**.[113] இதனால் இராமனைக் கம்பர் திருமாலாகவே காட்டுகிறார் என்பதை அறியலாம்.

**சங்கர நாராயணத் தோற்றம்**

திருமாலும் சிவனும் இணைந்து தோன்றும் தோற்றமே சங்கர நாராயணத் தோற்றம் ஆகும். இராமன் இலக்குவனைத் தழுவி நின்றான். இது திருமாலும் சிவனும் இணைந்து தோன்றுவது போன்றிருந்தது.

**'அன்னான்றனை ஐயனும் ஆதியோ டந்தமென்று**
**தன்னாலும் அளப்பருந் தானும் தன்பாங்கர்நின்ற**
**பொன்மான் உரியானும் தழீஇயன்ன புல்லிப் பின்னைச்**
**சொன் மாண்புடையன்னை சுமித்திரை கோயில் புக்கான்'**[114]

எனக் கம்பர் பாடுவர். **'பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து'**[115] என்ற திருமங்கை ஆழ்வாரின் கூற்றும் இத்தோற்றத்தை வலியுறுத்துகிறது.

## இறைத்தன்மையும் திருவடிப் பெருமையும்

இராமன் பவ நோயின் மருத்துவன் அனையான்.[116] அவன் யாவர்க்கும் தொழுகுல மானவன்.[117] அவன் ஒக்க நின்று உயிர்தொறும் உணர்வு நல்குபவன்.[118] அவன் பிரமனகத்தும் அனைத்துயிருள்ளும் நிறைந்தவன் என்பதை,

> **'நன்னெடுந் திசைமுகனகத்தும் நம்மனோர்க்கு**
> **உன்னரும் உயிருளும் ஒக்க வைகுவான்'**[119]

என்பர். இராமன் கருணையின் நிலையமாகவும்[120], நியாயமத்தனைக்குமோர் நிலையமாகவும்[121] விளங்குகிறான். மேலும் அவனை,

> **'எண்ணருளி ஏழமை துடைத்து மெய்ஞானக்**
> **கண்ணருள் செய்கண்ணன்'**[122]

என்றும்,

> **'பொய்யில்லாதவன்'**[123]

என்றும்,

> **'தாயினும் உயிர்க்கு நல்லான்'**[124]

என்றும்,

> **'பேரளிக்குப் பிறந்த இல்லாயினான்'**[125]

என்றும், **'வேதத்தின் முடிவாகிய உபநிடதத்திற்கு ஒப்பானவன்'**[126] என்றும், இராமனின் பல்வேறு இறையியல்புகளை எடுத்தியம்புகிறார். இராமனை,

> **'உயர் வேதமும் போதமும் காண்கிலாதான்'**[127]

என அவனது பரத்துவத்தை உணர்த்துகிறார்.

இராமன் பாததூளிபட்டுக் கல்லாய்க் கிடந்த அகலிகை மீண்டும் பெண்ணுருவம் பெற்றாள்.[128]

வாமனனாக வந்த திருமாலின் பாதம் மாவலியின் ஆணவத்தை அழித்தது.[129]

இராமன் பாதத்தினால் தீண்டப்பெற்ற விராதன் மீண்டும் கந்தருவனானான்.[130] இராமன் திருவடி நிலைகளைத் தலையில் தாங்கியமையால் பரதன் மீதிருந்த பழி துடைக்கப்பட்டது.[131]

தான் இராவணனுக்குத் தம்பியாகப் பிறந்த இழிவு நீங்குமாறு, பரதன் சூட்டிய திருவடி நிலைகளையே தனக்கும் சூட்டுமாறு வீடணன் இராமனை வேண்டினான்.

> 'களவிய லரக்கன் பின்னே தோன்றிய கடன்மைதீர
> இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி'[132]

என்பது வீடணன் கூற்று.

கம்பர் இராமனது திருவடிகளை '**வரங்களின் வாரியன்ன தாளிணை**'[133] என்றார். உயிர்விடும் நேரத்தில் இராமன் பாதங்களைக் கண்ணால் பார்த்த சடாயு பரமபதம் அடைந்தான்.[134]

### இராம நாமப் பெருமை

இராம நாமத்துடன் பரசுராமன், கோதண்டராமன், பலராமன் என மூவர் இருப்பினும், இராம நாமம் கோதண்டராமனையே குறிப்பதாகும். இராம நாமத்தின் சிறப்பு பின்வருமாறு உரைக்கப்படுகிறது.

> **"பகவந் நாமம் ஆத்மஞான விருட்சம்: ஸ்ரீஇராம நாமம் இனியவற்றிலும் இனியது. அது சாந்தமென்னும் அவிசாகும். அதுதான் சுத்தாத்மாக்களின் உயிர். பரிசுத்தத்திற்கும் பரிசுத்தம் அளிக்கக் கூடியது. 'ராம' என்னும் பதத்திலுள்ள 'ரா' 'ம' என்னும் இவ்விரு எழுத்துக்களும முறையே 'நமோ நாராயணாய', 'நமசிவாய' என்ற மகா மந்திரங்களுடைய பீஜாக்ஷரங்களின் சேர்க்கையால் ஆக்கப்பெற்றவை.**
>
> **'ராம' என்னும் இரண்டு மனோகரமான எழுத்துக்களும் நெடுங்கணக்கிற்கே இரு நேத்திரங்கள். பக்தர்களின் பிராண நிலை. நினைவிலிருக்கச் சுலபமானவை. பல நன்மைகளைத் தருபவை."**[135]

நாராயண மந்திரம் வைணவர் போற்றும் மந்திரம். எனினும் ராம நாமமே பெருவழக்காயுள்ளது.

> **"வைணவர்க்கு மூலமந்திரமாய் ஸ்ரீமந்நாராயணன் மந்திரமாகிய 'ஓம் நாராயணாய நம' என்பதை அவர்கள் செபித்தல் போல, அவன் அவதாரமாகிய இராமன் மந்திரமாகிய 'ராம' என்பதையும் செபிப்பர்.**

> **இதனையும் மூலமந்திரமென்பது உபசாரமாகக் கூறப்பட்டதெனினும், அதனோடொத்த மகிமை யுடையதென்பது பற்றிக் கூறப்பட்டதெனினும் பொருந்தும். இவ்விரு மந்திரங்களுள் பிந்தியதே பிரபலமாய்ப் பெருவழக்காய்ச் செபிக்கப்படுவதாகக் காணப்படுகிறது. இது 'பின் முளைத்த கொம்பு முன் முளைத்த காதுக்கு மேலாய் விட்டது' என்ற பழமொழியை நினைவூட்டுகின்றது".[136]**

ஆழ்வார் பாசுரங்களில் இராமாவதாரம் சிறப்பித்துப் பேசப்படுகிறது. எனினும் இராம நாமப் பெருமை குறிப்பிட்டுப் பேசப்படவில்லை.

கம்பராமாயணக் காப்புச் செய்யுள் இராமநாமப் பெருமை பேசுகிறது.

> **"நன்மையும் செல்வமும் நாளும் மல்குமே**
> **தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே**
> **சென்மமும் மரணமும் இன்றித் தீருமே**
> **இம்மையே இராம வென்றிரண் டெழுத்தினால்"[137]**

இராமன் விட்ட அம்பு வாலி மார்பில் பாய்ந்தது. அம்பை உருவிப் பார்த்தான். அப்போது அதில் '**இராம**' என எழுதியிருப்பதைக் கண்டான். இதை ஒரு வாய்ப்பாகக் கொண்டு கம்பர் இராம நாமப் பெருமை பேசுகிறார்.

> **"மும்மை சால் உலகுக் கெல்லாம் மூலமந்திரத்தை முற்றும்**
> **தம்மையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும்பதத்தைத் தானே**
> **இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமவென்னும்**
> **செம்மை சேர் நாமந்தன்னைக் கண்களிற்றெரியக் கண்டான்"[138]**

என்பது கம்பரது பாடல். வான்மீகி இராமாயணத்தில் வாலி இராமன் விட்ட அம்பைப் பிடுங்கிப் பார்த்ததாகவோ, அதில் 'ராம' என்ற பெயர் எழுதப்பட்டிருந்தாகவோ இல்லை. இவ்விடத்தில் இராம நாமப் பெருமையினை வால்மீகி பேசவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.[139]

சிறகுகளை இழந்திருந்த சம்பாதியை இராமதூதர்களாகிய வானரர் சந்தித்தனர். சம்பாதி அவர்களை இராமநாமத்தைச் சொல்லுமாறு வேண்டினான்.

**"எல்லீரு மவ்விராம நாமமே**
**சொல்லீர் சொல்ல எனக்கொர் சோர்விலா**
**நல்லீரப் பயன் நண்ணும் நல்லசொல்**
**வல்லீரப் பயன் வளர்க்கு மாண்பினீர்"[140]**

என்பது சம்பாதியின் வேண்டுகோள். வானரர் இராமநாமம் சொல்லச் சம்பாதிக்குச் சிறகு வளர்ந்தது என்பதை,

**'நின்றுழி நீல மேனியான்**
**நன்றா நாம நவின்று நல்கினார்**
**வன்றோளான் சிறை வானந்தாயவே'[141]**

என்பர்.

இராம நாமச் சிறப்புப் புலப்படும் வகையில் கம்பர் சிறப்பாகப் புனைந்துள்ளார்.

> "சம்பாதியின் எரிந்த சிறகுகள் மீண்டும் முளைத்த செய்தி இருநூல்களிலும் சொல்லப்பட்டுள்ளது. நிசாசர முனிவன் சம்பாதியிடம் சீதையைத் தேடிக்கொண்டு இராம தூதர்கள் வருவார்கள். அவர்களுக்குச் சீதையைக் குறித்து நீ அறிந்தவற்றைச் சொல். அக்காலத்தில் சிறகு முளைக்கும் என்று சொன்னதற்கு ஏற்ப சம்பாதி வானரர்களிடம் சீதையைப் பற்றிச் சொல்ல அவன் சிறகுகள் முளைத்தன என்று காணப்படுகிறது."
>
> இந்நிகழ்ச்சியைக் கம்பநாடர் இராமநாமத்திற்கு ஏற்றம் சேர்க்கும் வகையில் அமைத்துள்ளார்[142]

என்பதன் வாயிலாகக் கம்பர் இராமநாமத்தின் மீது கொண்டிருந்த ஈடுபாட்டினை அறியமுடிகிறது.

அனுமன் அரக்கரால் தனக்கு ஏற்படும் துன்பங்கள் தீர எல்லாத் துன்பங்களையும் போக்குதற்குத் தக்க உபாயம் இராம நாமத்தைக் கூறுவதே என்ற முடிவுக்கு வந்தான். தனக்கு ஒருவகைத் துன்பமும் வராது நீங்குமாறு அதனையே செய்தனன். இதைக் கீழ்க்காணும் கம்பர் வாக்கினால் அறியலாம்.

**'தேறிலரக்கர் புரி தீமையவை தீர**
**ஏறுவகை யாண்டைய விராமனென வெல்லாம்**

**மாறு மதின் மாறு பிறிதில்லென வலித்தான்'**[143]

இதனால் இராம நாமம் எல்லாத் துன்பங்களுக்கும் தக்க உபாயம் எனவும், அந்த நாமம் செம்மை சேர் நாமம் எனவும் அதனினும் சிறந்ததோர் உபாயம் வேறு இல்லை எனவும் கம்பர் வலியுறுத்தியுள்ளார் என்பதை அறியலாம்.

**பாத்திரக் கூற்று**

பாத்திரக் கூற்றாவது காப்பிய மாந்தரின் கூற்றாகும். இதில் மானிடர், வானரர், அரக்கர், முனிவர், வீடுபேறடைந்தோர், துதி செய்தோர், சாபநீக்கம் பெற்றோர், தேவர், கடவுளர் ஆகியோரின் கூற்றுக்களின் அடிப்படையில் இராமாவதாரப் பெருமை விளக்கப்படுகிறது.

**மானிடப் பாத்திரங்கள்**

காப்பியத்தில் இடம்பெறும் மானிடப் பாத்திரங்கள், இராமன் திருமாலின் அவதாரமென உணர்ந்து குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**தசரதன்** இராமனின் தந்தை; அறத்தின் மூர்த்தி; ஆற்றலிற் சிறந்தவன்.

**'இம்மாண் கதைக்கோர் இறையாய இராமனென்னும்**
**மொய்ம்மாண் கழலோன் தருநல்லற மூர்த்தி'**[144]

என்பார் கம்பர்.

தசரதன் இராமனைத் தன் உயிராகக் கருதியவன். அவன் இராமனைத் **'திருவின் கேள்வன்'**[145] என்றான். இராமன், பரசுராமன் வில்லை வளைத்து அவன் தவ வலியைத் தன் அம்புக்கு இலக்காக்கி அதை ஒடுக்கினான். பரசுராமன் இராமனைப் பணிந்து வாழ்த்தினான். இதை நேரில் கண்ட தசரதன் மகனை வியந்து,

**'மெய்ம்மை இச்சிறுவனே வினை செய்தோர்கட்கு**
**இம்மையும் மறுமையும் ஈயும்'**[146]

என்று அவனது தெய்வத்தன்மை தோன்றப் பாராட்டினான்.

**கோசலை** உலகத்தை வயிற்றில் அடக்கிய மாயனைத் தனது வயிற்றில் அடக்குமாறு தவம் செய்தவள்.[147]

**கைகேயி 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயெனக்'**[148]

கருதப்படும் இராமனைத் தான் பெற்றெடுத்ததாகக் குறிப்பிட்டாள்.

**சுமித்திரை** தன் மகன் இலக்குவனை இராமனுடன் வனம் செல்லப் பணித்தபோது **'தம்பியெனும் படிக்கன்று, அடியாரின் ஏவல் செய்தி'**[149] என்றாள். இதனால் இராமனை அவள் ஆண்டவனாகக் கருதினாளாதலின், இலக்குவனை அவனுக்கு அடியானாக ஏவல் செய்யும்படிக் கூறினாள் எனலாம்.

**பரதன்** திருமாலின் கையிலுள்ள சங்கின் அமிசமாகத் தோன்றியவன். இராமனைப் போன்று கரிய நிறம் உடையவன். தன் தாய் வரத்தின் மூலம் பெற்றுத்தந்த அரசைத் துறந்து தவவேடம் பூண்டு இராமனை மீண்டும் அழைத்துவரக் கானகம் சென்றான். அவனது வற்கலை உடையையும், மாசடைந்த மெய்யையும், நற்கலையின் மதியன்ன நகையிழந்த முகத்தையும் கண்ட குகன்,

**'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா'**[150]

எனப் பாராட்டினான். இராமன் இருந்த திசைநோக்கித் தொழுத செயல் அவனைக் கவர்ந்தது. பரதனை இராமன் உத்தமன் எனப் பாராட்டினான்.

கேகய நாட்டிலிருந்து சத்துருக்கனுடன் பரதன் அயோத்திக்குத் திரும்பினான். அயோத்தி வெறிச்சோடிக் கிடந்தது கண்டு துயருற்று வருந்தினான். தன் தந்தையும், தாயும், இறைவனும், அண்ணனுமாகிய இராமனைக் கண்டு வணங்கினாலல்லது தன் துயர் தீராதென்பதை,

**"எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்**
**அந்தமில் பெருங்குணத் திராம னாதலால்**
**வந்தனை அவன் கழல் வைத்த போதலால்**
**சிந்தை வெங்கொடுந்துயர் தீர்கலாது"**[151]

என்றான். பரதன் இராமன் மீது கொண்ட அன்பும் பக்தியும் இதன்மூலம் வெளிப்படுகிறது.

தந்தை இறந்தான், தமையன் கானகம் சென்றான் என்பதை அறிந்த பரதன் கோசலைபாற் சென்று **'யான் என் ஐயனாகிய இராமபிரானுடைய திருவடிகளைக் காணப் பெற்றிலேன்'**[152] என்று வருந்திக் கூறினான்.

பரதன் கோசலையைக் குகனுக்கு அறிமுகம் செய்கிறான். அதுகாலை, அவள் பிரமனை ஈன்ற இராமன் தாய் என்பதை,

**'.................... மூன்றுலகும் ஈன்றானை முன்னீன்றானைப்
பெற்றத்தால் பெருஞ்செல்வம் யான் பிறத்தலாற் துறந்தபெரியாள்'**[153]

என்றான்.

**'நாட்டை ஆளும் பொறுப்பை நீ ஏற்க'**[154] என வசிட்டன் பரதனிடம் சொன்னான். அதுகேட்ட பரதன் வருந்தி நடுங்கினான்.

**'மூன்றுலகிற்குமோர் முதல்வனாய் முதற்
றோன்றினன் இருக்கயான் மகுடம் சூடுதல்'**[155]

ஏற்புடைத்தன்று என்று அதனை மறுத்துரைத்தான்.

பரதனே நாடாள வேண்டுமெனத் தேவர்கள் வானிலிருந்து சொல்லப் பரதன் இராமன் திருவடி நிலைகளைக் கேட்டுப்பெற்று, அவற்றைத் தன் தலைமேல் தாங்கியவண்ணம் அழுத கண்ணீரோடு இராமன் அடிகளில் விழுந்து வணங்கி எழுந்து மீண்டும் அயோத்தி சென்றான். இதனை,

**'அடித்தலம் இரண்டையும் அழுத கண்ணினான்
முடித்தலம் இவையென முறையிற் சூடினான்
படித் தலத் திறைஞ்சினான்'**[156]

என்றார். அயோத்தியிலிருந்தபோது பரதன் இராமனது பாதங்களுக்குப் பூசைகளைச் செய்து வந்தான்.

இதனால் பரதன் இராமனைக் கடவுளாக எண்ணித் துதித்தான் என்பதைக் கம்பர் தெற்றென விளக்குகிறார் எனலாம்.

**இலக்குவன்** திருமாலின் படுக்கையாகிய ஆதிசேடனின் அமிசமாகத் தோன்றியவன். இராமனை எப்போதும் பிரியாது உடனிருந்தமையால் இராமானுசன் எனப் பெயர் பெற்றவன். வனத்திலிருந்தபோது இராமனையும் சீதையையும் தான் உறங்காது காத்தவன்.

மாயமான் பின் சென்ற இராமன் மானை அம்பெய்து கொன்றான். மாயமானாக வந்த மாரீசன் இராமனைப் போல் குரலெழுப்பினான். இராமனுக்கு ஏதம் நேர்ந்ததாகக் கருதிய சீதை இலக்குவனை அங்குச் செல்லுமாறு வற்புறுத்தினாள். அப்போது இலக்குவன்,

**"காரெனக் கருதிய அக்கமலக் கண்ணனை
யாரெனக் கருதி இவ்விடரில் ஆழ்கின்றீர்"**[157]

எனப் பேசுவதால் இராமன் திருமாலின் அவதாரமென்பதை அவன் அறிந்திருந்தான் என்பது புலனாகிறது.

மேலும் இலக்குவன், '**உலகைக் காப்பவன் இராமன். அவனுக்கு ஏதம் ஏதும் உண்டானால் விண், மண், பாதலம் என்னும் மூவுலகும் அழியும். அதுவேயன்றி யாவர்க்கும் முற்பட்டுள்ள தேவர், முனிவர் முதலாகிய சிறப்புடையோர் யாவரும் அழிவர். அறமும் சிதைவுறும்**'[158] என்றான்.

இந்திரசித்து இலக்குவன் மீது திருமாலின் படையை விட்டான். இலக்குவன் தன்னை நாராயணனாகத் தியானிக்க அது விலகிச் சென்றது. இதனை,

'**நேமித்தனி அரிதானென நினைத்தான் எதிர்நடந்தான்**'[159]

என்றார். தான் ஆதிசேடன் அமிசமாதலின், தன்னை நாராயணனாகவே பாவித்துக் கொண்டான் எனலாம்.

கைகேயி பெற்ற வரத்தினால் பரதனுக்கு முடி சூட்டப்பட-விருப்பதை அறிந்த இலக்குவன் சினங்கொண்டான். அப்போது அவன் ஆதிசேடன் போலத் தோன்றினான். இதனை,

**அண்ணற் பெரியோன்தன் ஆதியின் மூர்த்தியொத்தான்**[160]

என்றார்.

ஆதிசேடனே இலக்குவனாகத் தோன்றினான். அவன் தன்னை யாரென உணர்ந்ததோடு இராமனைத் திருமாலென அறிந்து போற்றுவது மனங்கொள்ளத்தக்கது.

**சத்துருக்கன்** திருமாலின் கையிலுள்ள சக்கரத்தின் அமிசம். இவனே மிகக் குறைவாகப் பேசும் பாத்திரம். கேகய நாட்டிலிருந்து மீண்டு அயோத்தி வந்தபோது பரதனிடம் '**நெடுங்காலம் அயோத்தி நகரிலிருந்த திருமகள் நீங்கிவிட்டாள்**'[161] எனக் கூறியதால் அவன் சீதையைத் திருமகளாகக் கருதியிருந்தான் எனலாம்.

**சீதை** பாற்கடலில் திருமால் மார்பினுறைந்த திருமகளே ஆவாள். உழுது வந்த கொழுவின் முனையில் உதய சூரியனது ஒளியினையுடைய பூமி தேவியின் திருவுருவம் வெளிப்பட்டாற்போல, பாற்கடலில் தோன்றிய இலக்குமியும் தொழத்தக்க பெண்ணரசியே சீதையாகத் தோன்றினாள்.[162] சீதை,

**'வையக மடந்தை மார்க்கும்**
**நாக கோதையர்க்கும்**
**தெய்வ மங்கையர்க்கும் மேலாம்**
**திலகம்'**[163]

எனப் போற்றப்படுகிறாள். அவளது அழகு,

**'பொன்னின் சோதி போதினினாற்றம் பொலிவேபோல்**
**தென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்'**[164]

என வருணிக்கப்பட்டது. மேலும் அவள், **'கல்லும் புல்லும் கண்டுருகத்தக்க பெண்கனி'** யாவாள்.[165]

சீதையைத் தெய்வமென்று கருதிய அளவில் அவளைக் கண்டோர் கைகள் தலைமேற் சென்று குவிந்தன.[166] அவளைப் பாராட்டுமுகமாகக் கோசிகன்,

**'நச்சுடை வடிகண்மலர் நங்கை இவளென்றால்**
**இச்சிலை கிடக்கமலை ஏழையும் இறானோ'**[167]

என்றான்.

வசிட்ட முனிவன் சீதையை, நிலமகள், திருமகள், கலைமகள், மலைமகள் ஆகிய நால்வரினும் நல்லள் என்றான்.[168]

தான் மானுடப் பிறவி எடுத்ததற்கேற்ப, இராமனிடம் கொண்ட காதல் நோய் சீதையைப் பெரிதும் வருத்தியது. இராமனது கருமேகம் போன்ற உருவமும் தாமரைக் கண்களும் எண்ணத்தில் தோன்றி வாட்டின.[169]

இராமன் அளித்த கணையாழியை அனுமனிடமிருந்து பெற்ற சீதை அனுமனை, நான்முகனைப் பெற்ற இராமனின் தூதன் என்பதை,

**'மும்மையால் உலகந்தந்த முதல்வற்கு முதல்வன் தூதன்'**[170]

என்றாள்.

சீதை இராமனை எண்ணிப் புலம்பியபோது,

**'நாராயணனே தனிநாயகனே'**[171]

என்றாள்.

**குகன்** வேடர் தலைவன். கங்கையின் இரு கரைக்கும் உரியவன். கணக்கிறந்த நாவாய்களைப் பெற்றவன். இராமனிடம் மிகுந்த பக்தி பூண்டவன். இதை இராமன்,

**'பக்தியில் உயிரீயும் பரிவினன்'**[172]

என்றான். அவனது அன்பின் ஆழத்தை உணர்ந்த இராமன்,

**'யாதினு மினிய நண்ப எம்மொடீண்டு இருத்தி'**[173]

என்றான்.

இராமன் கங்கைக் கரைக்கு வர அவனைக் காண ஆவல்கொண்டு அங்குச் சென்றான். இலக்குவனை இராமன் என எண்ணி,

**'தேவநின் கழல் சேவிக்க வந்தனன்**
**நாவாய் வேட்டுவன் நாயடியேன்'**[174]

என்று தன்னை அறிமுகம் செய்துகொண்டான். அவன் இராமனிடம் கொண்ட பணிவையும் பக்தியையும்,

**'கண்ணனைக் கண்ணினோக்கிக் கனிந்தனன் இருண்ட குஞ்சி**
**மண்ணுறப் பணிந்து மேனி வளைந்து வாய் புதைத்து நின்றான்'**[175]

எனக் காட்டுகிறார்.

இராமனுக்குத் தான் தேனும் மீனும் திருத்திக் கொணர்ந்ததாகக் கூறினான்.[176] அவன் இருக்கும் இருப்பையும் கொண்ட தவக் கோலத்தையும் கண்டு வருந்தி,

**'பார்குலாஞ் செல்வ நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை**
**ஈர்கிலாக் கள்வனேன் யான் இன்னலின்றிருக்கின்றேனே'**[177]

எனக் கூறிப் புலம்பினான்.

பொன்னாடை புனைந்து, கௌத்துவ மணிபூண்டு விளங்கும் இறைவனின் அழகுத் திருமேனியைத் தன் மனக்கண்ணால் கண்டு களித்துவந்த அடியவனாகிய குகன் மரவுரி தரித்துக் கானகத்தில் இருக்கும் அக்கோலத்தைக் கண்டு வருந்தியதில் வியப்பில்லையன்றோ? அன்பின் வடிவமாக விளங்கிய குகன் கருணையின் நிலையமாக விளங்கிய

இராமனைக் கண்டுணர்ந்து துதித்தமையினால் 'குகப் பெருமாள்' எனச் சிறப்பாக அழைக்கப்படுகிறான். குகன் தன்னை '**உத்தம அடிநாயேன்**'[178] என அழைத்துக் கொண்டான். இராமனைக் குகன் '**அஞ்சன வண்ணன் என் ஆருயிர் நாயகன்**'[179] என்றான்.

> **"இராமாவதாரம் முதலியவை திருமாலின் ஐவகை நிலைகளுள் விபவம் என்ற பெயரால் வழங்கப்படும். இந்த விபவ நிலைக்குப் பெருக்காற்றை உவமை கூறுவர் பெரியோர். பெருக்காறு போல விபவங்கள் என்பது ஸ்ரீவசன பூஷணம். பெருக்காறு செல்லும் நெறியால் தன்னுடன் வந்து கலந்த சிற்றாறுகளையும் வேறு பிரித்தறியலாகாதவாறு தன்னுட்கொண்டு தூயனவாக்கும் இயல்புடையது. அதுபோலப் பெரியோரும் தம்மையடைந்தாரைத் தம்மோடொப்பக் கொண்டு தூயராக்கி உலகம் பாராட்டும் நிலையில் வைப்பர். பெருக்காறு போல்பவனான இராமன் தன்னை அடைந்த குகனோடு தோழமை கொண்டு அவனை யாவர்க்கும் தொழுகுலமாக்கின செய்தி பேசப்படுதலின் இதற்குக் கங்கைப் படலம் என்ற தலைப்பு அமைவுடையதேயாகும்."**[180]

இதனால் சிற்றாறு போலிருந்த குகன், கங்கைப் பேராறு போன்ற இராமனோடு தோழமை பூண்டமையினால் அவனும் 'குகப் பெருமாள்' என்னும் சிறப்பினைப் பெறுகிறான் என்பது உணரற்பாலது.

**மக்கள்** இராமனைத் திருமாலென உணர்ந்திருந்ததாகக் கம்பர் காட்டுகிறார்.

அயோத்தியில், தேரேறி அரண்மனை சென்ற இராமனைக் கண்ட மக்கள்,

> **'வாரணமரற்ற வந்து கராயுயிர் மாற்றுநேமி**
> **நாரணனொக்குமிந்த நம்பிதன் கருணை'**[181]

என்றும்,

> **'காலமாக் கணிக்கு நுண்மைக் கணக்கையும் கடந்துநின்ற**
> **மூலமாய் முடிவிலாத மூர்த்திஇம் முன்பன்'**[182]

என்றும் இராமனையே திருமாலெனக் கருதினமை போதரும்.

அரசாட்சி இராமனுக்கு இல்லை என அறிந்ததும்,

> **'மொய்யார் தவமே செய்துண் மிடன் மார்பரிதிற்பெற்ற**
> **செய்யாளென்னும் பொன்னும் நிலமாதென்னும் திருவும்**
> **உய்யார் உய்யார்'**[183]

என அழுது அரற்றினர். இங்குத் திருமகளுடனும் நிலமகளுடனும் உறையும் திருமாலே இராமன் என்பதை உணர்ந்திருந்த மக்களைக் கம்பர் படைத்துக் காட்டுகிறார்.

இராமனைக் கண்ட மிதிலை நகர் மக்கள்,

> **'தயரதன் புதல்வனென்பார் தாமரைக் கண்ணனென்பார்**
> **புயலிவன் மேனியென்பார் பூவையும பொருவுமென்பார்**
> **மயலுடைத் துலகமென்பார் மானுடனல்ல னென்பார்**
> **கயல்பொரு கடலுள்வைகும் கடவுளே காணுமென்பார்'**[184]

எனக் கொண்டாடிப் போற்றினர். இராமனைக் கண்ட அந்நகர்ப் பெண்ணொருத்தி,

> **'இவன் கண்ணனே இது கண்டிரும் பின்னென்றாள்'**[185]

அயோத்தி, மிதிலை ஆகிய நகரங்கள் கடவுளர்களையே மானுடர்களாக ஈன்றெடுத்த பெருமை பெற்றவையாதலின், அந்நகர் வாழ் மக்களும் இராமனது இறைத்தன்மை அறிந்து போற்றியது பொருத்தமானதே.

**வானரர்**

இராவணனையும் பிற அரக்கர்களையும் வதைசெய்யத் திருமால் இராமனாகப் பிறந்தான். வானிலுள்ள தேவர்கள் வானரர்களாகப் பிறந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அனுமன், சுக்கிரீவன், வாலி, அங்கதன், சாம்பவான் ஆகியோராவர்.

**அனுமன்**

அனுமன் காற்றுக் கடவுளின் கூறாகத் தோன்றியவன். சிவனது அமிசமும் அவனே.[186] அஞ்சனை வயிற்றில் தோன்றியதால் ஆஞ்சநேயன் என்னும் பெயரினைப் பெற்றான். இராமன் அனுமனை 'இவ்வுலகிற்கெல்லாம் ஆணி'[187] என்றான். இவன் இராமாயணம் என்னும் தேருக்கு அச்சாணிபோல்

விளங்கினான் என்பதை அவன் செயல்கள் உணர்த்தும்.

அனுமனைக் கண்ட இராமன், '**ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும், அறிவும்**'[188] பொருந்தியிருக்கும் தன்மையைப் பாராட்டினான். அவனது கல்வி அறிவை வியந்து,

> **'கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னும் காட்சி**
> **சொல்லாலே தோன்றிற்று'**[189]

எனப் புகழ்ந்துரைத்தான். அவனைச் சொல்லின் செல்வன் எனப் பாராட்டினான்.

அனுமனது உருவத்தைக் கண்ட இராமன்,

> **'நாட்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும்**
> **கோட்படாப் பதமேஐய குரக்குருக் கொண்டது'**[190]

என்றான்.

அனுமன் இலங்கையில் ஆற்றிய அரிய செயல்களுக்காக இராமன் அவனுக்குப் பிரமபதத்தை வரமாக அளித்தான். போர்க்களத்தில் இராமன் அனுமன் மீது ஏறியமர்ந்து போர் புரிந்தான். அவதார நிலையில் இராமனைத் தாங்கியதால் அவனுக்குச் '**சிறிய திருவடி**' என்னும் பெயர் வாய்த்தது. பெருமாளைத் தாங்கிய கருடபகவான் பெரிய திருவடி என அழைக்கப்படுகிறார்.

இராம இலக்குவரைக் கண்ட அனுமன் என்பு நெக்குருகுகின்றது; இவர்கின்றது அளவில் காதல்; அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு என்கொல் அறிதல் தேற்றேன் என்றான். அவர்கள் தென்புலத்தன்றி மீளா நெறி உய்க்கும் தேவர்களோ?[191] என்று ஐயுற்றான். '**மும்மூர்த்திகளே இருவராக வந்தாரோ?**'[192] என்றான்.

இராமனைக் கண்ட அனுமன் '**மஞ்செனத் திரண்ட கோல மேனிய**'[193] என்றான். அவன் '**மும்மை ஏழுலகங் காக்கும் முதல்வன்**'[194] என்றான்.

இராமனால் வாலியைக் கொல்ல முடியுமா எனச் சுக்கிரீவன் ஐயுற்றான். இதை உணர்ந்த அனுமன் இராமன் திருமால் என்பதை,

> **"சங்கு சக்கரக் குறியுள தடக்கையிற்றாளில்**
> **எங்கு மித்தனை இலக்கணம் யாவர்க்குமில்லை**
> **செங்கண் விற்கரத்திரா மனத் திருநெடுமாலே**
> **இங்குதித்தனன் ஈண்டற நிறுத்துதற்கின்னும்"**[195]

என அறுதியிட்டுரைத்தான். சிவதனுசை முறிக்கும் ஆற்றல் அந்த மாயவற்கன்றி மற்றையோர்க் கெளிதோ?[196] என்றான்.

இராமன் திருமால் என்பதில் ஐயமேதுமில்லை எனச் சுக்கிரீவனிடம் அனுமன் விளக்கிக் கூறினான். **'என் தந்தையாகிய வாயு பகவான் முன்பு என்னை நோக்கி உலகம் யாவற்றையும் ஈன்றவனாகிய திருமாலுக்கு அடிமை செய். அதனால் உன்னை ஈன்ற எனக்கும் சிறந்த பதவி கிட்டும்' என்றான். அவன் திருமால் என்பதை எப்படி அறிவது என்று வினவ அதற்கு அவ்வாயு தேவன் 'அத்திருமால் உன் எதிரில் வந்தானானால் அவனிடத்து உனக்கு யாதொரு காரணமுமின்றிப் பேரன்பு உண்டாகும் என்றான். இப்போது என் உடம்பும் எலும்பும் அன்பினால் உருகிவிட்டது. அதனால் இவன் திருமால் என்பதில் ஐயமில்லை'**[197] என்றான்.

அசோகவனத்தில் சீதையைக் கண்ட அனுமன், இராமன் சீதை ஆகியோர் உண்மைநிலை உணர்ந்து

> **'ஆவதே ஐயமில் அரவினீங்கிய**
> **தேவனே யவனிவள் கமலச் செல்வியே'** [198]

என்றான்.

அசோக வனத்தில் சீதை தன் உயிரைவிடத் துணிந்தாள். அப்போது அனுமன்,

> **'அண்டர் நாயகன் அருள்தூ தன் நான்'**[199]

என்று சொல்லிச் சீதை முன் தோன்றினான்.

சீதையிடம் சூளாமணியைப் பெற்றுத் திரும்பிய அனுமன், தான் சீதையைக் கண்டு வாளா மீள்வது தக்கதன்று என எண்ணினான். இலங்கையிலுள்ள பொழில்கள் யாவற்றையும் அழித்தான். தன்னை எதிர்த்து வந்த கிங்கரர்களைக் கொன்றான். தன்னோடு பொருத சம்புமாலி, பஞ்ச சேனாபதிகள், அக்க குமாரன் ஆகிய யாவரையும் வதைத்தான். இறுதியில் இந்திரசித்தன் தன் பிரம்மாத்திரத்தால் அனுமனைக் கட்டி இராவணன் முன் கொண்டு நிறுத்தினான். இராவணன் அனுமனை நீ யார்? என வினவத் தான் இராம தூதனென்பதை,

> **'அல்லியங் கமல மேயனைய செங்கணோர்**
> **வில்லிதன் தூதன் யான்'**[200]

என்றான்.

'இராமன் வேதமும் அறமும் சொல்லும் மெய்யறமூர்த்தி ஆதலின் மெய்ஞானமும், வேள்வியால் உண்டாகும் பயன்களும் தவத்தால் பெறும் வரங்களும் அவன் நினைத்தவாறே பயனளிப்பன'[201] என்றான் அனுமன்.

'இராமன் முடிவில்லாத மறையின் கண்ணும் உபநிடதங்கள் விளக்கிக் காட்டவியலாத அறிவினுக்கு அறிவாய் நின்றவன். அவனே, கசேந்திரன் என்னும் யானையின் கால்களை முதலையொன்று கௌவிய போது 'முதலே' என்று அது அழைக்க, அந்த யானையைக் காக்க வந்த திருமாலேயாவன். அவன் இந்த மண்ணுலகில் தோன்றியது தேவர்களைக் காப்பதற்காகவே'[202] என்று மேலும் அனுமன் கூறினான்.

மேலும் அனுமன் 'அறத்தை நிலைநிறுத்தவும் வேதத்தில் சொல்லப்பட்ட நீதிகளை உலகோர் கடைப்பிடிக்கும் வண்ணம் அவர்களைச் செந்நெறியில் செலுத்தவும், தக்கோர் துயரினைப் போக்கவும் இங்கு மனிதனாய்ப் பிறந்துள்ளவன் தன்னை வாழ்த்துவார் பிறப்பை அறுக்கின்ற இராமனே' என்றான்.

'அறந்தலை நிறுத்தி வேதத் தருள்சுரந் தறைந்தநீதி
திறந் தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்தேக மீண்டும்
பிறந்தனன் தன்பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்'[203]

அனுமன் வாக்காகக் கம்பர் பாடிய இப்பாடல் கீழ்க்காணும் கீதை வாக்கிய மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளது. அவதார நோக்கத்தை விளக்கும் வகையில்,

'பரித் ராணாய சாதுனாம்
வினாசாய சதுர்க் ருதாம்
தர்ம சம் ஸ்தாபானார்த் தாய
சம்ப வாமி யுகே யுகே'[204]

என்னும் கீதை வாக்கியம் அமைந்துள்ளமை நோக்கத்தக்கது.

அடைக்கலமாக வந்த வீடணனை ஏற்றுக்கொள்ளல் தக்கதன்றென்று சுக்கிரீவன், நீலன் முதலானோர் கூறினர். அனுமன் ஒருவனே அடைக்கலமாக வந்தானை ஏற்றுக்கொள்ளல் தக்கதே என்றான். இராமன் மூலப்பொருள் என்பதை உணர்ந்த வீடணன் இராவணனைப் பிரிந்து வந்தானென்றான்.

இராமனின் தெய்வீக ஆற்றலை அனுமன்,

> **"தேவர்க்கும் தானவர்க்கும் திசைமுகனே முதலாய தேவதேவர்**
> **மூவர்க்கு முடிப்பரிய காரியத்தை முற்றுவிப்பான் மூண்டு நின்றாய்"[205]**

என்றான்.

**சுக்கிரீவன்**

சுக்கிரீவன் வாலியின் தம்பி. இராமன் வாலியைக் கொன்று சுக்கிரீவனைக் கிட்கிந்தைக்கு அரசனாக்கினான். வானரனாகிய சுக்கிரீவனை இராமன் தன் தம்பியருள் ஒருவனாக ஏற்றுக்கொண்டான். சுக்கிரீவன் தன் வானரசேனை முழுவதையும் இராம காரியத்திற்குப் பணித்தான்.

**'தாமரை மலர்கள் மலரப்பெற்று, மேகத்தைத் தழுவிப் பொலிந்த சந்திரமண்டலம் உதயம் செய்யப்பெற்ற மரகதமலை போன்ற இராமனைச் சுக்கிரீவன் கண்டான்.'[206]**

இராம லக்குவர் அழகில் ஈடுபட்ட சுக்கிரீவன் இவ்வுலகில் அன்றுதொட்டின்றுகாறும் புரிந்த நல்வினையெல்லாம் இரு படிவமாகி இரு தோள்களையும் பெற்று வீரர்களாய்த் தோன்றின[207] என்று எண்ணினான்.

தேவர்கட் கெல்லாம் தேவராகிய கடவுளே மானுடனாகி வந்ததால் சிவன் பிரமன் முதலிய தேவர் கூட்டத்தையெல்லாம் மானுடம் வென்றது என்றான் சுக்கிரீவன். இங்குத் திருமாலின் அவதாரக் கோட்பாட்டை விளக்கும் வகையில்,

> **'தேறின னமரர்கெல்லாம் தேவராந் தேவரன்றே**
> **மாறி இப்பிறப்பில் வந்தார் மானுடராகி மன்னோ**
> **ஆறு கொள் சடிலத்தானும் அயனு மென்றிவர்களாதி**
> **வேறுள குழுவையெல்லாம் மானுடம் வென்றதம்மா'[208]**

எனக் குறிப்பிட்டான். இதில் சிவன், பிரமன் ஆகிய தேவர்களினும் மானிடனாகிய இராமன் மேலானவன் என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது.

சுக்கிரீவன் இராமன் வில்லாற்றலைச் சோதிக்க விரும்பினான். ஏழு மராமரங்களை எய்துத்தன் ஆற்றலைப் புலப்படுத்த வேண்டினான். இராமன் தன் அம்பினால் ஏழு மராமரங்களைத் தொளைத்தான். இராமனது பேராற்றலை உணர்ந்த சுக்கிரீவன் அவனைப் போற்றித் துதித்தான்.

**'வைய நீ வானுநீ மற்றுநீ மலரின் மேல்**
**ஐயநீ ஆழிமேல் வாழு மாமாலுநீ**
**செய்யநீ வினை தெறுந் தேவுநீ -**
**உய்ய வந்துதவினாய் உலக முந்துதவினாய்'**[209]

என்பது சுக்கிரீவனது துதியாகும். இராமனைப் பிரமனாகவும், திருமாலாகவும், சிவனாகவும் உணர்ந்த நிலையில் அவன் தனக்கு அருள்புரிவான் என எண்ணி மகிழ்ந்தான்.

**வாலி**

வாலி இந்திரன் மகன்; சிவபக்தன்; நீலமாமணி நிறத்தரக்கனாம் இராவணனை வாலினாற் கட்டியவன். இவனை வாலியார் என்று தேவாரம் போற்றுகிறது.[210] **'கேள்விச் செல்வன்'**[211], **'சிறியன சிந்தியாதான்'**[212] **'பொய்யுரையாத புண்ணியன்'**[213] ஆகியன கம்பர் அவனுக்குக் கொடுத்துள்ள சிறப்புப் பெயர்கள். இவற்றால் வாலியின் குணநலன்கள் புலப்படும். தன்னை எதிர்த்தோர் பலத்தில் பாதியைத் தான் பெறத்தக்க வரத்தைப் பெற்றிருந்தான்.

இராமனது அம்பினால் தாக்குண்ட வாலி அவ் அம்பினைப் பறித்தெடுத்துப் பார்த்து அதை எய்தவன் இராமன் என்பதை உணர்ந்தான். இராமன் செயலை முறையற்றதெனக் கண்டித்தான். எனினும் இறக்கும் தருணத்தில் இராமனைத் திருமாலென உணர்ந்து துதித்தான்.

வாலி இராமனை **'அரந்தைவெம் பிறவிநோய்க்கு அருமருந்தனைய ஐயன்'**[214] என்றும் **'வரந்தரு வள்ளல்'**[215] என்றும் பாராட்டினான்.

தன் உயிர்போகும் சமயத்தில் தனக்கு மெய்ஞானத்தை அருளிய இராமனை,

**'ஏவுகூர் வாளியால் எய்து நாயடியனேன்**
**ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்தருளினாய்**
**மூவர்நீ முதல்வன்நீ முற்றுநீ மற்றுநீ**
**பாவநீ தருமநீ பகையுநீ உறவுநீ'**[216]

என்றான்.

சிவனிடம் தான் பெற்ற வரங்களை அழித்ததால் **'உன் அம்பினைக் காட்டிலும் தருமம் வேறுளதோ?'**[217] என்றான். இங்குச் சிவனிடம் வரம்

பெற்றவரையும் அழிக்கும் ஆற்றல் இராமனது அம்பினுக்கு உள்ளது என்பது உணர்த்தப்படுகிறது.

மேலும் வாலி, நீயாவன் என்பதையும், உன் இயல்பு எத்தகையது என்பதையும் நின்னருளால் என்னுள்ளே தோன்றிய நல்லறிவு எனக்கு விளங்க அறிவுறுத்தருளியது. கெடுதலில்லாத வீடுபேறு எனக்குக் கிடைத்தற் கருமையோ?[218] என்றான்.

நீ எனக்குக் கொடுத்த இத்தண்டனை பல பிறவிகளிலும் என்னால் ஈட்டப்பட்ட முதிர்ந்த பழைய வினைத் தொகுதியனைத்தையும் ஒரு நொடியிற் போக்கி மேலாகிய வீடு பேற்றினை அடியேற்கு வழங்கியது[219] என்றான்.

என் தம்பி எய்திய செல்வம் வெற்றரசுச் செல்வம். அவன் எனக்கு விட்டு வைத்ததோ வீட்டரசாகிய செல்வம்.

> 'வெற்றரசு எய்தி எம்பி
> வீட்டரசு எனக்கு விட்டான்'[220]

என்பது வாலியின் கூற்று.

வாலி சுக்கிரீவனிடம் 'வேதங்களும், முனிவர்களும், பிரமனும், மெய்நூல்களும் தெளிந்து கூறும் முழுமுதற் பொருள் தானே அற நெறியை நிலைநிறுத்த வில்லினைத் தாங்கி வந்துள்ளது என்பதைச் சந்தேகமின்றி எண்ணுவாயாக'[221] எனறான.

'இராமன் பதவியை எவர்க்கும் நல்கும் பண்ணவன் ஆதலின் அத்திரு மறுமார்பன் விடுக்கும் ஏவலினைத் தலைமேல் தாங்கி, மனத்தை ஒருமை நிலையில் நிறுத்தி மூன்றுலகங்களிலும் சிறப்புற்றுயர்க'[222] என்று வாலி தன் தம்பிக்கு அறிவுரை வழங்கினான்.

தன் நிலை கண்டு அழுது புலம்பிய அங்கதனிடம்,

> 'நாயகனிராமன் செய்த நல்வினைப் பயனிது'[223]

என்றான்.

இராமன் தனக்கு வீடுபேற்றினைத் தந்தான் என்பதை,

> 'யார்க்கும் சான்றென நின்றவீரன் தான்வந்து வீடு தந்தான்'[224]

என்றான்.

தனக்கு மேலாக வேறொரு பொருளுமில்லாத மெய்ப்பொருளே கண்ணுக்குப் புலனாகுமாறு நின்றது என்றும், அதுவே பிறவி நோய்க்கு மருந்து என்றும் தன் மகன் அங்கதனிடம் கூறி 'இராமனை வணங்குக' என்றான்.

> "...................................................... தன்னின்
> மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந்தாங்கி
> கால்தரை தோயநின்று கட்புலக் குற்றதம்மா
> மால்தரு பிறவிநோய்க்கு மருந்தென வணங்குமைந்த"[225]

என்பது அங்கதனுக்கு வாலியின் அறிவுரை. மேலும்,

> "உயிர்களுக்கு உறுதிப் பொருள்களை அளித்திடும்
> இத்தலைவனுடைய செந்தாமரைபோலும் திருவடிகளைச்
> சிரமேற்கொண்டு வாழ்வாயாக"[226]

என்றான்.

இராமனால் தண்டிக்கப்பட்ட வாலி வீடு பேறடைந்தான். இறக்கும் சமயத்தில் இராமனது தெய்வத்தன்மையினைத் தானும் உணர்ந்து பிறர்க்கும் உணர்த்தினான்.

**அங்கதன்**

இராமன் தூதுவனாக இராவணனிடம் சென்றான். தன்னை அவனிடம் அறிமுகம் செய்யும்போது இராமன் அனைத்திற்கும் நாயகனான இறைவன் ஆவான் என்றான்.

> 'பூத நாயகன் நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன் இப்பூமேல்
> சீதைநாயகன் வேறுள தெய்வநாயகன் நீசெப்பும்
> வேதநாயகன் மேனின்ற விதிக்கு நாயகன்றான்விட்ட
> தூதன்யான் பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன்'[227]

என்றான் அங்கதன்.

**சாம்பவான்**

பிரமனின் அமிசமாகத் தோன்றியவன். கரடி போன்ற தோற்றம் உடையவன். அவன் இராமனை,

> 'உன்னை நீ உணர்கிலை யடியனேனுனை
> முன்னமே யுணர்குவன்'[228]

என்பதன் மூலம் அனைவருக்கும் மூத்தவனான சாம்பவான் இராமனைத் திருமாலின் அவதாரமென உணர்ந்திருந்தான் என்பதை அறியலாம்.

வானரர்கள் தேவர்களின் அமிசமாதலின் அவர்கள் இராமனைத் திருமாலென உணர்ந்து போற்றுவது குறிப்பிடத்தக்கது.

**அரக்கர்**

அரக்கர் குலத்தவரில் வீடணன், கும்பகருணன், மாலியவான், மண்டோதரி ஆகியோர் இராமாவதாரத்தை உணர்ந்து போற்றியவர்கள். இராவணன் இறக்கும் தறுவாயில் இராமன் இன்னானென்பதை உணர்கிறான்.

**வீடணன்** இராவணனின் இளைய தம்பி. அவன் தருமம் போன்றானென்றும், வெண்மை நிறத்தோடு அரக்கர் மத்தியில் வாழ்தல் அரிதாதலின் கருமை நிறத்தோடு காட்சியளித்தானென்றும் கம்பர் கூறுகிறார்.[229] அனுமன் தன் உணர்வினாலறிந்து வீடணனைக் 'குற்றமில்லதோர் குணத்தினன்'[230] என்றான். முழுமுதற் கடவுளைப் பகைத்தழிந்த இரணியன் வரலாற்றை இராவணனுக்கு எடுத்தியம்பி அவனை நல்வழிப்படுத்த முயன்றான். இராமன் திருமாலின் அவதாரமென்பதை இராவணனுக்குத் தெரிவித்தான். ஆனால் ஆணவத்தின் எல்லையில் நின்ற இராவணன் வீடணனைப் பரிகசித்துத் துரத்தினான்.

இராவணன் நடத்திய மந்திராலோசனையில் வீடணன், இராமனைப் பகைக்கின் 'இந்திரர் பெரும்பதம் இழக்க நேரிடும்'[231] என்று எச்சரித்தான்.

'சீதை அமிழ்தில் தோன்றிய திருமகளே'[232] என்றும் அரக்கர் செய்த தீவினைப் பயனால் தசரதன் மக்கள் இராமலக்குவர் என்னும் மனிதர்களாகப் பிறந்துள்ளார்கள் என்றும் வீடணன் இராவணனிடம் கூறினான்.

மேலும் வீடணன், 'சிவன், திருமால் என்ற இருவரில் ஒருவரை இராமனுக்குச் சமமாகச் சொல்ல முடியாது'[233] என்றான்.

'உயர்வற உயர் நலம்' உடைய இறைவனே இராமனாக வந்துள்ளான் என்பதை,

> **'தன்னின் முன்னிய பொருளிலா ஒருதனித்தலைவன்**
> **அன்ன மானுடனாகி வந்தவதரித் தமைந்தான்'**[234]

என்றான.

இராவணனை விட்டு நீங்கிய வீடணனிடம் அவனது அமைச்சர்கள் **'தாழ்ச்சியில் பொருள் தரும் தரும மூர்த்தி ஆகிய இராமனைக் காண்பதே கடன்'**[235] என்றனர். மேலும்.

> **"எல்லையில் பெருங்குணத்து இராமன் றாளிணைப்**
> **புல்லுதும் புல்லியிப் பிறவி போக்குவோம்"[236]**

என்றனர்.

வீடணன், இராமனைக் காணா நிலையிலும், கேளா நிலையிலும் அவன்மீது அன்பு தோன்றுவதையும் என்பு குளிர்வதையும், நெஞ்சு உருகுவதையும் உணர்ந்து '**அவனே பிறவியறுப்பவன்**' என்றான்.

> **"முன்புறக் கண்டிலன் கேள்வி முன்பிலன்**
> **அன்புறக் காரணம் அறிய கிற்றிலன்**
> **என்புறக் குளிரும் நெஞ்சுருகு மேலவன்**
> **புன்புலப் பிறவியின் பகைவன் போலுமால்"[237]**

என்பது வீடணன் கூற்றாகும்.

சுக்கிரீவன் வீடணனை இராமனிடம் அழைத்துச் சென்றான். இராமனைக் கண்ட வீடணன் உள்ளம் உருகினான். அவனைத் திருமாலென்று உணர்ந்த நிலையில்,

> **"வீரனை நோக்கியங்கம் மென்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர்**
> **வார நெஞ்சுருகிச் செங்கண் அஞ்சன மலையன்றாகில்**
> **கார்முகில் கமலம் பூத்த தன்றிவன் கண்ணன் கொல்லாம்**
> **ஆரருள் சுரக்கு நீதி அற நிறங் கரிதோ"[238]**

என்று உணர்ச்சி பொங்கப் பேசினான்.

> **"இராமனைக் கண்ட வீடணன் அவன் திருமாலே என உணர்ந்தான். இராமபிரானுடைய சௌலப்பியம், கருணை, எல்லையிலா அழகு முதலிய குணங்களிலீடுபட்ட கவிச் சக்கரவர்த்தி வீடணன் பேச்சால் அவற்றை இங்கு ஒரு சித்திரம் போல் வரைந்து காட்டியமை மிகவும் பாராட்டத்தக்கது"[239]**

என்பார் வை.மு.கோ.

**'மின்மினி போலத் தோன்றி மறைகின்ற பிறவியை அடியோடு ஒழிக்கவே மகுடத்தை விடுத்துத் திருவடியைப் புனைந்த பரதனின் தமையனும், பிரமன் தந்தையுமாகிய இராமனைச் சரணடைய என்**

**அண்ணன் எனக்குச் செய்த உதவிதான் என்னே:'**[240] என வீடணன் வியந்து மகிழ்ந்தான்.

**'தவம் செய்தார்க்கும் போக்குதற்கரிய பிறவி நோய்க்கு மருந்தென நின்ற இராமனால் கொல்லப்படவிருக்கும் அரக்கர்களும் தவம் செய்தவர்களே'**[241] என்றான்.

**'இராமனைக் கண்ட வீடணன் தன் கைகளைத் தலையில் கூப்பிய வண்ணம் வரங்களின் வாரியன்ன (இராமனின்) தாளிணைகளில்'**[242] வீழ்ந்தான்.

இராமன் வீடணனைத் தன் தம்பியருள் ஒருவனாக ஏற்றான். இராமன் திருவடி நிலைகளாகிய செம்பொற் கிரீடத்தைத் தன் தலையில் சூட்டிக் கொண்டான்.

அரக்கனாகிய வீடணன் பெற்ற பேற்றினை யார் பெறுவாரென அனைவரும் வியந்து பாராட்டினர்.

வீடணன் தன் அண்ணன் கும்பகருணனை இராமன் பக்கல் சேருமாறு அழைத்தான். அப்போது இராமனின் இறைத்தன்மையை,

> **"மூவர்க்கும் தலைவரான மூர்த்தியார் அறத்தை முற்றும்**
> **காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடம் காட்டி"**[243]

என்று சொல்லி வெளிப்படுத்தினான்.

போர்க்களத்தில் இந்திரசித்தனைப் பார்த்து வீடணன் **'மூன்றுலகும் ஏத்தும் முதல்வனும், எவர்க்கும் மூத்த தேவர்தம் தேவன் தேவியாகிய சீதை என்னும் கற்பரசிக்குத் துன்பம் செய்தல் தீதென்றுரைத்ததனால் உன் தந்தையாகிய இராவணன் என் மேற் சீறிப் 'போக' என்றான். நானும் போந்தேன். நான் நரகிற்குச் செல்வேனோ?'**[244] என்றான்.

இராமனைக் கடவுள் என உணர்ந்த வீடணன் அவனைச் சரணடைந்தான். ஏனோர் அடைந்த சரணாகதியினும் இதுவே சிறந்தது எனப் போற்றப்படுகிறது. சரணாகதி இங்குச் சிறப்பாகப் பேசப்படுதலின் இராமாயணம் சரணாகதி சாத்திரம் என்னும் பெயரினைப் பெறுகிறது.

**கும்பகருணன்** இராவணனின் மூத்த தம்பி. ஆறு மாதங்கள் தொடர்ந்து உறங்குமாறு சாபம் பெற்றவன். மலை போன்ற தோற்றத்தினை உடையவன். அவன் உள்ளம் நியாயத்தின் பால் நின்றதாயினும்

செஞ்சோற்றுக் கடன் கழிக்க இராவணனுக்காகப் போர்க்களம் புகுந்து உயிர்விட்டவன்.

போர்க்களத்தில் கும்பகருணன் இராமனைப் பார்த்தான்.

**"கண்டனன் வதனம் வாய்கண் காலெனப்
புண்டரீகத் தடம் பூத்துப் பொற்சிலை
மண்டலந் தொடர்ந்து மண்வயங்க வந்ததோர்
கொண்டலிற் பொலிதரு கோலத்தான் றனை"[245]**

என வருணிக்கப்படுகிறது.

வீடணனைக் கும்பகருணன் **'இராமனென் பானைப் பற்றிப் பிறப்பெனும் புன்மை தீர்ந்தாய்'[246]** என்றான். இராமனைக் கடவுளென உணர்ந்த கும்பகருணன்,

**'அரசுருக் கொண்டமைந்த வேதியா'[247]**

என்றான்.

**மாலியவான்** இராவணனுக்குப் பாட்டன் முறையினன். மூலபலச் சேனையை இராமன் வில்லால் அழித்த செய்தியைத் தூதுவர் இராவணனுக்குச் சொல்ல அவன் ஐயுற்றான். அப்போது மாலியவான் அவனிடம் **'பாற்கடலில் அரவணைப் பள்ளியில் துயின்ற பரமனே இராமனென வீடணன் சொன்ன சொல் பொய்க்குமோ?'[248]** என்றான்.

**இராவணன்** அரக்கர் குல முதல்வன். இலங்கைக் காவலன். பிரமனிடம் முக்கோடி வாணாளை வரமாகப் பெற்றவன். புலத்தியன் மாபில் வந்தவன். சிவபொருமான் உறையும் கயிலாயத்தைக் தூக்க முயன்றவன். சிவனிடமிருந்து வாளைப் பரிசாகப் பெற்றவன். தேவர்களாலும் அவனை வெல்ல இயலவில்லை. நாளும் சிவபூசை செய்து வந்தான். இராமலக்குவரை மானிடர் என ஏளனம் செய்தான். பிறன் மனை நயந்தமையால் அவனுக்கு அழிவு நேர்ந்தது.

இராமனது அம்புகள் தோன்றும்போது பிரமனைப் போலவும், ஓடும்போது திருமாலைப் போலவும், பகைவர்களை அழிக்கும் போது உருத்திரனைப் போலவும் செயல்பட்டமையைக் கண்டான்.[249] தனக்கு நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றதாகப் பெருமிதத்தோடு பேசினான்.

இராவணன் இராமன் மீது சூலத்தை எறிந்தான். இராமன் ஊங்காரத்தால் அதைப் பொடியாக்கினான். அதுகண்ட இராவணன் இராமனை வேதமுதற் காரணனாகிய பரம்பொருள் என உணர்ந்து குறிப்பிட்டான்.[250]

**மண்டோதரி** இராவணன் மனைவி. கணவனை இழந்து அழுது புலம்பிய போது தான் இராமனை நாராயணன் என எண்ணியிருந்ததாகச் சொன்னாள்.

> **'ஆரா அமுதாய் அலைகடலில் கண்வளரும்**
> **நாராயண னென்றிருப் பேனிராமனை நான்'**[251]

என்னும் மண்டோதரியின் வாக்கினால் அவளது சிறப்பு புலப்படுகிறது.

அரக்கர் கொடியவராயினும் அவருள்ளும் செம்மனத்தினர் இருந்தனர். நடுநிலையில் நின்ற அவர்களின் உள்ளம் இறைவனைக் கண்டுணர்ந்து போற்றத் தவறவில்லை.

**முனிவர்கள்**

வசிட்டன், விசுவாமித்திரன், அகத்தியன் ஆகிய மூவரும் பிரம இருடிகள் எனப் பெயர் பெற்றவர்கள். இராம காரியத்திற்கு நேரிடையாகவோ, மறைமுகமாகவோ உதவியவர்கள். '**இந்த அவதாரத்தின் உண்மைகளை உள்ளவாறு உணர்ந்தவர்கள் மகரிஷிகளேயாவர். அவர்களுள் ராமாவதாரத்துக்கு உதவியர்கள் வசிஷ்டர், விசுவாமித்திரர், அகஸ்த்தியர் என்ற பிரம்மரிஷிகள்**'[252] என்பர்.

**வசிட்டன்** தசரத மன்னனின் குலகுரு. அவனை '**அயனே நிகர் தூய மாமுனி**'[253] என்றார் கவி. பிரமன் மகனாகிய வசிட்டன் ஐம்பொறிகளை வென்றவன்.[254]

முக்காலமும் உணர்ந்த வசிட்டன், திருமால் தசரதன் மகனாகப் பிறக்கவிருப்பதை அறிந்திருந்தான். கலைக்கோட்டு முனிவனைக் கொண்டு மகவருள் வேள்வி செய்ததனால் புத்திரர் நால்வர் பிறந்தனர்.

தசரதன் முதலானவர்களோடு மிதிலை வந்த வசிட்டன் இராமனும் சீதையும் திருமாலும் திருமகளுமே எனக் கூறினான்.

> **"எங்கள் செய்தவத்தினி லிராமனென வந்தான்**
> **சங்கொடு சக்கரம் தரித்த தனி முதற்பேர்**
> **அங்கண ரசாதலினவ் அல்லிமலர் புல்லும்**
> **மங்கை யிவளாமென வசிட்டன் மகிழ்வுற்றான்"**[255]

என்பது அப்பாடல்.

இராமனுக்குத் தான் முடிசூட்ட விருப்பதைத் தசரதன் அமைச்சர்களுக்கும் வசிட்டனுக்கும் தெரிவித்தான். அப்போது வசிட்டன் திருமாலே இராமனாக வந்து அவதரித்துள்ளான். அவனே முத்தொழிலும் புரிகின்றான் என்ற கருத்தில்,

> "புறத்து நாமொரு பொருளினிப் புகல்கின்ற தெவனோ
> அறத்தின் மூர்த்தி வந்தவதரித் தானென்பதல்லால்
> பிறத்தி யாவையும் காத்தவை பின்னுறத் துடைக்கும்
> திறத்து மூவரும் திருத்திய திருத்துமத் திறலோன்"[256]

என்றான்.

பூமகளும் மண்மகளும் இராமன் தன் இன்னுயிர்த் துணைவனான திருமாலே எனக் கருதினர். இதனை வசிட்டன்,

> 'பொன்னுயிர்த்த பூமடைந்தையும் புவிஎனும் திருவும்
> இன்னுயிர்த் துணை இவனென நினைக்கின்ற விராமன்'[257]

என்றான். இராமன் திருமாலின் அவதாரம் என்பதை வலியுறுத்தவே அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான் எனக் கம்பர் வசிட்டன் வாக்கினால் தெரிவித்தார்.

**விசுவாமித்திரன்** மன்னனாயிருந்து வசிட்டனோடு பகைத்துத் தானும் பெருந்தவமியற்றிப் பிரம இருடியானவன். இராமலக்குவரைத் தன் வேள்வி காக்கக் கானகம் அழைத்துச் சென்றான். இராமன் கானகத்தில் தாடகையை வதைத்தான். கல்லாய்க் கிடந்த அகலிகை அவன் பாததூளி பட்டு உயிர் பெற்றாள். மிதிலையில் நடக்கவிருந்த வேள்விக்கு இராமலக்குவரை விசுசாமித்திரன் அழைத்துச் சென்றான். இராமனையும் சீதையையும் கூட்டிவைத்து அவர்கள் திருமணம் நிறைவேற உதவினான்.

தன் வேள்வியைக் காத்துதவிய இராமனை விசுவாமித்திரன் பாராட்டினான். உலகங்களைப் படைத்துப் பின்னர் பிரளய காலத்தில் அழகிய வயிற்றில் ஒடுக்கிக் காத்த இராமன் முனிவனது வேள்வியைக் காத்தது ஓர் அரிய செயலன்று[258] என்றான்.

இராமன் பாததூளி பட்டுக் கல்லாய்க் கிடந்த அகலிகை பெண்ணானாள். இராமன் வில்லாற்றல் தாடகையைக் கொன்றது. இதனை விசுவாமித்திரன்,

"................................... மழைவண்ணத் தண்ணலேஉன்
கைவண்ணம் அங்குக் கண்டேன் கால்வண்ணம் இங்குக் கண்டேன்"[259]

என இராமன் கரங்களின் (தீயோரை) அழிக்கும் ஆற்றலினையும், பாதங்களின் அருள் புரியும் இயல்பினையும் வெளிப்படுத்தினான்.

**அகத்தியன்** அமிழ்தினுமினிய தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்துப் புகழ் பெற்றவன். '**நீண்ட தமிழால் உலகை நேமியின்**'[260] அளந்தவன். இவன்,

'**என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொண்டான்**'[261]

என்ற பாராட்டுக்கு உரியவன். அகத்தியன் காவிரி கொணர்ந்ததை,

'**எண்டிசையும் ஏழுலகும் எவ்வுயிரும் உய்யக்
குண்டிகையினில் பொருவில் காவிரி கொணர்ந்தான்**'[262]

என்ற பாராட்டைப் பெறுகிறான்.

அகத்தியன் வில்வலன், வாதாவி ஆகிய அசுரர்களை அழித்தான். சிவன், பார்வதி திருமணம் காண அனைவரும் கைலாயம் ஏகினர். வடதிசை தாழத் தென்திசை உயர்ந்தது. சிவன் அகத்தியனைத் தென்திசை செல்லுமாறு பணித்தான். அகத்தியன் தென்திசைச் செல்லச் சமநிலை எய்தியது. சிவன் தனக்குத் தந்த தமிழை, அகத்தியன் அனைவருக்கும் தந்தான் என்பதைக் கம்பர்,

'**நிழற்பொலி கணிச்சிமணி நெற்றிஉமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்**'[263]

என்றார்.

விண்ணிலும் மண்ணிலும் இவற்றிற்கு வேறாயுள்ள உலகங்களிலும், அவ்வுலகிலுள்ளாரது பேரறிவிலும் வேதத்திலுமுள்ளவனும், எல்லோரது உள்ளங்களிலும் கருத்துப் பொருளாயிருப்பவனுமான இராமனைக் கண்ணில் காட்சிப் பொருளாய்க் காணப் பெறுவது குறித்து அகத்தியன் மகிழ்ந்தான்.[264]

வேதங்கள் நான்கினையும், அவற்றோடு தொடர்புடைய பிற நூல்களையும் நெடிய ஞானமாகிய உயர்ந்த அம்மியிலிட்டு நெடுநாள் அரைத்தும், பிரமனாலும் அறியவியலாத பரம்பொருள் நம் கண்ணெதிரே நின்று உரையாடி அருளை உதவப்போகிறது என அகத்தியன் மகிழ்ந்தான்.[265]

அகத்தியன் இராமனை '**வெந்திறல் அரக்கர் விடவேர் முதலறுப்பான் வந்தனன் மருத்துவன்**'[266] என மகிழ்ந்தான். அரக்கர்களாகிய காட்டுத் தீயை அவித்து உலகைக் காப்பாற்றும் மழை வானத்திருந்து வந்தது என மகிழ்ந்தான்.[267]

அகத்தியன் இராமனைப் பார்த்து, '**அருட் கரசனே! என் அருந்தவம் முடித்தனை**'[268] என்றான்.

இராமன் இவ்வுலகில் தோன்றியதனால்,

> **"வாழும் மறை வாழும் மனுநீதி அறம் வாழும்**
> **தாழும் இமையோர் உயர்வர் தானவர்கள் தாழ்வர்"**[269]

என்றான். இதனால் அறத்தைக் காக்கவும், தேவர்களைக் காக்கவும், அரக்கரை அழிக்கவும் இராமன் இவ்வுலகில் தோன்றினான் என்பதை அகத்தியன் வலியுறுத்தினான் எனலாம்.

**பரசுராமன்** திருமாலின் ஆவேச அவதாரம் ஆவான். தன் தந்தையைக் கொன்றதற்காக அரசர் வழி வந்தவரை இருபத்தோரு தலைமுறை கருவறுப்பதாகக் கூறி, மன்னர்களைக் கொன்று நில முழுவதும் தன்வசமாக்கிப் பின் காசிப முனிவருக்கு ஈந்தான். அஞ்சத்தக்க பேராற்றல் உடையவன்.

இராமன் திருமணத்திற்குப் பின் அயோத்தி திரும்பிய தசரதன், இராமன் முதலானோரைப் பரசுராமன் எதிர்கொண்டான். தசரதன் கவன்றான். தன்னிடமுள்ள விட்டுணுவின் வில்லை வளைத்து நாணேற்றுமாறு பரசுராமன் இராமனிடம் கூறினான். இராமன் அவ்வில்லை நாணேற்றி '**இதற்கு இலக்கு யாது?**' என்றான். பரசுராமன் தான் ஈட்டிய தவத்தையே இலக்காக்க, அவன் தவ வலிமை முழுதும் அழிந்தது. பரசுராமன் இராமனின் உண்மை இயல்பு உணர்ந்து அவனைப் போற்றினான். ஆவேச அவதாரமாகிய பரசுராமனிடம் புக்குறைந்த ஆற்றல் அமிசாவதாரமான இராமனால் கவர்ந்து கொள்ளப்பட பரசுராமன் தோல்வியுற்றான்.

பரசுராமன், '**நீ அனைவர்க்கும் ஆதியான்; திருமாலின் வில்லே உன்னால் வளைக்கப்பட்டதென்றால் சிவன் வில்லைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?**'[270] என்றான்.

**'நீ மின்னுடைய நேமியான் என்பது உண்மை. இனி உலகிற்குத் துன்பமில்லை. யான் தந்த விட்டுணுவின் வில்லும் உன் ஆற்றலுக்கு ஈடாகாது'.**[271]

**'நீ நினைத்த காரியம் அனைத்தும் வெற்றி பெறுவதாக. வண்டுழாய் மாலை அணிந்தவனே; யாவர்க்கும் கண்ணான புண்ணிய, எனக்கு விடைகொடு'**[272] என்று பரசுராமன் தொழுது சென்றான்.

இங்குப் பரசுராமன் விட்டுணு வில்லின் உயர்வு தோன்றப் பேசுவதை அறியலாம். இராமன் கையினால் பற்றியதனால் சிவனது வில் முறிந்ததில் வியப்பேதுமில்லை என்ற கருத்துப்படப் பரசுராமன் பேசியுள்ளது இங்கு நோக்கத்தக்கது.

### வீடுபேறடைந்தோர்

இராமனைக் கண்ணாற் கண்டும், அவன் திருவடிகளைத் தரிசித்தும், அவனை உபசரித்தும் வீடுபேறடைந்தோர் சரபங்கன், சடாயு, சபரி ஆகியோராவர்.

**சரபங்கன்** என்றால் சரத்தினைப் பங்கம் செய்தவன் என்பது பொருள். சரபங்கன் காமபாணத்தை வென்றவன்.

இராமன் சீதை, இலக்குவன் ஆகியோருடன் சரபங்க முனிவன் தவம் புரியும் வனத்தை அணுகினான். இந்திரன் பிரமன் கட்டளையால் முனிவனைப் பிரமலோகம் அழைத்துச் செல்ல அங்கு வந்திருந்தான். **'பிரம உலகம் ஒரு குறிப்பிட்ட கால அளவோடு அழிதன் மாலையது. அழியாப் பரமபதத்தை அடைய நான் விரும்புகிறேன்'**[273] என்றான் சரபங்கன். இராமனைக் கண்ட சரபங்க முனிவன், **'எனக்குப் பரமபதத்தை அருளுக'**[274] என்றான். பின்னர் அவன் தன் மனையாளுடன் தீப்புகுந்து வீடுபேறு அடைந்தான்.

இராமன் சரபங்கன் ஆசிரமத்தை அடைந்தபோது இராமனைக் கடலில் யோக நித்திரை புரியும் திருமால் என எண்ணி அகமகிழ்ந்தான்.[275]

முனிவன் எரிபுகத் துணிந்து இராமனிடம் விடைகேட்டான். அவன் இராமனிடம், **'நீ இங்கு வருவாயெனும் உறுதியுடையேன். நீ இவண் வந்தனை. உன்னைக் காணப் பெற்றதால் என் இரண்டு வினைகளும் அழிந்தன. இனி, இந்த உலகில் செய்ய வேண்டிய செயல்ஒன்றுமில்லை'**[276] என்றான். சரபங்கன் தீயிடைப் புகுந்து வீடுபேறடைந்தான்.

இறுதிக் காலத்தில் இறைவனை நேரில் காணும் பேற்றினைச் சரபங்கன் பெற்றான் என்பதைக் கம்பர்,

> **"அண்டமும் அகிலமும் அறிவரு நெறியால்**
> **உண்டவ னொருபெய ருணர்குவ ருறுபேறு**
> **எண்டவ நெடிதெனில் இறுதியில் அவனைக்**
> **கண்டவ ருறுபொருள் கருதுவ தெளிதோ?"[277]**

என்பர். இதனால், தீப்புகுந் தறுவாயில் இராமனைக் கண்ணாரக் கண்டமையால் சரபங்கன் வீடுபேறு அடைந்தான் என்பதும், பதவியை எவர்க்கும் நல்கும் பண்ணவன் என்பதற்கிணங்க இராமன் வீடுபேற்றை அருளுபவன் என்பதும் போதரும்.

**சடாயு** அருணன் புதல்வன். கழுகுவேந்தன். தசரத மாமன்னனின் உயிர்த்தோழன்.

இராம லக்குவரைத் தன் நண்பனின் மக்கள் என அறிந்து மகிழ்ந்தான். தசரதன் இறந்த செய்தி கேட்டுப் பெரிதும் வருந்தித் தானும் எரியில் விழுந்து உயிர்விடத் துணிந்தான். மன்னன் மைந்தர்கள் தடுத்தனர். தாங்கள் கானகமடைந்த காரணத்தைத் தெரிவித்தனர். அவர்கட்குத் தான் துணையிருப்பதாகச் சடாயு தெரிவித்தான். அவர்கள் பஞ்சவடியில் இருந்தபோது அவர்களைக் காத்துவந்தான்.

சீதையை இராவணன் பர்ணசாலையோடு தூக்கிச் சென்றான். சீதை அழுது புலம்பினாள். சீதையின் அழுகுரல் கேட்ட சடாயு இராவணனை எதிர்கொண்டு, அவனுக்கு இராமன் யார் என்பதை உணர்த்து முகமாக,

> **"முத்தேவரின் மூலமுதற் பொருளாம்**
> **அத்தேவரிம் மானிடர் ஆதலினால்**
> **எத்தேவரொ டெண்ணுவது எண்ணமிலாப்**
> **பித்தே றினையாதல் பிழைத்தனையால்"[278]**

என்றும்,

> **"பஞ்சனை பாம்பணையாகப் பள்ளிசேர்**
> **அஞ்சன வண்ணனே இராமனாதலால்**
> **வெஞ்சின அரக்கரால் வெல்லற்பாலரோ**
> **வஞ்சனை இழைத்தனன் கள்ள மாயையால்"[279]**

என்றும் கூறினான். சடாயு அருணன் புதல்வனாதலின் இராமன் திருமாலின் அவதாரமென்பதை அறிந்திருந்தான் எனலாம்.

இராவணன் சடாயுவைத் தன் வாளால் வெட்டி வீழ்த்தினான். சிறகுகள் வெண்டுண்ட சடாயு குற்றுயிராய்க் கிடந்தான். இராமலக்குவர் அங்கு வந்தனர். சடாயு இறக்குந் தறுவாயில் வேதங்களாலும் காணமுடியாத இராமன் திருவடிகளைக் கண்ணாற் கண்டு மீளா உலகமாகிய வைகுந்தம் அடைந்தான். இதை,

> **"சீதங்கொள் மலருளோனும் தேவருமென்ப தென்னே**
> **வேதங்கள் காண்கிலாமை வெளிநின்றே மறையும் வீரன்**
> **பாதங்கள் கண்ணிற் பார்த்தான் படிவங்கொள் நெடியபஞ்ச**
> **பூதங்கள் விளியு நாளும் போக்கிலா உலகம் புக்கான்"[280]**

என்பார் கவி.

இராமன் தந்தையாகிய தசரதனுக்கு வைகுந்த பதவி கிட்டியது போன்றே, அவன் பெரிய தந்தையாகிய சடாயுவும் இராமன் திருவடிகளைக் கண்டு அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினை அடைந்தான்.

**சவரி** என்பவள் மதங்க முனிவரின் மாணாக்கர்க்குத் தொண்டு புரிந்து கொண்டு தவம் செய்த ஒரு வேட்டுவப் பெண். அவள் இராமலக்குவர் மதங்க முனிவரின் ஆசிரமத்திற்கு எழுந்தருள்வதை முன்னமேயறிந்து அவர்களை எதிர்நோக்கியிருந்தாள். அவர்களுக்குப் படைப்பதற்காகக் கனிவகைகளைச் சேர்த்து வைத்திருந்தாள். அவ்விருவரும் அங்கு வந்தவுடன் அவர்களைக் கண்டு களித்துச் சேவித்துத் தன்னிடமிருந்த பழங்களைப் படைத்து விருந்தூட்டி மகிழ்ந்தாள். சுக்கிரீவன் உறைந்த மலையினையும் அவர்க்குத் தெரிவித்தாள். பின் தன் உடலைக் களைந்து பிறப்பை ஒழித்து முக்தி அடைந்தாள்.

சிவபெருமானும் பிரமனும் மற்றைத் தேவர்களும் சபரியைப் பார்த்து உனது குற்றமற்ற தவத்திற்குச் சித்தி பெறுங்காலம் நெருங்கிவிட்டது. இங்கு வரவிருக்கும் இராமனுக்கு வழிபாடுகளை உவந்து செய்துவிட்டு எமது உலகுக்கு வருவாயாக[281] எனச் சொல்லிச் சென்றனர். **'உன் வருகையால் என் புண்ணியப் பலன் மலர்ந்து பயனளிப்பதாயிற்று'[282]** என்று சொல்லிச் சவரி வீடுபேற்றினை அடைந்தாள்.

இராமனைக் கண்டு அவனை உபசரித்தமையால் சவரி வீடுபேறடைந்தாள் என்பது தெளிவாகிறது.

## துதி செய்தோர்

இராமனைத் துதிசெய்தோர் இந்திரன், வருணன், கருடன், விராதன், கவந்தன் ஆகியோராவர். அவர்களுள் இந்திரன், வருணன், கருடன் ஆகியோர் தெய்வத்தன்மை மிக்கவர்கள். விராதனும் கவந்தனும் கந்தர்வர்களாயிருந்து சாபத்தினால் அரக்கரானவர்கள். இராமனால் சாபநீக்கம் பெற்றவர்கள். அவர்கள் அனைவரும் இராமனது உண்மை இயல்பு உணர்ந்து அவனைப் போற்றித் துதித்தனர். அவர்களின் போற்றுதல்கள் இராமனைத் திருமாலெனக் காட்டுகின்றன. திருமாலின் பல்வேறு அருட்செயல்களை அவர்கள் இராமன் மீது ஏற்றி மொழிவதும் குறிப்பிடத்தக்கது.

**இந்திரன்** தேவருலகத் தலைவன். அவன் சரபங்கனைச் சத்தியலோகம் அழைத்துச் செல்ல அவனது ஆசிரமத்திற்கு வந்திருந்தான். இராமன் அவ் ஆசிரமம் அமைந்திருந்த சோலையை அடைந்தான். இந்திரன் இராமனைத் தொலைவில் கண்டு அவனைப் பலவாறு துதித்தான்.

தாமரை மலர் போன்ற இரு கண்களை உடையவனும், கருஞாயிறு போன்றவனும், உணர்தற்கரிய நான்மறையின் கனியுமாகிய இராமனைத் தன் ஆயிரம் கண்களும் பொருந்துமாறு பார்த்தான்.[283] அவனைத் தொழுது துதிக்கத் தொடங்கினான்.

'நீ பிரமனிடமிருந்து மறைகளைக் கவர்ந்து சென்ற மதுகைடபர் என்ற அரக்கர்களைப் போரில் தொலைத்து மறைகளை மீட்டுக் கொணர்ந்து அயக்கிரீயத் தேவனாய்ப் பிரமனுக்கு உபதேசித்தாய்.'[284]

'நீ எல்லா உயிர்களையும் அறவழியில் செலுத்துபவன். இம்மையில் செல்வமும் மறுமையில் வீடுபேறும் தருபவன்'.

'நீ உயிர்களைக் கவசமாய்க் காக்கிறாய். ஆருயிராய்க் காக்கிறாய். கல்வி அறிவாக இருந்து காக்கின்றாய். ஈறில்லாத அறிவாக இருந்து காக்கின்றாய். சுருதிப் பெருங்கடலின் சொற்பொருள் கற்பிக்கின்றாய்'.

'உலகிலுள்ள பொருள்களனைத்திலும் கலந்துறையும் குற்ற நற்றங்கள் உன்கட் சேராது. சுய ஒளியுடன் திகழ்கின்றாய். நீ பற்றற்றவரால் பற்றப் பெறுபவன்'.

'நீ கருணையின் நிலையம்; வேத நெறிமுறையில் ஆராய்ந்து பெற்ற தத்துவ உணர்வு கொண்டு அறியத்தக்க பரம்பொருள்'.

'பகைவர்களால் நலியப்பட்ட நாங்கள் உன் திருவடி ஏத்த, எங்கள் பொருட்டு உன் தாமரைத் திருவடிகள் அஞ்ஞானம் மிக்க நிலவுலகில் பொருந்தின.'[285]

'நீ கருங்கடலில் கண் வளர்ந்தாய். உனக்குப் பகைவர்களுமில்லை; நண்பர்களுமில்லை. உன் உலகத்தில் ஒளியுமில்லை; இருளுமில்லை. எங்கும் நிறைந்துள்ளது உன் திருமேனி. உனக்கு மேல் கீழ் இல்லை. இளமை முதுமை இல்லை. முதல், இடை, இறுதி இல்லை. முன் பின் இல்லை. எங்களைக் காவாவிடின் உனக்குப் பழி பெரிதோ? உனக்குச் செய்யும் கைம்மாறு ஏதுமில்லை'.[286]

'பிரமன் உன் திருவுந்தித் தாமரையில் தோன்றியவன். நீ உன் தாமரைக் கைகள் நோவப் பாற்கடல் கடைந்து தேவர்கட்கு அமுதளித்தாய்'[287].

'நீ அண்டங்களையும் பொருட்களையும் தன்னுட் கொண்டு தனித்திருந்தாய். பின் உலகத்தைத் தோற்றுவித்தாய். முடிவுறுங் காலத்து அந்த முதல்நிலையில் உள்ளவாறாகி, மீண்டும் பலவகைப்பட்ட உலகமாகி மிகவும் செம்மையாய் நின்ற அறிவின் ஒப்பற்ற கொழுந்து. குறை தீர்ப்பவன் நீ. நற்கருமஞ் செய்வாரைக் காக்கின்றாய். தீயோரை அழிக்கின்றாய். தீய செயல்களும் உன்னால் படைக்கப்பட்டவையே'.[288]

'நீயே முதல் தேவன். எல்லையுடன் கூடிய உலகங்கள் நின்னிடத்தே உள்ளன' என்று நிலைபெற்ற முதன்மை வாய்ந்த முனிவர் எழுவர் சூளுறவு செய்தனர்.'[289]

சரபங்கன் ஆசிரமம் வந்த இந்திரன் இராமனைக் கண்டான். எனினும் அவனைச் சந்திக்காது சென்றான் என்று வான்மீகி இராமாயணத்தில் உள்ளது.[290] இராமனைத் தொலைவிலிருந்து இந்திரன் துதி செய்ததாகக் காட்டியிருப்பது கம்பர் புதிதாகப் புனைந்தது. இங்கு இராமனை நோக்கி இந்திரன் கூறியவையெல்லாம், அவன் இராமனைத் திருமாலாகவே கருதிக் கூறியவை எனலாம். கம்பரின் கடவுட் கோட்பாட்டை வரையறுக்க இவ் இந்திரன் துதியினைத் தக்க சான்றாகக் கொள்ள முடியும்.

**வருணன்** கடல் தெய்வம். இராமன் கடலைக் கடக்கும் உபாயத்தை வீடணனிடம் கேட்டான். வீடணன் உபாயம் சொல்ல, இராமன் ஏழு நாட்கள் தருப்பசயனத்தில் கிடந்து வருண மந்திரம் உச்சரித்தான். எனினும் வருணன் இராமன் முன் தோன்றவில்லை. இராமன் பல பாணங்களைக் கடல் மீது செலுத்தினான். பின்னர்ப் பிரம்மாத்திரத்தைப் பூட்ட வருணன் நடுநடுங்கி இராமனடியில் வீழ்ந்து அபயம் வேண்டினான். இராமனைப்

பலவாறு துதித்தான். அவ்வருணன் கடலில் அணைகட்டுமாறு சொல்லி விடைபெற்றுச் சென்றான்.

இராமன் கடற்கடவுளை வேண்டித் தருப்ப சயனத்தில் கிடந்ததை,

**'கருணையங் கடல் கிடந்தது கருங்கடல் நோக்கி**
**வருண மந்திரம் எண்ணினன் விதிமுறை வணங்கி'[291]**

எனக் கவி குறிப்பிடுகிறார். எனினும் வருணன் இராமன் திருமுன் தோன்றாது வாளாவிருந்தான்.

**'இரக்கம் வந்தெழுந்த காலத்து உலகெலாம் ஈன்றுமீளக்**
**கரக்கு நாயகன்'[292]**

ஆகிய இராமன் சீற்றம் கொண்டான். பூதங்கள் வருணனைக் கடிந்துரைத்தன. வருணன் இராமன் திருமுன் தோன்றி,

**'நவையறு உலகிற்கெல்லாம் நாயக நீயே சீறின்**
**கவயம் நின் சரண மல்லால் பிறிதொன்று கண்டதுண்டோ'[293]**

எனக் கூறினான்.

மேலும் வருணன் இராமனை,

**'ஆழிநீ யனலுநீயே யல்லவை எல்லாம் நீயே**
**ஊழிநீ உலகுநீயே அவற்றுறை உயிரும் நீயே**
**வாழியாய் அடியேனின்னை மறப்பனோ வயங்குசெந்தீச்**
**குழுற உலைந்து போனேன் காத்தருள் சுருதிமூர்த்தி'[294]**

எனத் துதித்துத் தன்னைக் காக்குமாறு வேண்டினான்.

இராமன் முத்தொழில் புரிபவனென்றும், ஓரம்பினால் உலகை அழிக்கும் வல்லமை பெற்றவனென்றும் பாராட்டினான்.

**'காட்டுவாய் உலகங்காட்டிக் காத்தவை கடையிற்செந்தீ**
**ஊட்டுவாய் உண்பாய்நீயே உனக்குமொண்ணாத துண்டோ**
**தீட்டுவாய் பகழியொன்றால் உலகங்களனைவையும் தீய**
**வீட்டுவாய் நினையின் நாயேற்கு இத்தனை வேணுமோதான்'[295]**

**'நீ சூரிய மண்டலத்தில் எழுந்தருளி உலகின் இருளைப் போக்குகிறாய். வேதத்தின் வாழ்ச்சிக்குக் காரணமாக உள்ளாய். நான்முகன் முதலிய சராசரப் பொருள்கள் நாபிக்கமலத்துடன் தங்கியிருக்கின்ற பழைமையான தலைவன் நீ'.**

> **"சண்டவான் கிரண வாளாற் றயங்கிருள் காடுசாய்க்கும்**
> **மண்டலத் துறையுஞ் சோதி வள்ளலே மறையின் வாழ்வே**
> **பண்டை நான்முகனே யாதிசராசரத்துள்ள பள்ளப்**
> **புண்டரீகத்து வைகும் புராதனா போற்றிபோற்றி"[296]**

என்றான் வருணன்.

**'அனைத்துக்கும் முதலாயுள்ள வள்ளலே காப்பாயாக என்ற கசேந்திரனுக்கு அருள் புரிந்தவனே' என்று பாராட்டினான்.[297]**

இராமனே அனைத்துமாகிய தன்மையினை வருணன்,

> **'அன்னைநீ அத்தன்நீயே யல்லவை யெல்லாநீயே**
> **பின்னுநீ முன்னுநீயே யேறுநீ இகழ்வுநீயே**
> **என்னைநீ இகழ்ந்த தென்ற தெங்ஙனே யீசனாய**
> **உன்னைநீ உணராய் நாயேன் எங்ஙனம் உணர்வதுன்னை'[298]**

எனக் கூறினான்.

வருணன் தன் செயலைப் பொறுத்துக் கொள்ளுமாறு இராமனை வேண்டி அவன் திருவடியைச் சரணடைந்தான்.

> **'தீயன சிறியோர் செய்தாற் பொறுப்பதே பெரியோர் செய்கை**
> **ஆயிர நாமத்தையா சரணமென் றடியில் வீழ்ந்தான்'[299]**

வருணன் திருமாலின் பல்வேறு பெருமைகளையும் எடுத்தியம்பி, அத்திருமால் இராமனாகப் பிறந்திருந்தானெனினும் அவன் திருமாலேயன்றிச் சாதாரண மானிடனல்லன் என வலியுறுத்தியமை இங்கு நோக்கத்தக்கது.

**கருடன்** திருமாலின் வாகனம். பெரிய திருவடி என அழைக்கப்பெறும் சிறப்பினைப் பெற்றவன். **என்னை ஆளுடை ஐயன் கலுழன்** எனக் கூறிக் கம்பர் தாம் கருடனிடத்துக் கொண்ட பக்தியைப் புலப்படுத்தியுள்ளார். இந்திரசித்தன் நாகாத்திரத்தால் இலக்குவனைப் பிணிக்க, இராமன் வருந்திப் புலம்பினான். கருடன் அங்கு வர நாகபாசம் விலகியது. கருடன் இராமனைத் துதித்தான்.

**'மறைந்து அவதரித்தவனது பிரிவைப்பற்றி வருந்துகின்ற, தாமரை மலரில் வாழ்கின்ற பிரமன் முதலியோர்க்குக் காரணமான தலைவனே: தன் சொரூபத்தை மறைத்துக்கொண்டு நடிக்கின்றவனே: சரணடைந்தோரின் மனத் துயரை நீக்குபவனே: நீ ஏன் வருந்துகின்றனை? துயரத்தைப் போக்குவாயாக.'[300]**

தேவாதி தேவர்கள் உன் திருநாமத்தைச் சொல்லித் துதிப்பர். மூப்படையாமல் பதினான்கு உலகங்களையும் பாதுகாப்பவனே; உயிர்களுக்கு முத்தி அருளுபவனே;[301]

எல்லா உயிர்களையும் படைத்துக் காத்து அழிப்பவனே; எங்கும் வியாபித்து உயிர்களுக்கு வரங்களைக் கொடுக்கும் வல்லமை உடையவனே; உன் சொரூபத்தை மறைத்துத் தேவர்களிடம் வரத்தைப் பெறுபவனே; துன்பத்தில் அழுபவனே;[302]

மற்ற இரு மூர்த்திகளுடனும் சமமாகப் பொருந்தி இருப்பவனே; மும்மூர்த்திகளுள் முதல் மூர்த்தியே; உலகத்துப் பொருள்களுள் மறைந்து உறைபவனே: அழிக்க எண்ணுவதை அழிப்பவனே; அழியாமலிருப்பவனே உன் செய்கை எத்தகையது என்று விளக்கந் தராது நிற்பவனே;[303]

நீ சீவராசிகளுக்கு வாணாளைக் கொடுப்பவன். அழிவடையாமல் நிற்பவன். பெறுவதற்கு ஆசைப்படுவதைத் தவறாது அளிப்பவன். நுகர்தற்குரிய பொருளாகியும், பெண் வடிவமாகியும், ஆண் வடிவமாகியும், அலி வடிவமாகியும் நிற்பவனே;[304]

வேதங்களே உன் சொரூபம் இத்தகையதெனப் பலபடியாகக் கூறுமாயின், வேறு யாவர்தான் உன் மாயையை அறியவல்லார்?

வேத விரோதிகளாய்க்கடவுளும் மறுபிறப்பும், இருவினைப் பயனும் இல்லையென்று சொல்லும் நாத்திகர்கள் நரகத்தில் விழுவார்கள். ஏவலர் போன்று எளியனாயும் வாழ்கிறாய். அரசாளுதலும் செய்கிறாய்.[305]

எல்லாம் நின் சொரூபமாதலால் சொல்லாகவும், பொருளாகவும், கொலை செய்பவனாகவும், கொலை உண்பவனாகவும் நிற்கின்றாய்;[306]

பிறவாமை அளிப்பவனே; உன் சொரூபத்தை மறந்தவன் போலவும் மறவாதவன் போலவும் உள்ளாய்; உன் மாயையை யானும் வேறு யாரும் அறியேம்; துறந்தவன் போலும் துறவாதவன் போலுமுள்ளாய். பிறந்தவன் போலும் பிறவாதவன் போலுமுள்ளாய்;[307]

ஆன்மாக்கள் பிரகிருதியில் இலயித்துக் கிடக்கும்போது அவரவர்களை அவரவர்கள் உருவங்களுடன் படைக்கிறாய். ஈடேற விரும்புவோர் மனவிருப்பை நிறைவேற்றி வைக்கிறாய். நீ செய்வது வெளிக்குப் புலனாவதில்லை. யாரும் உன்னை அறிய முடியாத நிலையிலுள்ளாய்.[208]

கருடன் இராமனைத் துதித்துக் கொண்டு நெருங்கிவர இலக்குவனைப் பற்றியிருந்த நாகபாசம் விலகியது. இராமன் கருடனுக்கு முகமன் கூறினான். '**பிறவியின் பகைஞ எனக்கு விடை கொடு**'[309] என்று சொல்லிக் கருடன் புறப்பட்டுச் சென்றான்.

> **"சிறகுகளால் வேதம் பாடிவந்த கருடனது வாய்மொழி தமிழிலே உபநிடதம் அவதரித்ததோ என்று ஐயுறும்படி தோத்திரப் பாடல்களாக வெளிப்படுகின்றன.**
>
> **கம்பர் இப்படலத்தில் இராமனது பரத்துவத்தைப் பெரிய திருவடி வாயிலாக நன்கு பேசிப் பரக்க அனுபவித்துள்ளார். இந்தக் கருட உபநிடதம் இராமாயணத்தில் கடையாணி போன்று அவதாரத் தத்துவத்தை நன்கு விளக்குவதாய் உள்ளது".**[310]

என்பார் கூற்று மிகவும் பொருத்தமானது.

**சாப நீக்கம் பெற்றோர்**

இராமனைத் துதித்தோரில், அவனால் சாபநீக்கம் பெற்றோர் விராதன், கவந்தன் ஆகியோர்.

**விராதன்** பண்டு தும்புரு என்னும் கந்தவருனாயிருந்தவன். குபேரனின் பணியாள். அரம்பையின் ஆடலிலும் அழகிலும் ஈடுபட்டுக் குபேரனால் 'அரக்கனாகுக' என்று சபிக்கப்பட்டவன். '**இராமன் தாள் தீண்டப்பெற்று அரக்கனுரு நீங்குக**' எனச் சாபநீக்கமும் பெற்றவன்.

உயிர்களையெல்லாம் நலிந்து தின்னும் கிலிஞ்சன் என்னும் அரக்கனுக்கு மகனாகப் பிறந்தான். தண்டக வனத்தைத் தன் உறைவிடமாகக் கொண்டான். ஒரு இலட்சத்து இருபத்தையாயிரம் யானைகளின் பலத்தை ஒருசேரப் பெற்றவன்.

இராமன் தண்டக வனம் புகுந்தபோது விராதன் சீதையை அவனிடமிருந்து பிரிக்க முற்பட்டான். சீதையைக் கவர்ந்து கொண்டு வான்வழி விரைந்தான். இராமலக்குவர் அவனோடு பொருதனர். விராதன் சீதையை விடுத்து அவரிருரையும் தூக்கிக்கொண்டு விண்வழி விரைந்தான். சீதை அழுது புலம்பினாள். இராமலக்குவர் அவன் தோள்களை வாளால் வெட்டிவீழ்த்தினர். இரத்தம் ஆறாகப் பெருகியது. அவன் சாகாமல் அவ்விருவரையும் பற்ற நெருங்கினான். அவனை நிலத்தில் புதைக்க இலக்குவன் குழி வெட்டினான். விராதன் உடல் அக்குழியில் விழுமாறு இராமன் தன் காலால் அவனை எட்டி தள்ளினான். இராமன் திருவடி

தீண்டப்பெற்ற விராதன் சாபத்தாலுற்ற அரக்கனுரு நீங்கித் தேவனைப் போல் விண்மிசை விளங்கினான். மெய்யறிவு தலைப்பட்ட விராதன், இராமனைத் திருமாலென அறிந்து துதித்தான்.

இராமன் விராதனைக் கொன்றான். அவன் திருவடி பட்டு அவன் சாபம் நீங்கிற்று என வான்மீகி கூறவில்லை.[311] ஆனால் கம்பர், இராமன் திருவடி தீண்டலால் சாபம் நீங்கப்பெற்றான் என்கிறார்.

> **'நின்ன தாளின் நீங்குமென்று**
> **உன்னும் எற்குணர்த்தினான்'**[312]

என்று விராதன் இராமனிடம் கூறினான். விராதன் இராமனைத் துதித்தான்.

உனது அடியிணைகள் வேதங்களால் போற்றப்பெற்றன. உலகெங்கும் விரிந்து பரந்தன. உன் அடிகளே இத்தன்மையவெனின், வடிவங்கள் எத்தன்மையவோ? கடலில் உறையும் நீ மற்றைய பூதங்களில் தங்கினால் அவற்றால் தாங்க இயலுமோ?[313]

விராதன் தன்னை உய்யக்கொண்ட திருவடிகளைப் புகழ்ந்துரைத்தான். இறைவனின் திருவடிப் பெருமையைத் திருவள்ளுவர்,

> **'கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன்**
> **நற்றாள் தொழாஅர் எனின்'**[314]

என்றும்,

> **'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
> **நிலமிசை நீடு வாழ்வார்'**[315]

என்றும் உரைத்தார். நம்மாழ்வாரும்,

> **'துயரறு சுடரடி தொழுதெழல் மனனே'**[316]

என்றார்.

இதனால் பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருத்தல், அளவில் ஆற்றலுடைமை, அனைத்தையும் தாங்கி நிற்றல் முதலிய இறைக் குணங்களை விராதன் இராமன்பால் கண்டு வியந்து துதித்தான் எனலாம்.

மேலும் விராதன், **'முதலை யானையின் கால்களைக் கௌவிக் கொள்ள அதனாலேற்பட்ட துன்பத்தினால் பேரொலி செய்து பெருந்தனி மூலத்து அரும்பரமே என்று வாரணம் அழைப்ப நீ வந்து ஏனென்றாய்'**[317]

'இறத்தலும் பிறத்தலும் துன்பம் தருவன. ஆயின் நீ வினை வயத்தாலன்றி இச்சையால் பிறந்து இறப்பதை விளையாட்டாக விரும்பிச் செய்தாய்'[318]

பல சமயத்தோரும் தந்தந் தெய்வமே நன்றென்று கொண்டு தத்தம் இட்ட தெய்வங்களுக்குச் செய்யும் வழிபாடுகளையெல்லாம் நீயே பெற்றுக் கொண்டு அவரவர்களுக்குத் தக்கபடி பயன்களை அளிக்கிறாயாதலால், அத்தெய்வங்களால் யாது பயன்?[319] இதனை,

'நும்மின் கவிகொண்டு நும் இட்டாதெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர்முடி எந்திருமாலுக்குச் சேருமே'[320]

என்றார் நம்மாழ்வார்.

'பிரமன் முதலான வானவர்க்கும் மன்னுயிர்க்கும் நீயே முதல் தாதை. தாய் வேறு யாருமில்லை. உயிர்க்குத் தாயுந் தந்தையுமானவன் நீயே.'[321]

'என்னைப் பெற்ற தாய் தந்தையாய் அறியாதன அறிவித்த அத்தா; நீயே மேலான கடவுள்; எல்லா உலகங்களும் உனக்குக் கீழ்ப்பட்டன. எல்லாச் சமயங்களும் உன்னையே காரணமாகப் பற்றின. நீ வெளிப்படாது மறைந்து நிற்றல் ஏன்? இவ்விளையாட்டு உனக்கு வேண்டுமோ?'[322]

'தாயை அறியாத கன்றில்லை; தன் கன்றைப் பசு அறியும். நீ எல்லாப் பொருளையும் அறிவாய். எல்லாப் பொருளும் உன்னை அறியா. இம்மாயை எதனால்?'[323]

'அன்னத்தை ஊர்தியாகவுடைய பிரமனைத் தலைவனாகக் கொண்ட அந்தணர்கள் நீயலாற் பிற தெய்வம் இல்லை'[324] என்பர்.

'நீ திருமகள் தங்கும் மார்பினை உடையவன். ஒடுங்காதவன். புறச் சமயக் கடவுளர் இருவினைகளையுமுடைய மக்களைப் போலத் தவத்தை ஒழியாது செய்வர். உனக்குச் செய்யத் தக்கது யாதுமில்லை. அதனால் செய்யத்தக்க செயல் யாதும் இல்லாதவர் போல் உறங்குகிறாய்'.[325]

அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை உறைமார்பா[326] என்பது திருவாய்மொழி.

நீ நிலமகளை அரவாகிச் சுமத்தியால், அயில் எயிற்றில் ஏந்துதியால்: ஒருவாயில் விழுங்குதியால்: ஓரடியால் ஒளித்தியால்: இதை அறிந்தால் திருமகள் உன்னைச் சீறாளோ?[327]

நீ இட்ட பிச்சையால் சிவபெருமான் கையிலேந்திய கபாலம் நிரம்பியது. இதனால் நீயே பரம் என்பதை மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் உணர்ந்து கொண்டனர்.[328] இச்செய்தி ஆழ்வார் பாடலில் இடம் பெற்றுள்ளது அறியற்பாலது.

> 'பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்
> நாயகனவனே கபால மோக்கத்துக் கண்டுகொண்மின்'[329]

என்பது திருவாய்மொழி.

நீ அன்னமாக வேதங்களைச் சொன்னாய். உனக்கு அவைகளை ஓதுவித்தவர்கள் அனைவரும் முடிந்தார்களோ? பொருள்களில் வேறுபட்டும் ஒன்றுபட்டும் நீ இருத்தல் அவற்றைப் பிரிந்தோ? பிரியாமலோ? வேறாயும் ஒன்றாயுமிருத்தல் என்ன பெரிய மாயை? வராக வடிவில் பூமியைக் கோட்டால் குத்தி எடுத்தருளியவன் நீயன்றோ?[330]

முன் உறைந்த நீரினைத் துறந்து அடியேன் செய்த தவத்தால் என் எதிர்வந்தாய். அதனால் இப்பிறவிக் கடல் கடந்தேன். இனிப் பிறவி அடையேன். என் இரு வினைகளையும் பவழம் போன்ற ஒளிமிக்க நின் திருவடிகளால் எளிதே போக்கினாய்[331] எனப் பலவாறு விராதன் இராமனைத் துதித்தான்.

விராதன் இராமனிடம் தன் வரலாறு கூறும்போது அவனைக் 'கள்ளமாய வாழ்வெலாம் விள்ளுஞானம் வீசுதாள் வள்ளல்'[332] என்றும் 'உன்பொலங் கொள்தாள் தீண்டி நான் தேறினேன்'[333] என்றும் கூறினான்

> "இராமன் திருவடி தீண்டுதலால் நல்லறிவு வரப்பெற்ற விராதன் இராமனைத் துதிக்கும் 16 பாடல்களும் வேதம், உபநிடதம் முதலியவற்றின் சாரமான முடிபொருள்களை உணர்த்துவனவாயும், இராமனுடைய பெருமையை விளக்குவனாவாயும் அமைந்துள்ளன."[334]

> "இவ்விராதனது துதிகளை மானிட இயல்புக்கு ஏற்பவே அமைத்து வான்மீகி பாடியிருப்பினும் கம்பர் இராமபிரானைப் பரம்பொருளாகக் கொண்டு தம் விராத ஸ்தோத்திரங்களை வியப்புற அமைத்திருப்பதைக் காணலாம்".[335]

விராதன் தன் துதியில் இராமாவதாரம் வினைவயத்தாலன்றித் தன் இச்சையால் எடுக்கப்பட்டதென்றும், பிற தெய்வங்களுக்குச் செய்யும்

வழிபாடுகள் அனைத்தும் திருமாலையே சென்று அடைகின்றன என்றும், இராமனாக வந்த திருமாலிட்ட பிச்சையால் சிவனது நிரம்பாத கபாலம் நிரம்பியதென்றும், அவனே உயிர்களின் பிறவித் துன்பத்தை ஒழிப்பவனென்றும் இராமனைப் பலபடப் பாராட்டினான்.

**கவந்தன்** தநு என்னும் பெயரினன். தலை வயிற்றுக்குள் அடங்கிக் கவந்தம் போலக் காணப்பட்டமையால் கவந்தன் எனப் பெயர் பெற்றான். முன்னர்க் கந்தர்வனாயிருந்து சாபத்தால் அரக்கனானவன். தன் நீண்ட கைகளால் உயிர்களைப் பற்றி உண்டு வந்தான். இராமலக்குவர் கைபட்டுத் தெய்வ வடிவம் பெற்று வானத்தில் நின்று பல தோத்திர மொழிகளைச் சொன்னான். சுக்கிரீவனிடம் நட்பு கொள்ளுமாறு இராமனிடம் கூறினான்.

கவந்தன் இராமனைத் துதித்தது வான்மீகத்தில் இல்லை.[336] கம்பர் தாமே புனைந்து மொழிந்தது.

கவந்தன் இராமனைத் துதித்தானென்பதைக் கம்பர்,

> **"விண்ணின்றவன் விரிஞ்சனே முதலினர் யார்க்கும்**
> **கண்ணி னின்றவன் இவனெனக் கருத்துற உணர்ந்தான்**
> **எண்ணி லன்னவன் குணங்களை வாய்திறந்திசைத்தான்**
> **புண்ணியம் பயக்கின்றுழி அரியதெப் பொருளே"**[337]

கவந்தன் இராமனை, '**நீ எல்லாப் பொருள்களையும் படைத்தவன். எல்லையிலா அறத்திற்கு எடுத்துக்காட்டு. தேவர் செய்த தவத்தின் பயனாக அவதரித்தாய். நீ மூவராக இருந்து முளைத்தெழுந்த மூலப்பொருள்**' என்றான். இதை,

> **'மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ?'**[338]

என்றான்.

நீ மூலமே இல்லாத முதற்காரணன். உன் கோலம் பிறரால் தெரிந்துகொள்ளற்கரியது. பேரூழியின் இறுதியில் நீ கொண்ட கோலம் ஆலமரமோ? அதன் இலையோ? அந்த இலையிற் கிடந்த பாலனோ? அல்லது கடற்பரப்போ?[339]

நீ காண்பார்க்குக் கண்ணாவாய். காணப்படும் பொருட்குத் தங்கும் இடமாவாய். அறிவுடைய பொருள்களையும், அறிவற்ற பொருள்களையும் பற்றி நிற்பாய். பிரளய காலத்தில் உலகையும் உயிர்களையும் வயிற்றில் ஒளித்துவைத்திருந்து பின்வெளிப்படுத்துகிறாய். நீ ஆண்பாலா? பெண்பாலா? அலிப்பாலா? எம்மால் அறிய இயலவில்லை.[340] இதனை,

'ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்'[341]

என்றார் நம்மாழ்வார்.

நீயே ஆதிப்பிரமன். அப்பிரமனுக்கு ஆதியாயுள்ள பரம்பொருளும் நீயே. ஆதிக்கப்பால் ஒரு பொருளிருப்பின் அதுவும் நீயே. நீ சோதிச்சுடர்ப் பிழம்பாயுள்ளாய். அதைக் கேட்ட கடவுளர் நாணாரோ?[342]

இவ்வண்டப் பெருங்கோயில் முழுவதும் உன் உந்திக் கமலம் மலராது அரும்பாக விருந்த ஆதிக்காலத்தில் அம்மொட்டினுள்ளிருக்கும் சிறிய விதையில் அடங்கியிருந்தது.[343]

'நீ வேள்வி வடிவாக உள்ளாய். அந்தணர் வேள்வியில் அவியை உணவாகக் கொள்வாய். வேள்வித் தலைவனாக நின்று ஊட்டுவாய். முரண்பட்ட இரண்டு பண்புகள் உன்னிடம் ஒத்திருப்பதை அறிவார் யார்'[344]

'வெள்ள நீரில் தோன்றும் மொக்குகள் அதிலே மீண்டும் மறைதல் போலத் தோற்றமளிக்கும் அண்டங்கள் உன்னுள்ளே தோன்றிப் பின் உன்னுள்ளே மறைகின்றன'.[345]

'உன் செயல்களையே ஒழுக்கமாக மறைகள் உலகுக்குணர்த்து-கின்றனவா? மறைகளிலுள்ளபடியே உன் செயல்கள் நிகழ்கின்றனவா? நான் உனக்கு ஓர் உபகாரமும் செய்யவில்லை. எனக்கு நீயோ நற்கதி அளித்தாய்.'[346]

'என் மாயப் பிறவி மயல் நீக்கினாய். மாசில்லா உடம்பை நல்கினாய். துயரத்தினின்று கரையேற்றினாய். பேயொத்த பேதையாகிய என் பிணக்கை அறுத்த பெருமானே; நாயொத்த நான் என்ன நலன் செய்தேன்.'[347]

இவ்வாறாகக் கவந்தன் இராமனைத் துதித்தான். இக்கவந்தன் துதியில் அவதாரத் தத்துவ விளக்கங்களும், இறைவனின் பல்வேறு உயரிய குணங்களும் இறைவன் உயிர்கள்மாட்டுக் கொண்டுள்ள பெருங்கருணைத் திறமும் நன்கு விளக்கப்பட்டுள்ளன எனலாம். இராமன் கையினால் தீண்டப்பெற்ற கதந்தன் ஒளி உருவம் பெற்றதோடு ஞானமும் கைவரப் பெற்றானென்பது ஈண்டுக் கருதத்தக்கது.

## தேவர்களும் கடவுளரும்

வானுறை தேவர்களும், முத்தேவரில் இருவரான பிரமனும், சிவனும் இராமாயணக் காப்பியத்தில் இடையில் தோன்றி இராமனது பரத்துவத்தை மற்றையோர்க்கு உணர்த்தினர்.

**தேவர்கள்** அரக்கர்களின் கொடுமைக்கு ஆளாகித் திருமாலை வேண்டத் திருமாலே இராமனாக அவதரித்தான். தசரதன் புத்திரரில்லாக் குறையைப் போக்க, கலைக்கோட்டு முனிவனைக் கொண்டு மகவருள் வேள்வி தொடங்கிய காலை, தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தனர்.

வனத்திலுறைந்த இராமனைப் பரதன் முடிபுனைந்துகொள்ள அயோத்திக்கு அழைத்தான். வசிட்டனும் இதை வற்புறுத்தினான்.அப்போது தேவர்கள், '**பரதன் நாடாளட்டும், இராமன் பதினான்கு ஆண்டுகள் கானகத்தில் தங்கட்டும்**'.[348] என அசரீரியாக மொழிந்தனர். தேவர்கள் வாக்கினை ஏற்று இராமன் காட்டில் உறைவதென்று முடிவு செய்தான்.

இராமலக்குவர்கள் அரக்கருடன் போரிடும்போது அரக்கர்கள் தோற்றால் தேவர்கள் மலர்மாரி பொழிந்து ஆரவாரம் செய்தனர். அரக்கர் வெல்லும்போது அவர்கள் துணுக்குற்று வருந்தினர்.

பிரம்மாத்திரத்தால் கட்டுப்பட்டு அனுமன் முதலானோர் கிடக்க இராமன் அறிவு சோர்ந்து துயின்றான். அப்போது தேவர்கள் அவண் தோன்றி உண்மையுணர்த்தி இராமனைத் துதித்தனர்.

**'இன்ப துன்பங்களில்லாதவனே; உன்னை உள்ளபடி அறியும் வல்லமை எமக்கில்லை.உலகின் கூறுபாட்டையும் அறியோம். இனி நடக்கவிருப்பதையும் அறியும் வல்மையில்லோம். உன் வழியில் நிற்பதன்றி நாங்கள் செய்யத்தக்கது யாது?'**[349]

**அரக்கர் குலத்தை அழிக்க மன்னர் குலத்தில் தோன்றியுள்ளாய். தரும தேவதைக்கு நேர்ந்துள்ள பாரத்தைப் போக்கும் பொருட்டு மறைந்து நின்றே மாயத்தைக் காட்டக் கடவையோ? எங்கள் முன்னிலையில் மனிதனைப் போல நீ பொய்யாக நடிக்கின்றாயோ?**[350]

**சிலந்திப் பூச்சி தன் உருவத்திற்கு விகாரம் சிறிதும் இல்லாமலே நூலை உண்டாக்கி மீண்டும் தான் உண்டாக்கிய நூலை உட்கொள்வதைப்போல நீ உன் சுயரூபத்திற்கு விகாரமில்லாமலே அண்டங்களைப் படைத்து மீண்டுமவற்றை விழுங்குகின்றாய்.**[351]

**அறியப்பட்டாய் போல அறிவுக்கு இலக்காகாதவனே; அரக்கரை அழிக்க நீ வந்துள்ளமையால் அச்சம் நீங்கியுள்ளோம். ஆயின் நீ படும் துன்பத்தால் மெலிந்துள்ளோம். கருப்பத்தில் தோன்றி எம்மைக் காக்கும் புகலிடமாக உள்ளாய். உனக்கேற்பட்ட துன்பத்தை நீயே களைய இயலவில்லையெனில் உன் மாயை எம்மால் தீர்க்கத் தக்கதோ?**[352]

**நீ அம்பரீடற்கு அருள் புரிந்தாய். அயனார் மகனுக்குக் கருணை காட்டினாய். உனக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தைப் போக்கி எம்மைக் காப்பாயாக.**[353]

இராமன் தேவர்கள் துயர் துடைக்க அவதரித்தானென்றும், அவன் தன்னை வெளிக்காட்டுவதில்லை என்றும், அவனே அண்டங்களைப் படைப்பவனென்றும், உயிர்களைக் காப்பவனென்றும் தேவர்கள் கூறினர்.

**கடவுளர்**

பிரமன் படைப்புக் கடவுள். திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றியவன். நான்கு முகங்களை உடைமையின் நான்முகன் என்ற பெயரினன்.

இராவண வதத்திற்குப் பின் சீதையைத் தேவமாதர் அலங்கரித்து விமானத்தில் அழைத்து வந்தனர். சீதையைக் கண்ட இராமன் அவள் கற்பினைச் சோதிக்க எண்ணி அவளைத் '**தீயில் இறங்குக**' என்றான். இலக்குவன் தீயினை மூட்டச் சீதை அங்கியங் கடவுளை நோக்கி, '**நான் கற்புக் குறையுடையேனாயின் என்னைச் சுடுக**'[354] எனச் சொல்லித் தீயிடைப் புகுந்தாள். எனினும் சிறிதும் வாட்டமின்றித் தீயினின்று வெளிப்பட்டாள். இராமன் அவளை அங்கீகரித்தான். தேவர் இராமனது சொரூபமுணர்த்துமாறு பிரமனை வேண்டினர். பிரமன் இராமனது உண்மை இயல்பினை உணர்த்தினான்.

பிரமன் இராமனை நோக்கி, **உன்னை மனிதனென்று எண்ணாதே. வேதத்தின் முடிவிலுள்ள உண்மைத் தத்துவம் உன்னையல்லாது வேறில்லை. நிலைத்து நிற்கும் பொருள் உன்னையன்றி வேறில்லை.**[355]

**எப்பொருளினும் பழமையானதான மூலப் பிரகிருதி என்ற தத்துவமும், அந்த மூலப்பிரகருதி விகாரத்தாலுண்டான காரியங்களாகிய தத்துவங்களும், அத்தத்துவப் பொருளுக்கு மேலாய் நின்ற சீவாத்மாவாகிய தத்துவமும் நீ; மிகப் பரந்ததாகக் காணப்படுகின்ற இப்பிரபஞ்சத் தோற்றமெல்லாம் உனது பெரிய மாயையாலுண்டாகிய சங்கற்பத்தால் உண்டாகிய பரப்பாம்.**[356]

**வேதங்களின் முடிவாகிய உபநிடதங்கள் மிக மேலான பரம்பொருளென்று உன்னையே சொல்கின்றன. மற்றத் தேவர்களைச் சொல்லமாட்டா.**[357]

'பிரமனாகிய எனக்கும், எட்டுவகை வடிவினையுடைய கடவுளான சிவனுக்கும், இந்திரனுக்கும், முனிவர்களுக்கும் உயிரோடு கூடிய எல்லாப் பொருள்களுக்கும் நீயே பரம் என்ற உண்மைப் பொருளை அறிந்தார் தளைகளினின்று விடுபட்டு முக்தியடைவர்.' இதனை,

> 'எனக்கும் எண்வகை ஒருவர்க்கும் இமையவர்க்கிறைவன்
> தனக்கும் பல்பெரு முனிவர்க்கும் உயிருடன் தழீஇய
> அனைத்தினுக்கும் நீயே பரமென்பதை யறிந்தார்
> வினைத்துவக்குமை வீட்டருந் தளைநின்று மீள்வர்'[358]

என்னும் பிரம்மன் வாக்கு வலியுறுத்தும்.

'அறியாமை நீங்கியொழிந்த சீவராசிகள் உன்னையே மூலகாரணமென்ற உணர்வுடையனவாய் வீட்டுலகத்துக்கு விதையாம்.'[359]

'இருபத்தைந்தான தத்துவங்களை ஆராய்ந்து அறியுமிடத்து அவற்றிற்கு மேலே யாதுமில்லை என்று வேதம் கூறும். உலகத்து உயர்ந்தோரும் சாட்சியாவர். சாட்சிக்குச் சாட்சி வேண்டுமோ?.'

> 'ஐயஞ் சாகிய தத்துவம் தெரிந்தறிந் தவற்றின்
> மொய்யெஞ்சாவகை மேனிற் நினக்கு மேல்யாதும்
> பொய் யெஞ்சாவில என்னு மீதருமறை புகலும்
> வையஞ் சான்றினி சான்றுக்குச் சான்றில்லை வழக்கால்'[360]

என்பது பிரம்மன் கூற்று.

'திருத்துழாயைத் தரித்த திருமுடி உடையவனே; பிரமாணங்களால் ஆராய்ந்து 'ஆம் இல்லை' என்று அறிகின்ற தன்மை உனக்கு இல்லை. உபநிடதம் ஞானக் கண்ணால் ஆராய்ந்து 'நீ உள்ளாய்' என்று சொல்லும்.'[361]

'உனக்குத் தோற்றமில்லை. மூலப் பிரகிருதி உன்னிலிருந்து வெளிப்பட்டது. மற்றை எல்லாத் தத்துவங்களும் பஞ்சபூதங்களும் சங்கார காலத்தில் பிரிபட்டு இலயித்து அழிவடையும். நீயோ எப்பொழுதும் அழியாய்.'[362]

'மின்னலைப் போலத் தோன்றியழியும் தன்மையுடைய இவ்வுலகைத் தோற்றுவிக்குமாறும் அறத்தை நிலைநிறுத்துமாறும் என்னைப் படைக்கின்றாய். எனக்கு அழிவையும் செய்கிறாய். உன்னை முற்றும் ஒளிக்கின்றாயில்லை.'[363]

'நீ என்னுருக் கொண்டு இவ்வுலகை ஈனுகிறாய். உன்னுருக் கொண்டு காக்கிறாய். உமையோன் தன்னுருக் கொண்டு அழிக்கின்றாய். இது ஒப்பற்றவனான சூரியனின் தோற்றமும், நிலைப்பாடும், மறைதலும் போன்றது.'[364]

'அரக்கர் எங்களை நலிய, நாங்கள் உன்னைச் சரணடைந்தோம். எங்களைக் காக்கும் பொருட்டுப் பல்வேறு பிறவிகளை எடுத்தாய்.'[365]

'ஓங்காரப் பொருளைத் தேடுவார் உன்னை உள்ளபடி அறிந்தோராவர். நீ ஓங்காரப் பொருளென்றுணர்ந்தவர்கள் இரு வினைகளையும் ஒழித்தோராவர். பிரணவப் பொருளே பரம்பொருளாமென்ற உண்மையை உணரமாட்டாதவர்கள் பிரணவப் பொருளாகிய உன்னை உண்மைப் பொருளென்றும் அன்றென்றும் சந்தேகங்கொண்டு நெடுங்காலம் கழித்தோர் இருவினையும் நீக்கமாட்டாதவர்கள்.'

'ஓங்காரப் பொருள் தேருவார் தாமுன்னே உணர்வோர்
ஓங்காரப் பொருள் உணர்ந்து இருவினை உகுப்போர்
ஓங்காரப் பொருள் ஆம் அன்றென்று ஊழி சென்றாலும்
ஓங்காரப் பொருளே பொருளென்கலா உரவோர்'[366]

பிரமன் இராமனது சொரூபம் உணர்த்தும்போது திருமாலின் அவதாரமாகிய இராமனே பரம்பொருளென்றான். அவனே அனைத்துக்கும் மூலகாரணமென்றும், அவனிடமிருந்தே அனைத்தும் தோன்றுகின்றன வென்றும், அவனே திருமாலாகவும், சிவனாகவும், பிரமனாகவுமிருந்து அவரவர் தொழிலைச் செய்கிறானென்றும் குறிப்பிட்டான். இராமனே ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் பொருளானவன் என்றான்.

## சிவன்

சிவன் இருமுறை நேரில் தோன்றி இராமன் சீதை ஆகியோர் தன்மை உணர்த்தினான்.

இலக்குவனுக்கும் இந்திரசித்துக்கும் இடையே நடைபெற்ற போரைக் கண்ட தேவர்கள் இராமலக்குவர் திறமையை வியந்து பாராட்டினர். அப்போது சிவபெருமான், திருமாலே உலகத்தார்க்கு ஆசிரியனும் சீடனும் இருக்க வேண்டிய முறைமையைக் காட்டுவதற்காக, பதரிகாசிரமத்திலே நரநாராயணனாகத் திருவவதரித்து நரனான சீடனுக்கு நாராயணனென்ற தான் திருமந்திரத்தை உபதேசித்தான் என்று நூல்கள் கூறிய தொப்ப அந்த இருவராய் அவதரித்தவர்களே இராமலக்குவர் என்றான்.

'நாராயண நரரென்றிவர் உளராய் நமக்கெல்லாம்
வேராய் முழுமுதற் காரணப் பொருளாய் வினைகடந்தோர்
ஆராயினுந் தெரியாததொர் நெடுமாயையினிகந்தார்
பாராயண மறைநான்கையும் கடந்தாரிவர் பழையோர்'.[367]

என்பது சிவன் கூற்றாகும்.

அறிவுக்கு அப்பாற்பட்டவர்களும், அறத்தைப் பாதுகாப்பவர்களுமான அவர்கள் (இராம லக்குவர்) கொடுமையுடைய அரக்கர் குலத்தை வேரோடறுக்கப் பூமியில் வந்துள்ளார்கள்.[368]

இலக்குவன் உயிர்தோறும் பொருந்தியுள்ளவனாய்த் தோத்திரம் செய்தற்கு உரியவன். இராமனும் தயிராகத் தோய்தற்குக் காரணமான பிரை மோரென்று சொல்லும்படி எங்கும் பரந்த தலைவன். தவறுதலில்லாத ஒப்பற்ற பொருள் இதுவாகும். இதுவே பரமார்த்தமாகும்.[369]

முன்பு நாம் குறைநேர அழியத்தக்க பாக்கியத்தை உடையவரான அரக்கர்களைக் குலத்தோடு அழித்து அறத்தைக் காப்பதற்கு இசைந்தாரும் நெடிய பாற்கடலில் கிடந்தவரும் இவரே.[370]

சீதை தீயிலிருந்து எவ்விதப் பாதிப்புமின்றி வெளிப்பட, சிவன் இராமனுக்கு அவன் தன்மையை உணர்த்தினான். சிவன் இராமனை நோக்கி, 'வலிமையுள்ளவனே! நீ உன் தன்மையைச் சிறிதும் அறியவில்லைபோலும். நீ மிகவும் அநாதியாயுள்ள முழுமுதற் கடவுளாவாய். மூன்று வகையான உலகினுக்குத் தாயான சீதை இலக்குமியாவாள்'. என்றான்.

'முன்னை யாதியா மூர்த்திநீ மூவகை உலகின்
அன்னை சீதையாம் மாதுநின் மார்பில் வந்தமைந்தாள்'[371]

என்பது சிவன் கூற்று. மேலும் அவன் 'பழமையான எல்லா உலகங்களும் தோன்றுதற்கிடமான அழகிய வயிற்றை உடையவள் தாயாகிய சீதை. தாயாகிய இவளுக்குத் தீங்கு நேரிட்டால் எல்லா உலகங்களும் இறந்து ஒழியும்'[372] என்றான்.

இவ்வாறாகச் சிவன் காப்பியப் போக்கின் இடையில் தோன்றி நாராயணனும் நரனும் இராமலக்குவர் என்றும், அறத்தை நிலைநாட்டவும் தீயவர்களை அழிக்கவும் அவர்கள் இப்பூவுலகில் அவதரித்தார்களென்றும், இராமன் முழுமுதற் கடவுளென்றும், அவன் திருமார்பிலமர்ந்த திருமகளே சீதையென்றும், அவளே மூவுலகிற்கும் அன்னை என்றும் குறிப்பிட்டான்.

இந்திரசித்தின் வதத்திற்குப் பின்னும், இராவண வதத்திற்குப் பின்னும் இருமுறை சிவன் தோன்றி இராமனது பரமார்த்தத்தை உணர்த்தியதாகக் கம்பர் குறிப்பிட்டார். ஆனால் இராவணனது வீழ்ச்சிக்குப் பிறகு சிவன் ஒருமுறை நேரில் தோன்றி இராமனிடம் பேசினான் என வான்மீகத்தில் காணப்படுகிறது. அவன் இராமனை நோக்கி, '**புண்டரீகா க்ஷ; சங்கு சக்கராயுதங்களால் விளங்குபவனே; ஸ்ரீவத்சமென்ற மருவால் பிரகாசிக்கும் திருமார்பா; சங்கல்பத்தாலே சகல சத்துருக்களையும் நாசம் செய்யும் பிரபோ; க்ஷத்திரிய தர்மத்தைக் குறைவற அனுஷ்டிக்கும் இக்ஷ்வாகு குலத்திலகனான நீ இப்படிச் செய்வது மிகவும் யுக்தம். ஸகல லோகங்களிலும் அதர்மம் என்ற இருள் வரவர விருத்தியடைந்தது .... நித்தியமான கீர்த்தியடைந்து பின் உன் அடிச் சோதிக்கு எழுந்தருள்வாய். விசேஷ காந்தியுடன் ஜ்வலிக்கும் உன் பிதாவை நீயும் லக்ஷ்மணனும் நமஸ்காரம் செய்யுங்கள்**'[373] என்றான்.

இதில் இராமனைப் பரம்பொருளென்றோ எங்கும் நிறைந்துள்ளவன் என்றோ சிவன் கூறியதாக வான்மீகத்தில் இல்லை. ஆயின் கம்பரோ இராமலக்குவரைத் தேவர்களாகிய நமக்கெல்லாம் வேராய், முழுமுதற் காரணப் பொருளாய், யாராலும் அறியப்படாதவராய், மறைகளைக் கடந்தவராய் இருந்தாரென அவர்களின் பரத்துவம் வெளிப்படுமாறு உரைக்கிறார் என்பது நோக்கத்தக்கது.

## தொகுப்புரை

இராமன் திருமாலின் அவதாரமென்பதை, சங்கப் பாடல்கள் மற்றும் காப்பியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. ஆழ்வார்கள் இராமாவதாரத்தில் ஈடுபாடு கொண்டிருந்தனர். இராமன் மானிடனாகப் பிறந்ததற்கொப்ப, மானிடப் பண்புகள் நிறைந்து காணப்படுகிறான். இராமாவதாரத்தின் சிறப்பினைக் கம்பர் கவிக் கூற்று மற்றும் பாத்திரக் கூற்றுக்களால் நிறுவுகிறார். மானிடப் பாத்திரங்களேயன்றி, காப்பியப் பாத்திரங்களாகிய வானரரும், அரக்கரும், முனிவரும், தேவரும் அவதாரப் பெருமையினை உணர்ந்து போற்றுகின்றனர். இராமனால் சாபநீக்கம் பெற்றோர் மற்றும் வீடுபேறடைந்தோர் வாயிலாகவும், திருமாலே மானிடனாக வந்து அருள் புரிந்தான் என உணர முடிகிறது. முத்தேவரில் பிரமனும், சிவனும், இராமனைத் திருமாலெனவும், பரம்பொருளெனவும் பிறர்க்கு விளங்க உரைக்கின்றனர். இதனால், இராமாவதாரச் சிறப்பினை வலியுறுத்தவதே கம்பரின் காப்பிய நோக்கம் என்பதை உணரலாம்.

## சான்றெண் விளக்கம்

1. *இராகவையங்கார், மு.,* **தெய்வப் புலவர் கம்பர்,** *ப.9.*
2. **தொல்காப்பியம்,** *நச். உரை, சூ.76இன் மேற்கோள்.*
3. *திருமேனி, கு.,* **கம்பராமாயணத் தோற்றம்,** *ப.9.*
4. **பெரும்பாணாற்றுப்படை,** *அடிகள் 29-30.*
5. **அகநானூறு,** *70, அடி 15-17.*
6. **சிலப்பதிகாரம்,** *ஊர்காண் அடி 46-49.*
7. *மேலது, ஆய்ச்சியர், படர்க்கைப் பரவல் 1.*
8. **மணிமேகலை,** *உலக அறவி, அடி 9-13.*
9. **அப்பர் தேவாரம்,** *திரு இராமேச்சுரப் பதிகம்.10.*
10. **முதல் திருவந்தாதி,** *45.*
11. **மூன்றாந் திருவந்தாதி,** *77.*
12. **நான்முகன் திருவந்தாதி,** *28.*
13. **திருவாய்மொழி,** *7.5.1.*
14. *மேலது, 7.5.2.*
15. *இராமராசன் எஸ்.கே.,* **ஆழ்வார்களும் கம்பனும்,** *ப.19.*
16. **பெருமாள் திருமொழி,** *8.10.*
17. *இந்திரா பார்த்தசாரதி,* **தமிழ் இலக்கியங்களில் வைணவம்,** *பக். 149-150.*
18. **பெரியாழ்வார் திருமொழி,** *3.10.2.*
19. *இராமராசன் எஸ்.கே.,* **ஆழ்வார்களும் கம்பனும்,** *ப.20.*
20. **திருப்பாவை,** *24.*
21. **திருமாலை,** *7.*
22. *மேலது. 27.*
23. **திருநெடுந்தாண்டகம்,** *20.*
24. **கம்பராமாயணம்,** *த.சி.பா.11.*
25. *இராகவையங்கார் மு.,* **தெய்வப் புலவர் கம்பர்,** *ப.9.*
26. *பாண்டுரங்கன், அ.,* **காப்பிய நோக்கில் கம்பராமாயணம்,** *ப.102.*
27. **திருவாய்மொழி,** *2.9.5.*
28. Rajagopalachari, C., **Ramayana,** p.15.
29. In Kamban's time therefore the ideal name, has grown into very God the mere repetition of whose name with devotion would lead unto heaven ....... In three or four places Valmiki has deified Rama. Even these passages however modern critics regard as interpolations. But however this may be, everywhere else in Valmiki Rama is only the valarous prince, perfect in virtue, but nothing more than a simple mortal man. In kamban however it is rare to meet with any reference to

Rama which does not indicate his divinity. He is the supreme Lord, he is Narayana, he is the one that sleeps the sleep of wakefulness in the ocean of Milk, he is the great one whom even the vedas have not seen. If he runs after a golden deer, he sets forward the foot that measured the three worlds. If Rama and Sita love each other at first sight, is it not the meeting of those that were together in the ocean of milk and were seperated only for a while? It is the same from the beginning to the end. But this constant deification of Rama does not stand in the way of the human emotions being attributed to him .... There is the same mingled divinity and humanity about Kamban's Rama as about the christ of the Gospels and of the paradise Regained.

- ***Iyer, V.V.S., Kamba Ramayana - A Study,*** pp. 44-45.

30. II *: 4 : 169.*
31. VI *: 15 : 150.*
32. III *: 3 : 19.*
33. I *: 11 : 20..*
34. I *: 5 : 130.*
35. I *: 5 : 134.*
36. I *: 10 : 33.*
37. *பாண்டுரங்கன், அ.,* **காப்பிய நோக்கில் கம்பராமாயணம்,** *ப.168.*
38. I *: 12 : 32.*
39. II *: 6 : 1.*
40. II *: 3 : 104.*
41. II *: 3 : 105.*
42. II *: 3 : 106.*
43. II *: 1 : 72.*
44. I *: 7 : 66.*
45. I *: 5 : 134.*
46. II *: 1 : 42.*
47. II *: 1 : 84.*
48. **திருக்குறள்,** *ஒப்புரவறிதல்.5.*
49. மேலது *- 6.*
50. **திருக்குறள்,** *அவா அறுத்தல்,3.*
51. II *: 1 : 72.*
52. II *: 3 : 108.*
53. V *: 3 : 20.*
54. II *: 12 : 54.*

55. II :8 : 53.
56. திருக்குறள், சான்றாண்மை - 7.
57. II : 4 : 50.
58. VI : 37 : 129.
59. I : 10 : 65.
60. II :6 : 1.
61. பெரியாழ்வார் திருமொழி, 4.8.9.
62. II : 6 : 12.
63. II : 6 : 56.
64. III : 8 : 149.
65. V : 3 : 8.
66. V : 3 : 63.
67. VI : 9 : 28.
68. VI : 9 : 29.
69. திருநெடுந்தாண்டகம், 18.
70. I : 10 : 154.
71. I : 21 : 47.
72. I : 21 : 68.
73. I : 21 : 99.
74. III : 5 : 11.
75. III : 9 : 28.
76. பெரியாழ்வார் திருமொழி, 2.6.6.
77. பெரிய திருமொழி, 7.4.7.
78. I : 3 : 5.
79. I : 3 : 6.
80. திருவாய்மொழி, 7.5.1.
81. I : 10 : 1.
82. I : 10 : 4.
83. I : 10 : 38.
84. II : 1 : 57.
85. II : 2 : 88.
86. II : 4 : 225.
87. III : 5 : 59.
88. II : 6 : 16.
89. II : 6 : 17.
90. II : 6 : 25.

91. II : 5 : 63.
92. III : 7 : 235.
93. V : 5 : 71.
94. பெரியாழ்வார் திருமொழி, 2.5.8.
95. பெரிய திருமொழி, 3.4.9.
96. பரிபாடல், 15 அடி 15 - 16.
97. II : 5 : 61.
98. II : 12 : 77.
99. III : 6 : 125.
100. VI : 6 : 54.
101. II : 1 : 96.
102. IV : 3 : 72.
103. VI : 6 : 62.
104. VI : 6 : 63.
105. VI : 14 : 223.
106. பெரிய திருமொழி, 3.1.3.
107. திருச்சந்த விருத்தம், 31.
108. I : 5 : 67.
109. I : 6 : 19.
110. I : 7 : 45.
111. I : 5 : 119.
112. I : 7 : 69.
113. II : 6 : 27.
114. II : 4 : 143.
115. பெரிய திருமொழி, 3.4.9.
116. II : 7 : 20.
117. II :11 : 68.
118. II : 12 : 81.
119. II : 8 : 50.
120. VI : 13 : 2.
121. II : 12 : 55.
122. III : 5 : 35.
123. VI : 14 : 214.
124. VI : 37 : 316.
125. IV : 1 : 33.
126. VI : 14 : 221.

127. V : 5 : 90.
128. I : 9 : 71.
129. I : 8 : 37.
130. III : 1 : 46.
131. II : 12 : 136.
132. VI : 4 : 145.
133. VI : 4 : 140.
134. III : 8 : 215.
135. சங்கராச்சாரியார், ஆக்ஞை **ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்,** பாகம் - 1.
136. சுப்பிரமணிய முதலியார், வெ.ப., **கம்பராமாயண சாரம்,** தொகுதி- 1, ப.56.
137. **கம்பராமாயணம்,** காப்பு - 13.
138. IV : 7 : 71.
139. சீனிவாசய்யங்கார், **வால்மீகி ராமாயணம்,** ஸர்க்கம். 16. ப.53.
140. IV : 16 : 48.
141. IV : 16 : 49.
142. ஞானசுந்தரம், தெ., **காப்பிய விருந்து,** ப.82.
143. V : 1 : 88.
144. I : 4 : 1.
145. I : 6 : 16.
146. I : 22 : 44.
147. II : 1 : 96.
148. II : 2 : 47.
149. II : 4 : 152.
150. II : 11 : 35.
151. II : 9 : 58.
152 II : 9 : 91.
153. II : 11 : 65.
154. II : 10 : 4.
155. II : 10 : 14.
156. II : 12 : 136.
157. III : 8 : 7.
158. III : 8 : 10.
159. VI : 26 : 147.
160. II : 4 : 116.
161. II : 9 : 38.
162. I : 12 : 17.

163. I : 20 : 16.
164. I : 10 : 23.
165. I : 10 : 32.
166. I : 20 : 34.
167. I : 20 : 36.
168. II : 1 : 42.
169. I : 10 : 53.
170. V : 5 : 71.
171. V : 5 : 6.
172. II : 6 : 68.
173. II : 2 : 46.
174. II : 6 : 39.
175. II : 6 : 41.
176. II : 6 : 42.
177. II : 6 : 45.
178. II : 6 : 68.
179. II : 11 : 14.
180. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** அயோத்தியாகாண்டம் - 2, அ.ப. வெளியீடு
181. II : 3 : 90.
182. II : 3 : 91.
183. II : 4 : 65.
184. I : 12 : 42.
185. I : 19 : 26.
186. I : 5 : 27.
187. IV : 2 : 21.
188. IV : 2 : 19.
189. IV : 2 : 20.
190. IV : 2 : 36.
191. IV : 2 : 15.
192. IV : 2 : 7.
193. IV : 2 : 17.
194. IV : 2 : 27.
195. IV : 3 : 79.
196. IV : 3 : 90.
197. IV : 3 : 81.
198. V : 3 : 67.

199. V : 5 : 22.
200. V : 13 : 74.
201. V : 13 : 78.
202. V : 13 : 79.
203. V : 13 : 81.
204. **Bagavad gita,** Chapter IV, 8th sloga.
205. IV : 4 : 103.
206. IV : 3 : 17.
207. IV : 3 : 18.
208. IV : 3 : 19.
209. IV : 4 : 17.
210. **திருஞான சம்பந்தர் தேவாரம்,** *திருவடகுரங்காடுதுறைப் பதிகம்.8.*
211. IV : 7 : 118.
212. IV : 7 : 119.
213. IV : 8 : 9.
214. IV : 7 : 120.
215. IV : 7 : 120.
216. IV : 7 : 121.
217. IV : 7 : 122.
218. IV : 7 : 124.
219. IV : 7 : 125
220. IV : 7 : 126.
221. IV : 7 : 132.
222. IV : 7 : 136.
223. IV : 7 : 146.
224. IV : 7 : 147.
225. IV : 7 : 148.
226. IV : 7 : 149.
227. VI : 13 : 21.
228. VI : 23 : 82.
229. V : 2 : 136.
230. VI : 2 : 85.
231. VI : 2 : 73.
232. VI : 2 : 81.
233. VI : 2 : 97.
234. VI : 2 : 111.

235. VI : 4 : 19.
236. VI : 4 : 20.
237. VI : 4 : 21.
238. VI : 4 : 128.
239. கோபாலகிருஷ்ணமாசசாரியார், வை.மு., **கம்பராமாயணம்,** யுத்த காண்டம், பாகம் 1, ப.250.
240. VI : 4 : 138.
241. VI : 4 : 139.
242. VI : 4 : 140.
243. VI : 15 : 150.
244. VI : 26 : 175.
245. VI : 15 : 279.
246. VI : 15 : 133.
247. VI : 15 : 357.
248. VI : 33 : 15.
249. VI : 15 : 27.
250. VI : 36 : 135.
251. VI : 36 : 245.
252. இராகவையங்கார், மு., **தெய்வப் புலவர் கம்பர்,** ப.21.
253. I : 5 : 1.
254. I : 5 : 76.
255. I : 20 : 32.
256. II : 1 : 39.
257. II : 1 : 40.
258. I : 8 : 57.
259. I : 9 : 82.
260. III : 3 : 36.
260. III : 3 : 47.
262. III : 3 : 46.
263. III : 3 : 41.
264. III : 3 : 43.
265. III : 3 : 42.
266. III : 3 : 44.
267. III : 3 : 45.
268. III : 3 : 49.
269. III : 3 : 53.

270. I : 22 : 37.
271. I : 22 : 38.
272. I : 22 : 40.
273. III : 2 : 20.
274. III : 2 : 42.
275. III : 2 : 34.
276. III : 2 : 40.
277. III : 2 : 44.
278. III : 8 : 100.
279. III : 8 : 142.
280. III : 8 : 215.
281. III : 11 : 4.
282. III : 11 : 5.
283. III : 2 : 24.
284. III : 2 : 26.
285. III : 2 : 27.
286. III : 2 : 28.
287. III : 2 : 29.
288. III : 2 : 30.
289. III : 2 : 31.
290. சீனிவாசய்யங்கார், ஸ்ரீ.உ.வே. **வால்மீகி ராமாயணம்,** ஆரண்ய காண்டம், ஸர்க்கம் -5, ப.15.
291. VI : 6 : 5.
292. VI : 6 : 62.
293. VI : 6 : 67.
294. VI : 6 : 68.
295. VI : 6 : 69.
296. VI : 6 : 70.
297. VI : 6 : 71.
298. VI : 6 : 72.
299. VI : 6 : 73.
300. VI : 18 : 250.
301. VI : 18 : 251.
302. VI : 18 : 252.
303. VI : 18 : 253.
304. VI : 18 : 254.

305. VI : 18 : 256.
306. VI : 18 : 257.
307. VI : 18 : 258.
308. VI : 18 : 259.
309. VI : 18 : 270.
310. இராதாகிருஷ்ணபிள்ளை, எம்., **அவதாரமும் கம்பரும்,** ப. 19.
311. ஸ்ரீனிவாசய்யங்கார் **வால்மீகி ராமாயணம்,** பாகம்-1, ஆரண்ய காண்டம், ஸர்க்கம் -5, ப.13.
312. III : 1 : 68.
313. III : 1 : 48.
314. **திருக்குறள்,** கடவுள் வாழ்த்து, 2.
315. மேலது.
316. **திருவாய்மொழி,** 1.1.1.
317. III : 1 : 49.
318. III : 1 : 51.
319. III : 1 : 52.
320. **திருவாய்மொழி,** 3.9.6.
321. III : 1 : 53.
322. III : 1 : 55 (1-2).
323. III : 1 : 55 (3-4).
324. III : 1 : 56.
325. III : 1 : 57.
326. **திருவாய்மொழி,** 6.10.10.
327. III : 1 : 58.
328. III : 1 : 59.
329. **திருவாய்மொழி,** 4.10.4.
330. III : 1 : 60.
331. III : 1 : 61.
332. III : 1 : 63.
333. III : 1 : 70.
334. **கம்பர் இயற்றிய கம்பராமாயணம்,** ஆரணிய காண்டம். பாகம்-1, ப.6.
335. இராகவையங்கார், மு., **தெய்வப் புலவர் கம்பர்,** ப.46.
336. ஸ்ரீநிவாசய்யங்கார், **வால்மீகி ராமாயணம்,** பாகம்-1, ஸர்க்கம் 72.
337. III : 10 : 41.
338. III : 10 : 42.
339. III : 10 : 43.

340. III : 10 : 44.
341. **திருவாய்மொழி,** 2.5.10.
342. III : 10 : 45.
343. III : 10 : 46.
344. III : 10 : 47.
345. III : 10 : 48.
346. III : 10 : 49.
347. III : 10 : 50.
348. II : 12 : 131.
349. VI : 21 : 223.
350. VI : 21 : 225.
351. VI : 21 : 226.
352. VI : 21 : 228.
353. VI : 21 : 229.
354. VI : 37 : 84.
355. VI : 37 : 99.
356. VI : 37 : 100.
357. VI : 37 : 101.
358. VI : 37 : 102.
359. VI : 37 : 103.
360. VI : 37 : 104.
361. VI : 37 : 105.
362. VI : 37 : 107.
363. VI : 37 : 108.
364. VI : 37 : 109.
365. VI : 37 : 110.
366. VI : 37 : 111.
367. VI : 26 : 141.
368. VI : 26 : 142.
369. VI : 26 : 143.
370. VI : 26 : 144.
371. VI : 37 : 113.
372. VI : 37 : 114.
373. சீனிவாசய்யங்கார், ஸ்ரீ.உ.வே. **வால்மீகி ராமாயணம்,** பாகம்-2, யுத்த காண்டம், ஸர்க்கம் - 122, ப.450.

# இயல் 6

## கம்பரும் விசிட்டாத்துவைதமும்

### முன்னுரை

வேதகால முனிவர்கள் உலகின் தோற்றம் வளர்ச்சிகளை அடிப்படையிலிருந்து ஆராய்ந்து தம் முடிவுகளைப் பொதிந்துவைத்த நூல்கள் உபநிடதங்கள் ஆகும். அவற்றை வேதங்களின் சிகரங்கள் எனலாம். இக்கருத்துக்களைச் சூத்திர வடிவில் பிரமசூத்திரங்களில் காணலாம். இவற்றுக்குப் பின்னர்த் தோன்றியது கண்ணன் அருளிய கீதை. இவை மூன்றும் வைதீக சமயத்தின் மூலச் சான்றுகள் எனலாம். பிரம சூத்திரங்களுக்குக் கொடுக்கப்பட்ட விளக்கங்களின் அடிப்படையில் அத்துவைதம், துவைதம், விசிட்டாத்துவைதம் ஆகிய சமயக் கொள்கைகள் உருவாயின. சைவம் என்பது சமயத்தின் பெயர். சைவ சித்தாந்தம் சைவ சமயத் தத்துவத்தைக் குறிக்கும். அதுபோல் வைணவ சமயத் தத்துவத்தைக் குறிப்பதே விசிட்டாத்துவைதம் என்பதாகும். இவ் விசிட்டாத்துவைதம் கம்பராமாயணத்தில் விரவிக்கிடக்கும் தன்மையினை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### அத்துவைதம், துவைதம், விசிட்டாதுவைதம்

அத்துவைதம் என்றால் இரண்டற்றது என்று பொருள். பிரம்மம் ஒன்றே உண்மையானது. மற்றவையெல்லாம் அதன் தோற்றங்கள் என்பது சங்கரரின் வேதாந்தம். **'பிரம்மமே உலகாயும் உலகிலிருந்து வேறாயும் இருக்கிறது என்பதும், பிரம்மமே ஒன்றாயும் பலவாயும் இருக்கின்றது என்பதும், பொருந்தாது என்பதே சங்கரர் கொள்கை. இதுவே பிரம்மம் தானாயும் ஒன்றாயுமிருப்பதே உண்மை; வேறாயும் பலவாயும் காணப்படுவது தோற்றம் என்ற முடிவுக்கு அவரை வரச்செய்தது'.**[1]

துவைதம் என்றால் இரண்டு என்பது பொருள். இங்கு இரண்டு எனப் பேசப்படுபவை ஆன்மாவும் இறைவனும். ஆன்மா வேறு; இறைவன் வேறு; இவைஇரண்டென்னும் நிலையை நீங்கி ஒன்றென்னும் நிலையை ஒருபோதும் அடைவதில்லை. எப்போதும் இரண்டும் இரண்டுதான்

என்பதே மத்துவரது கொள்கை. இவ்வாறு இறைவன் வேறு, ஆன்மா வேறு என அவை இரண்டுக்குமிடையே உள்ள பேதத்தை, அதாவது வேற்றுமையை வற்புறுத்துவதோடு மத்துவர் நின்றுவிடவில்லை. ஈசுவரன், சடம், சீவன் ஆகிய மூன்று பொருள்களும் என்றுமே உள்ளவை என்பது மத்துவரது கொள்கை. இம்முப்பொருள்களைப் போலவே இவற்றிற்கிடையேயுள்ள பேதங்களும் நித்தியமானவை என்கிறார் மத்துவர்.[2]

விசிட்டா துவைதம் இராமானுச தரிசனம் என்றும் எம்பெருமானார் தரிசனம் என்றும் வழங்கப்பெறும். '**விசிட்டாதுவைதம் என்பதை விசிட்டஸ்ய அத்வைதம் எனப் பிரிக்கலாம். விசிஷ்டம் - விசேஷம். இதன் பொருள் சித்து அசித்து இவற்றின் சேர்க்கையால் இரண்டற்ற ஒன்றான பிரம்மம்.**'[3]

சங்காரின் அத்துவைதம் காண்கின்ற அனைத்தும் அழிபவை. காணாத அந்த ஒன்றுமட்டுமே மெய், சத்தியம், நித்தியம் என்கிறது. இராமானுசரின் விசட்டாதுவைதம் சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் முப்பொருள் உண்மையை வலியுறுத்தும்.

### இராமானுசரின் விளக்கம்

'இராமானுசர் கொடுத்த விசிட்டாதுவைத விளக்கம் அவர் தாமாக மேற்கொண்டதன்று. போதாயனர், திரமடாசாரியர், பிரமநந்தி, குகதேவாசாரியார் போன்றோரை அடியொற்றியே தமது விளக்கத்தை அளித்தார். 'ஸ்ரீபாஷ்யம்' என்று அழைக்கப்பெறும் இவ்விளக்கவுரை பிரம சூத்திரத்தின் பொருளோடு ஒட்டிச் செல்கிறது என மேலைநாட்டுத் தத்துவ ஞானிகள் பாராட்டுவர். இராமானுசர் நம்மாழ்வாரின் நெஞ்சுருக்கும் பக்திப் பனுவல்களாலும், அவற்றில் பொதிந்துள்ள தத்துவக் கருத்துக்களினாலும் ஈர்க்கப்பட்டார் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்'.[4] என்பர். இதனால் இராமானுசர் கொள்கையின் பல கூறுகள் அவருக்கு முன்பே பல நூல்களுள் சிதறுண்டு கிடந்தனவேனும் அவற்றை முறைப்படுத்தித் தொகுத்து அளித்தவர் அவரே என்பது தெரிகிறது.

'விசிட்டாதுவைதம் என்ற பெயரும் இவர் இட்டதன்று; அவருடைய சீடபரம்பரையில் அவருக்கு ஏறத்தாழ 200 ஆண்டுகளுக்குப் பின்பு வந்த சுதர்சன சூரியும், வேதாந்த தேசிகனும் சூட்டிய பெயர்'[5] என்பர்.

### விசிட்டாத்துவைதம்

இத்தத்துவம் முப்பொருள் உண்மையினையும், முப்பொருளின் ஒன்றாகிய இறைவனை அடையும் வழிகளையும் விளக்குகிறது.

## முத் தத்துவங்கள்

புலன்களால் அறிதலும், அறிதலால் உண்டாகும் உணர்ச்சியும், உணர்ச்சியால் உந்தும் மனமும் இயக்கமும் '**சித்**' எனப்படும். உயிரும் அதுவே. சித் உடைய பொருள் '**சேதநம்**'. '**சித்**' இல்லாதது அசேதநம்.

இறைவனை அடைய நாட்டமுடைய சேதநன் '**முமுட்சு**' எனப்படுவான். இம் முமுட்சு, தத்துவம், இதம், புருடார்த்தம் என்ற மூன்றை அறிந்திருக்க வேண்டும். சித்து அசித்து, ஈசுவரன் ஆகியன மூன்று தத்துவங்கள். சித்து என்றால் உயிர்கள் அல்லது சீவான்மாக்களின் தொகுதி. அசித்து என்பது மக்கள், விலங்கு இவற்றின் உடம்பும் மற்றும் உயிரல் பொருள்களுமாம். ஈசுவரன் இறைவன். இவை மூன்றும் முத்தத்துவங்கள் அல்லது தத்துவத்திரையம் என வழங்கப்பெறும்.

**இதம்** வீடு பேற்றிற்குச் சாதனமாகக் கடைப்பிடிக்கப்படும் உபாயம் அல்லது வழி. இது பத்தி நெறி. பிரபத்தி நெறி என இருவகைப்படும். ஆழ்வார் பாடல்களில் பக்தி நெறியே பேசப்படுகிறது. பிரபத்தி நெறி வலியுறுத்தப்படுகிறது.

**புருடார்த்தம்** என்பது ஆன்மா அடைய வேண்டிய உறுதிப்பொருள்கள். இவை அறம், பொருள், இன்பம், வீடு என நான்காம். வீட்டினை முக்தி என்பர். வீட்டினை அடைய வேண்டியவன் தெரிந்துகொள்ள வேண்டிய மூன்று மந்திரங்களாவன : 1) திருமந்திரம், 2) துவயம், 3) சரம சுலோகம்.

## திருமந்திரம்

'**ஓம் நமோ நாராயணாய**' என்பது திருமந்திரம். '**ஓம்**' என்பதன் பொருளை, நமோ நாராயணாய என்ற இரு சொற்களும் விரிவுபடுத்துகின்றன. இவ்விரு சொற்களை விரிப்பதே துவயம். இத்துவயத்தின் பொருளை மேலும் விரிப்பதே சரமசுலோகம். இம்மந்திரத்தின் பொருளை நாராயணன் நரனுக்கு உபதேசித்ததாக வரலாறு. திருமங்கை ஆழ்வார் எம்பெருமானிடமே இதைப் பெற்றார் என்பர்.

"**மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர் கான்**"[6]

என்பது பெரிய திருமொழியின் தனியன்.

'**ஓம்**' என்பது பிரணவம். இது அகாரம், உகாரம், மகாரம், ஆகியவற்றின் சேர்க்கையால் பிறந்தது. அகாரம் இறைவனைக் குறிக்கும். '**எழுத்துக்களில் அகாரமாக நான் இருக்கிறேன்**'.[7] என்பது கீதை. '**உகாரம்**' என்பது சேதநன் பிறர்க்கு அடிமைப்பட்டவனல்லன்; இறைவன் ஒருவனுக்கே

அடிமைப்பட்டவன் என்பது பொருள். மகாரம் ஞானவானாகிய சீவனைக் குறிக்கும்.

**துவயம்**

துவயம் என்பதற்கு இரண்டு என்பது பொருள்.

> ***ஸ்ரீ மந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே!***
> ***ஸ்ரீமதே நாராயணாய நம!***

என்ற இரண்டு வாக்கியங்கள் உள்ளன. அதனால் இது துவயம் எனப் பெயர் பெற்றது. '**ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகளை உபயோகமாகப் பற்றுகிறேன்**' என்பது முதல் வாக்கியத்தின் பொருள். '**பெரிய பிராட்டியும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக**' என்பது இரண்டாம் வாக்கியம் உணர்த்தும் பொருளாம்.[8]

**சரம சுலோகம்**

> *ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாம்ஏகம் சரணம் வ்ரஜ*
> *அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி*
> *மாசுச:*

என்பது சரம சுலோகம். பாரதப்போரில் கண்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசித்தது. இதன் பொருளாவது: 'சாத்திரங்கள் பயின்று சிறப்பான ஞானத்தைப் பெற்றவர்களே கர்மயோகம், ஞானயோகம், பக்தி யோகம் ஆகியவற்றைச் செவ்வனே அனுட்டிக்க முடியும். மற்றவர்கள் இவற்றை நம்மால் அனுட்டிக்க முடியாது என்று நினைத்துத் தாம் விலக்க நேரும் ஆதலின் சிறந்த அவ்வுபாயங்களை அனுட்டிக்க கடவர். அத்தகு ஆற்றல் அற்றவர்கள் என்னைச் சரணடைந்தால் நான் அந்தந்த அரிய உபாயங்களின் இடத்தில் நின்று அவ்வவற்றின் பலனைக் கொடுப்பேன்' என்பது.

> **எல்லா அறங்களையும் விட்டொழித்திங் கென்றனையே**
> **நல்லாய் சரண்புகுக நானுன்னை - அல்லல்தரு**
> **பாவங்களினின்று பற்றறவே விடுவிப்பன்**
> **மேவுதுய ரெல்லாம் விடு**

என சுலோகத்தினை மொழியெர்த்துள்ளார் வாதிகேசரி அழகிய மணவாளஜீயர்.

**மறை பொருள்கள்**

இந்த மூன்று மந்திரங்களும் அனைத்து வேதங்களின் சாரமான பொருளைத் தெரிவிப்பதாலும், இவற்றின் பெருமையை உணராதார் காதில்

விழாதவாறு இவற்றை மறைக்கவேண்டியிருத்தலாலும் இவை இரகசியங்கள் என்ற திருநாமம் பெற்றன.[9]

**சித்து**

சித்து என்பது ஞானத்திற்கு இடமான ஆன்மா. இந்த ஆன்மா சேதநன் என்றும் வழங்கப்பெறும். இது உடல், பொறிகள், மனம், உயிர், ஞானம் இவற்றிற்கு வேறுபட்டது. அணுவின் அளவினையுடையது. ஆனந்த வடிவத்தைக் கொண்டது. கண் முதலிய இந்திரியங்களுக்குத் தோன்றாது. மனத்தால் எண்ணிப் பார்க்க முடியாது. சித்து எனப்படும் ஆன்மாவின் தொகுதியில் எண்ணற்ற சீவான்மாக்கள் உள்ளனர். அவர்கள் பெத்தர் (தளைப்பட்டிருப்பவர்), முத்தர் (இவ்வுலகத் தளை களையப்பெற்று இறையின்பம் துய்ப்பவர்), நித்தியர் (அனந்தன், கருடன் போன்ற நித்திய சூரிகள்) எனப்படுவர்.

**அசித்து**

அசித்து என்பது அசேதநம் என்று வழங்கப்பெறும். அசித்தினை, சுத்த சத்துவம், மிச்சிர தத்துவம், சத்துவ சூனியம் என்று மூன்று வகையாகப் பிரிப்பர்.

**சுத்தசத்துவம்** என்பது சத்துவகுணமுடையது. ஞானத்தையும் ஆனந்தத்தையும் உண்டாக்கும் இயல்பினது. இறைவனின் அனுபவத்தின் பொருட்டே உண்டான இச்சையாலே நித்தய விபூதியின் விமானம், கோபுரம், மண்டபம், உப்பரிகை முதலிய வடிவுடன் தோற்றம் கொள்ளும். இந்தச் சுத்த சத்துவம் வைகுந்தத்திற்கு மேலே எங்கும் பரவி நிற்கும் தன்மையது.

**மிச்சிரதத்துவம்** சாத்துவிகம், இராசசம், தாமசம் என்னும் மூன்று குணங்களையுடையது. இது இருபத்து நான்கு வடிவங்களாக இருக்கும். இருபத்து நான்காவன : பொறிகள் ஐந்து, புலன்கள் ஐந்து, கருமேந்திரியங்கள் ஐந்து, பூதங்கள் ஐந்து, பிரகிருதி, மான், அகங்காரம், மனம் என்பவையாம்.

**சத்துவ சூனியம்** என்பது காலத் தத்துவமாகும். காலம் என்பது எங்கும் பரந்து நிற்கும் திரவியம். சித்து, அசித்து ஆகிய தத்துவங்கள் இறைவன் திருமேனியில் அடங்கியிருக்கும்.

**ஈசுவரன்**

ஈசுவரன் காலமும் கணக்கும் நீத்த காரணன். நித்தியன், எல்லாச் சேதந அசேதநங்களில் வியாபகனாய் இருப்பவன். எல்லாவற்றின் உள்ளும்

இருப்பவன். ஈசுவரனுக்கு சேதந அசேதநங்களுக்குரிய குற்றங்கள் வாரா. அவன் தனக்கு ஒப்பாரும், மிக்காரும் இல்லாதவன். ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், தேஜஸ் முதலிய மங்கள குணங்களையுடையவன்.

ஈசுவரன் தன் **கிருபையாகிய** குணத்தால் பிறர் துக்கம் காணுமிடத்து **'ஐயோ'** என்று இரங்குவான். **சௌகார்த்த குணத்தால்** சேதநர்க்கு நன்மையே சிந்திப்பான். **ஆச்ரித பாரதந்திர** குணத்தால் பிறர்க்கே பயன்படுவான். **சாம்ய குணத்தால்** பிறப்பாலும், அறிவாலும், ஒழுக்கத்தாலும் உண்டான தாழ்வைப் பாராதிருப்பான். **அசரண்ய சரணத்துவ** குணத்தால் தம்மையும் காத்துக் கொள்ளவியலாது பிறரும் கைவிட்ட காலத்தில் தான் காப்பாளனாக இருப்பான். **சௌசீல்ய** குணத்தால் பிறப்பாலும் அறிவாலும் ஏழை, ஏதலன், கீழ்மகன் என்னும்படி தாழ்வானவர்கட்கும் அறப் பெரியவனான தன்னைத் தாழவிட்டுக் கொள்வான். **சௌலப்பிய** குணத்தால் தன்னைக் கட்டவும் அடிக்கவுமாம்படிச் சுலபனாக்கிக் கொள்வான். **வாத்சல்ய** குணத்தால் தன்னை அடைந்த சேதநர்கள்பால் அன்பும் ஆதரமும் பெருகக் கொண்டு விளங்குவான்.

### முத்தொழில்கள்

ஈசுவரன் படைத்தல், காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்கள் புரிபவன். இறைவன் அனைத்தையும் தானே படைப்பது **சமட்டி சிருட்டி** என்றும், நான்முகனைக் கொண்டு படைப்பது **வியட்டி சிருட்டி** என்றும் பெயர் பெறுவன.

### மூவகைக் காரணம்

உலகத் தோற்றத்திற்கு ஈசுவரனே மூவகைக் காரணனாக விளங்குகிறான். உலக உற்பத்திக்கு முன்னர் சூக்குமநிலையிலுள்ள பிரகிருதியில் அந்தர்யாமியாக மறைந்து இருப்பதால் முதற்காரணன்.

நுண்ணிய நிலையிலுள்ள சித்து, அசித்துக்களை வெளிப்படுத்தி உலகைப் படைப்போம் என்று எண்ணுகிற நிலையில் நிமித்தகாரணன்.

சக்தி முதலியவற்றைக் கொண்டு படைப்பதால் துணைக் காரணன்.

உலகப் படைப்பிற்கு இறைவன் காரணனாவதை,

> **'தானோர் உருவே தனிவித்தாய்**
> **தன்னின் மூவர் முதலாய**
> **வானோர் பலரும் முனிவரும்**
> **மற்றும் மற்றும் முற்றுமாய்'**[10]

என்றார் நம்மாழ்வார்.

சிலந்திப்பூச்சி தன் வாயிலிருந்து தான் உண்டாக்கிய வலையில் அது தானே தங்கிப் பின்னர் அதைத்தானே விழுங்கிவிடுகிறது.

**'ஒரு சிலந்திக் குண்டான ஸ்வாபம்
சர்வ சக்திக்குக் கூடாதொழியா
திறே'[11]**

என்பது தத்துவத்திரைய வாக்கியம்.

## ஐந்து நிலைகள்

ஈசுவரன் ஐந்து நிலைகளையுடையவன். அவையாவன : 1)பரம் 2)வியூகம் 3) விபவம் 4) அந்தர்யாமி 5) அர்ச்சை.

### பரம்

பரமாவது பெரியபிராட்டி, பூமிப்பிராட்டி, நீளாப்பிராட்டியுடன் அனந்தாழ்வார் பெரிய திருவடி ஆகிய நித்திய சூரிகள் புடைசூழ எம்பெருமான் கௌத்துவமணி, பீதாம்பரம், சுதர்சனம், பாஞ்சசன்னியம், சார்ங்கம், ஆகியவை தரித்துப் பரமபதத்தில் இருக்கும் இருப்பாம்.[12]

### வியூகம்

இவ்வுலகில் படைப்பு, அளிப்பு, அழிப்பு இவற்றை நடைபெறச் செய்யவும், மக்களுக்குப் பேரருள் சுரந்து அவர்களைத் தளைகளினின்று விடுவிக்கவும் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்ற பெயர்களுடன் இருக்கும் நிலையாம்.

**சங்கர்ஷணன்** ஞானம், பலம் ஆகிய குணங்களை உடையவர். உலக அழிப்பிற்குக் காரணமானவர்.

**பிரத்தியும்நன்** ஐசுவரியம் வீரியம் உடையவர். உலகப் படைப்பிற்குக் காரணமானவர்.

**அநிருத்தன்** சக்தி, தேஜஸ் ஆகிய குணங்களுடன் கூடியவர். உலகப் பாதுகாப்பிற்குக் காரணமானவர்.

**வாசுதேவன்** மேற்கண்ட ஆறு குணங்களையும் உடையவர். பரநிலைப் பெருமானுக்கு அடுத்த நிலையில் உள்ளவர்.

சங்கர்ஷணன், பிரத்தியும்நன், அநிருத்தன் ஆகிய இவர்களையே வியூக நிலைச் சிவன், வியூனக நிலைப் பிரமன், வியூகநிலைத் திருமால் எனலாம்.

இவ்வியூக நிலையினைப் பரிபாடல்,

**'செங்கட்காரி, கருங்கண் வெள்ளை**
**பொன்கட்பச்சை பைங்கண் மாஅல்'**[13]

எனக் குறிப்பிடுகிறது.

**விபவம்**

விபவமாவது அவதாரமெடுத்தல். அவதாரங்களின் பயன் அடைந்தாரைக் காத்தலும், விரோதிகளைப் போக்கலும், அறத்தை நிலைநிறுத்தலுமாம். இவ் அவதாரங்களுள் பத்து குறிப்பிடத்தக்கவை.

**அந்தர்யாமித்துவம்**

அந்தர்யாமித்துவமாவது சேதநர்களின் உள்ளே புக்கிருந்து அவர்களின் எல்லாச் செயல்களுக்கும் தானே ஏவுவோனாக இருக்கும் நிலையாம்.

**அர்ச்சை**

**'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே'**[14]

என்னும் பொய்கை ஆழ்வாரின் பாசுரப்படி அன்பர்கள் எதைத் தனக்குத் திருமேனியாகக் கொள்கின்றனரோ அதையே தனக்கு வடிவமாகவும், அவருகந்து வைத்த பெயரையே தனக்குப் பெயராகவும் கொண்டுள்ள நிலை.

இவ் ஐந்து நிலைகளை நம்மாழ்வார்,

**'விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய்**
**கடல் சேர்ப்பாய்**
**மண்மீதுழல்வாய் இவற்றுள் எங்கும்**
**மறைந்துறைவாய்'**[15]

என்பார்.

**'பூதக ஜலம் போல அந்தர்யாமித்துவம்; ஆவரண ஜலம் போலப் பரத்துவம்; பாற்கடல் போலே வியூகம்; பெருக்காறு போலே விபவம்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்'**[16] என்கிறது ஸ்ரீவசனபூஷணம்.

சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய மூன்றும் இணைந்த நிலையை,

**திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசைப்**
**படர்பொருள் முழுதுமாய் அவை அவை தொறும்**

**உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்**
**சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே**[17]

என்றார் நம்மாழ்வார். உடலில் உயிர் இருப்பதுபோல் இறைவன் ஐம்பூதங்களில் மறைந்தும், வெளிப்பட்டும் உள்ளான் என்பதை இப்பாடல் உணர்த்தும்.

**உயிரின் பிறப்பு**

மூலப்பகுதி விரிவடைந்து மக்கள் விலங்கு முதலிய வடிவங்களாகவும் மற்றுமுள்ள பொருள்களாகவும் பரிணமிக்கிறது. உயிர் தன்னுடைய பாவங்களுக்கேற்ப ஒவ்வோர் உடம்பை அடைகிறது. அதுவே உயிரின் பிறப்பாகும்.

இறைவன் மூலப்பகுதியின் விகாரமாகிய எல்லாப் பொருளுள்ளும் அந்தர்யாமியாக மறைந்துள்ளான். இதுவே இவற்றின் பருநிலை இதனை,

**'அனைத்தும் நீ அனைத்துப் பொருளுநீ'**[18]

எனப் பரிபாடல் உணர்த்தும்.

'................................ அவை அவைதொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்'

என்பதில் இறைவன் உடலில் உயிரிருப்பதுபோல அனைத்துப் பொருளினுள்ளும் மறைந்தும், அனைத்துப் பொருள்களில் வியாபித்தும் உள்ளான் என்பது பொருளாகும்.

உயிர் உடலுள்ளே மறைந்திருப்பதோடு, உடல் முழுதும் வியாபித்தும் உள்ளது எனப் பொருத்தமான உவமையினை நம்மாழ்வார் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**'ஸகல சேதநாசேதநங்களும் சரீரமாய், எம்பெருமான் ஸகலாந்தர்மியா மித்வேந சரீரியாய் நிற்றலால் இப்படிப்பட்ட சரீர சரீரி பாவ ஸம்பந்தத்தைப் பற்றவே ஐக்கியம் சொல்லப்பட்டதென்று நிரூபிக்கிறது இப்பாசுரம். விசிஷ்டாதுவைத கோட்பாட்டை இப்பாட்டு ஸாரமாக எடுத்துரைக்கின்றது என்றுணர்க'**[19] என்பர்.

இறைவன் அனைத்துப் பொருளிலும் கரந்தும், பரந்தும் உள்ள தன்மையினை அந்தர்யாமித்துவம், வியாகபகத்துவம் என்பர். இதனையே மேலும் நம்மாழ்வார்,

**'அறிகிலேன் தன்னுள் அனைத்துலகும் நிற்க**
**நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்'**[20]

என்றார். தன்னுள் அனைத்துலகும் நிற்றலாவது வியாபகத்தன்மை. தான் அவற்றுள் நிற்றலாவது அந்தர்யாமித்துவம்.

## அழித்தல்

எல்லாப் பொருளுள்ளும் அந்தர்யாமியாக உள்ள இறைவனே அவற்றை அழிக்கிறான். அழித்தலாவது செயல் உருவமாக நின்றவற்றைக் காரண உருவமாகத் தன்னுள் ஒடுக்குதல்.

அந்தர்யாமித்துவத்தையும், வியாபகத்துவைத்தையும் பாரதம் பாடிய பெருந்தேவனாரின் நற்றிணைக் கடவுள் வாழ்த்துப் பாடல் விளக்குகிறது.

> **மாநிலம் சேவடியாகத் தூ நீர்**
> **வளைநரல் பௌவம் உடுக்கையாக**
> **விசும்பு மெய்யாகத் திசைகையாகப்**
> **பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக**
> **இயன்ற வெல்லாம் பயின்ற கத்தடக்கிய**
> **வேத முதல்வன் என்ப**
> **தீதற விளங்கிய திகிரியோனே[21]**

இப்பாடலில் வரும் இயன்றவெல்லாம் பயின்று என்னும் தொடர் அனைத்துப் பொருளிலும் கரந்துறையும் தன்மையினையும், அகத்தடக்கி என்பது வெளிப்பட்டு நிற்கும் வியாபகத் தன்மையினையும் புலப்படுத்துவனலாம்.

உடலிலுள்ள உயிர் அவ்வுடலுக்குரிய வளர்ச்சி, தேய்வுகளை அடைவதில்லை. அவ்வுடல் உயிர் ஆகியவற்றின் விகாரங்களை இறைவன் அடைவதில்லை

## இறைவனை அடையும் வழிகள்

இறைவனை அடையும் வழிகள் இரண்டு. அவை சித்தோபாயம், சாந்தியோபாயம் என்பன. நம்மால் மேற்கொள்ளக் கூடிய வழி சாந்தியோபாயம்.

இச்சாந்தியோபாயம் பத்தி, பிரபத்தி என்று சாத்திரங்களில் இருவகையாகப் பேசப்படும். பக்திநெறி கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம என மூவகைப்படும். பிரபத்தி நெறி அனைவராலும் மேற்கொள்ளத்தக்கது.

## பிரபத்தி நெறி

உயர்ந்தோர், தாழ்ந்தோர், கற்றவர், கல்லாதவர் என்ற வேறுபாடின்றி எல்லாராலும் மேற்கொள்ளக் கூடிய நெறி.

பக்தி உயர்ந்த வருணத்தாருக்கு மட்டுமே உரியது. பிரபத்தி எல்லார்க்கும் உரியது. பக்திமார்க்கத்தைப் படிப்படியாகத் தான் கையாளலாம். ஆனால் பிரபத்தியை எவருமே உடனடியாக மேற்கொள்ளலாம். இறைவனது வன்மையிலும் அருளிலும் பூரண நம்பிக்கை வைத்துத் தன்னை முற்றாக இறைவனிடம் ஒப்படைத்தலே பிரபத்தியாகும்.[22]

### வேறு பெயர்கள்

இப்பிரபத்திநெறி '**சரணாகதி**', '**பரந்யாசம்**', '**பரசமர்ப்பணம்**', '**உபாயனுஷ்டானம்**', என்ற பெயர்களாலும் வழங்கப்பெறும்.

### ஆழ்வார்ப் பாடல்கள் - பொய்கை ஆழ்வார்

பிரபத்தி நெறியினை ஆழ்வார்கள் தங்கள் பாசுரங்களில் குறிப்பிடுகின்றனர்.

> **'அடைந்த அருவினையோடு அல்லல் நோய்பாவம்**
> **மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் - நுடங்கிடையை**
> **முன்னிலங்கை வைத்தான் முரணொழிய முன்னொருநாள்**
> **தன்னிலங்கை வைத்தான் சரண்'**[23]

என்றார் பொய்கை ஆழ்வார்.

### திருமங்கை ஆழ்வார்

நைமிசாரணியத்து இறைவனைத் திருமங்கை ஆழ்வார்,

> **'நான் உடைத் தவத்தால் திருவடியடைந்தேன்'**[24]

என்றார்.

### நம்மாழ்வார்

சரணாகதித் தத்துவத்தின் தந்தை போன்றவரும் பிரபந்நர்களின் தலைவராக விளங்குபவருமான நம்மாழ்வார் திருவாய்மொழியில்,

> **'நம்பெருமான் அடிமேல் சேமங்கொள் குருகூர்ச்சடகோபன்'**[25]

என்றும்,

> **'கழல்கள் அவையே சரணாகக் கொண்ட குருகூர்ச்சடகோபன்'**[26]

என்றும்,

'ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்'[27]

என்றும் பாடுகிறார்.

'சேஷிபக்கல் சேஷபூதன் இழிந்துறையும்
பிரஜை முலையிலே வாய்வைக்கு
மாப்போலே'[28]

என்பது முமுட்சுப்படி.

**'பாலுண்ட பச்சைக் குழவி எங்ஙனம் தாயினுடைய மற்றை அவயவங்கள் யாவையும் விட்டுத் தான் உயிர் வாழ்வதற்கிடனாயுள்ள அவள் கொங்கையிலே வாய் வைக்கிறதோ அங்ஙனமே சேஷியாகிய எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டுத் தான் உய்தற்கு இடனாயுள்ள அவன் திருவடிகளையே சீவன் பற்றுகிறானென்பதை இந்த வாக்கியம் புலப்படுத்துகிறது. முந்திய செயல் குழந்தைக்கு எவ்வாறு இயல்பாய் அமைந்ததோ அவ்வாறே பிந்திய செயலும் சேதநனின் சொரூபத்திற்கு இயல்பாய் அமைந்துள்ளது தெளிக'[29]** என்பாரின் கூற்று மேற்கண்ட முமுட்சுப் படி வாசகத்திற்கு விளக்கமாய் அமைந்துள்ளது.

### கம்பரும் விசிட்டாதுவைதமும்

இனிக் கம்பருக்கு விசிட்டாதுவைதத்திலுள்ள ஈடுபாட்டினையும் அவர் அதைக் கையாண்டுள்ள திறத்தினையும் காணலாம்.

கம்பரின் கடவுள் வாழ்த்துப் பாடல்களில், விசிட்டாதுவைதக் கொள்கைகள் விரவிக் கிடப்பதை அறியமுடிகிறது. சித்து, அசித்து, ஆகியவை பற்றிய விளக்கங்கள் நூலில் இடம்பெறுகின்றன. ஈசவரனின் இயல்புகளும், குணங்களும் இராமனிடத்து அமைந்திருப்பதைக் கம்பர் விளக்கியுள்ளார். இறுதியாகப் பிரபத்தி நெறி காப்பியத்தில் இடம்பெறும் பெற்றி ஆராயப்படுகிறது. இக்காப்பிய மாந்தர் பலர் இராமனைச் சரணடைவதால், இந்நூல் சரணாகதி சாத்திரம் எனப் பெயர் பெறுமாற்றை அறியமுடிகிறது.

### கடவுள் வாழ்த்துப் பாடல்கள்

கடவுள் வாழ்த்தாவது, கவிதான் வழிபடு கடவுளையாதல், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். கம்பர் திருமாலை எனை ஆளுடை ஐயன்[30] எனக்கூறுவதால், இதனை வழிபடு கடவுள் வாழ்த்து எனக் கொள்ளலாம்.

ஐம்பெருங் காப்பியங்களில் கடவுள் வாழ்த்து முதன்முதலாக இடம்பெறும் நூல் சீவகசிந்தாமணி.

பெரியபுராணப் பாயிரத்தில் அம்பலவாணரை வாழ்த்தி இரு பாடல்களும், அவரின் மூத்த பிள்ளையாகிய விநாயகரை வாழ்த்தி ஒரு பாடலும் இடம்பெற்றுள்ளன.

அவர்களைப் பின்பற்றிக் கம்பரும் தற்சிறப்புப் பாயிரத்தில் மூன்று கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பாடியுள்ளார். மேலும் காண்டந்தோறும் கடவுள் வாழ்த்துப் பாடியிருப்பது கம்பரின் தனிச்சிறப்பாகும். கம்பராமாயணத்தில் இடம்பெறும் கடவுள் வாழ்த்துப் பாடல்களின் எண்ணிக்கை எட்டு.

**தற்சிறப்புப் பாயிரம் - முதற் பாடல்**

> "உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
> நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
> அலகிலா விளையாட்டுடை யாரவர்
> தலைவர் அன்னவர்க்கே சரணாங்களே"[31]

'எல்லா உலகங்களையும் தோற்றுவித்தலும் நிலை பெறும்படி செய்தலும் அழித்தலும் ஆகிய செயல்களை ஒழியாத அளவற்ற விளையாட்டாக உடையவர் எவரோ அவரே தலைவர். அவர்க்கே நாங்கள் அடைக்கலம்' என்பது பாடலின் பொருள்.

'விளையாடும் பாலகனுக்கு அந்த விளையாட்டே பயனாவது போல் பரமாத்மாவுக்குச் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்உறாரம் முதலியவை லீலைகளேயன்றி வேறு பயன் கிஞ்சித்தும் இல்லை'.[32] என்பது விஷ்ணு புராணம்.

'சீபாடியக் கொண்டல்' எனப் புகழ் பெற்ற இராமானுசர் அருளிய பிரமசூத்திரப் பாடியத்தின் முதலடி,

'அகில புவந ஜந்ம ஸ்தேம பங்காதி லீலே'

என்பதாகும். இதன் பொருள் உலகம் யாவையும் படைத்தலும், காத்தலும், நீக்கலும் முதலானவற்றை விளையாட்டாக உடையாய் என்பதாகும்.[33] இதனால் கம்பர் இராமானுசரின் கருத்தினையே தம் முதல் பாடலின் மூன்றடிகளில் அமைத்தார் எனலாம்.

இராமானுசரின் கருத்தைத் தம் முதல் பாடலில் அமைத்ததன் மூலம், அவருடைய விசிட்டாதுவைதக் கொள்கைகளை நூலில் இடம்பெறச் செய்வதற்குத் தோற்றுவாயாகக் கொண்டார் என்பது மனங்கொள்ளத்தக்கதாகும்.

'**தலைவர் அன்னவர்க்கே சரணாங்களே**' என்பது பாடலின் இறுதி அடி. இது பிரபத்தி நெறியாகும். சரணாகதி சாத்திரம் படைத்த கம்பர் அந்நெறியினை முதல் பாடலில் இடம்பெறச் செய்துள்ளது பொருத்தமானதாகும்.

இறைவன் இவ்வுலகப் படைப்பினைப் பயன்கருதாது செய்கிறானாதலின் இதனை விளையாட்டு என்றனர். கம்பரும் இறைவனை 'அலகிலா விளையாட்டுடையார்' என்றார்.

**இரண்டாம் பாடல்**

> **"சிற்குணத்தர் தெரிவரு நன்னிலை**
> **எற்குணத்தரிது எண்ணிய மூன்றனுள்**
> **முற் குணத்தவரே முதலோரவர்**
> **நற் குணக் கடலாடுதல் நன்றரோ"[34]**

'**ஞானிகள் உணர்தற்கரிய நல்ல இயல்பினை என்னால் உணர்த்தல் அரிது. எண்ணப்பட்ட மூன்று குணங்களுள் முதலாவதாகிய சத்துவ குணம் உடையவரே தலைவர். அவருடைய நல்ல குணங்களில் மூழ்கித் திளைத்தலே இன்பம்**' என்பது பாடலின் பொருள்.

அசித்தில் சுத்த சத்துவம் என்பது பரமபதத்தைக் குறிக்கும். பரமபதத்திலுள்ள பரமன் சுத்த சத்துவக் குணமுடையவன். அவனே முழுமுதற்பொருளாகிய திருமால் என்பதை இப்பாடல் உணர்த்தும்.

சத்துவம், இராசசம், தாமசம், என்பன முக்குணங்கள். இதில் முதற் குணமாகிய சத்துவ குணமுடையவர் திருமால் என்றும், அவர் பல்வேறு நற்குணக் கடலாக விளங்குகிறார் என்றும் இப்பாடல் மூலம் அறியலாம்.

**மூன்றாம் பாடல்**

> **"ஆதியந்தம் அரியன யாவையும்**
> **ஓதினார் அலகில்லன உள்ளன**
> **வேதம் என்பன மெய்ந்நெறி நன்மையன்**
> **பாதம் அல்லது பற்றலர் பற்றிலார்"[35]**

**'வேதத்தைத் தொடங்கும்போதும் முடிக்கும்போதும் 'ஹரி ஓம்' என்று கூறிப் பற்றற்ற பெரியோர்கள் நெறியும், பயனுமாக விளங்கும் இறைவனுடைய திருவடியைப் பற்றுவர்'** என்பது மேற்கண்ட பாடற் பொருள்.

பின் இக்காப்பியத்துள் விரித்துப் பேசப்படுகின்ற தண்டகவன முனிவர்கள், வீடணன் முதலியோர் இக்காவிய நாயகனான இராமபிரானை அடியடைந்து உய்ந்த வரலாறுகளுக்குத் தோற்றுவாய் போல அமைந்தமை காணத்தகும்[36] என்பர்.

இக்கடவுள் வாழ்த்துப் பாடல்களின் மூலம் படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய முத்தொழில்களை இறைவன் விளையாட்டாக நிகழ்த்துகிறான் என்பதும், அவன் சத்துவ குணமுடையவன் என்பதும், பற்றிலார் அவன் பாதங்களைப் பற்றி உய்வர் என்பதுமாகிய விசிட்டாதுவைதக் கொள்கைகள் இடம்பெறுவது இங்குக் கருதத்தக்கது.

**காண்டந்தோறும் கடவுள் வாழ்த்து**

**அயோத்தியா காண்டம்**

> **"வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும்**
> **ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறத்தும் உளனென்ப**
> **கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை யிழைப்பக் கோற்றுறந்து**
> **கானும்கடலும்கடந்திமையோர்இடுக்கண்தீர்த்தகழல்வேந்தே"[37]**

பூதங்கள் தோறும், பூதங்களிலுள்ள பொருள்கள் தோறும் உள்ளும் புறமும் தங்கியுள்ள பரமபதப்பரம்பொருளே இராமனாகப் பிறந்து கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்தான் என்பது பாடலின் பொருள்.

பற்றற்றவனாகிய பரமபதப் பரம்பொருளே சித்து, அசித்து ஆகிய அனைத்திலும் மறைந்தும், வெளிப்பட்டும் உறைகிறான். அவனே மானிடச் சட்டை தாங்கி இப்பூமியில் பிறப்பதை இறைவனின் ஐந்து நிலைகளில் ஒன்றாகிய 'விபவம்' என்பர். **'இமையோர் இடுக்கண் தீர்த்தலே'** இறைவன் அவதாரம் எடுப்பதன் நோக்கமாகும்.

> **'நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா**
> **நாட்டை நலியும் அரக்கரை நாடித்'[38]**

தண்டித்தற் பொருட்டே இறைவன் அவதாரமெடுத்தான் என்பதை,

> **'கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை யிழைப்பக் கோற்றுறந்து**
> **கானும் கடலும் கடந்து'**

என்னும் கம்பர் கூற்றினால் அறியலாம்.

இமையோர்க்கு அருள் புரிதற் பொருட்டே இம்மானுடப் பிறவி எடுத்தான் என்பதனால், அவ் இறைவனின் பேரருளும், அவனது எளிவரு தன்மையும் விளங்கும்.

> **'.................................... மாபூதத்தின் வைப்பெங்கும்**
> **ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்தும் உளனென்ப'**

என்பது,

> **திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவை மிசை**
> **படர்பொருள் முழுதுமாய் அவை அவைதொறும்**
> **உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்[39]**

என்னும் நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரத்தின் பொருளைக் கொண்டுள்ளது.

**'அயோத்தியா காண்டத்தமைந்த இம்முதற் கவி இறைவன் தன்மையைக் காட்டும் 'வஸ்து நிர்தே ரூபமுகத்தால்' இக்காப்பியத் தலைவனாகிய இராமபிரான் உலகத்தைத் திருமேனியாகவுடைய முழுமுதல் இறை என்கிறார்'[40]** என்பர்.

**ஆரணிய காண்டம்**

> **"பேதியாது நிமிர்பேத உருவம் பிறழ்கிலா**
> **ஓதிஓதி உதவுந்தொறும் உணர்ச்சி உதவும்**
> **வேதம் வேதியர் விரிஞ்சன் முதலியோர் தெரிகிலா**
> **ஆதிநாதர் அவர்எம் அறிவினுக் கறிவரோ"[41]**

பல்வேறு வகைப்பட்ட பொருள்கள் தோறும் அப்பொருள்களின் தன்மை வேறுபடாமலும், அப்பொருள்களில் உறையும் தன் தன்மை வேறுபடாமலும் நீக்கமற நிறைந்து தங்குபவனும், ஓதி ஓதி உணர்ந்தால் உண்மை அறிவை அருள்பவனும், வேதம் வேதியர் பிரமன் முதலியோரால் அறியப்படாதவனுமாகிய ஆதிநாதரே எம் அறிவினுக்கு அறிவாய் விளங்குகிறார்.

**'பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா ஆதிநாதர்'** என்பது **'தன்னுள் அனைத்துலகும் நிற்க நெறிமையால் தான் அவற்றுள் நிற்கும் பிரான்'** [42]என்னும் திருவாய்மொழிப் பாடற் பொருளைக் கொண்டுள்ளது. சித்து, அசித்து ஆகியவற்றில் இறைவன் தங்குவதால் சித்தோ, அசித்தோ அல்லது இறைவனோ விகாரமடைவதில்லை என்னும் கருத்து இப்பாடலில் இடம்பெற்றுள்ளது.

**'ஒரு தெய்வத்தின் இயற்பெயர் கூறி வாழ்த்தாது பரம்பொருளின் இயல்பு கூறுவதாய் அமைந்த இச்செய்யுள், சடகோபர் அருளிய திருவாய் மொழியின் முதற்பதிகத்துப் பயின்ற சொல்லும், தொடரும், பொருளும், முறையும் தழுவி அமைந்தது'**[43] என்பர்.

**கிட்கிந்தா காண்டம்**

> **"மூன்றுருவெனக் குண மும்மையா முதல்**
> **தோன்றுரு வெவையும் முதலைச் சொல்லுதற்கு**
> **ஏன்றுரு வமைந்தவும் இடையில் நின்றவும்**
> **சான்றுரு உணர்வினுக் குவந்த தாகினான்"**[44]

முதற் கடவுள் மூன்றுரு உடையவன். முக்குண முடையவன். காணப்படும் உருவமெல்லாம் அம்முதலையே முதலாக உடையன. வழங்குதற்கு ஏற்றதான உருவுடையவையும், அம்முதலின் கண் தங்கினவையும், அம்முதலின் நிலைத்த உருவமாம். அவனே உணர்வினுக்கு உணர்வுமாயினான்.

அரி, அரன், அயன் என்னும் மும்மூர்த்திகளே **'மூன்றுரு'**. சாத்துவீகம், இராசசம், தாமசம் என்பன முக்குணங்கள். அவனே உலகுக்கு முதல்வன். சேதந, அசேதநங்களாலாகிய உலகத்தைையெல்லாம் தோற்றுவிப்பவன் அவனே. அவற்றைத் தாங்குபவனும், அவற்றின் கண் தங்குபவனும், அவற்றைத் தன் நிலைத்த உருவமாகக் கொண்டு விளங்குபவனும் அவனே. அவ் இறைவனே என் உணர்வினுக்கு உணர்வானான் என்றார்.

மூன்றுரு என்பதைத்

> **'தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்ததனி முதலை'**[45]

என்றார் நம்மாழ்வார்.

மூலப் பிரகிருதியும், சேதநா, சேதநங்களின் வடிவமான எல்லாப் பிரபஞ்சங்களும் பரமாத்மாவுக்குத் திருமேனி என்ற கருத்தை விட்டுணு புராணம், பாகவதம் ஆகிய நூல்கள் கூறியுள்ளன.

'உணர்வினுக்கு உணர்வாயினான்'

என்பது ஆன்மாவுக்கு ஆன்மாவாக ஆனான் எனப் பொருள்படும். இங்கு ஆன்மா சரீரம். இறைவன் சரீரி. இதனால் இங்கு சரீர-சரீரி பாவம் என்னும் விசிட்டாதுவைதக் கருத்து இடம் பெறுவது அறியத்தக்கது.

**சுந்தர காண்டம்**

**"அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை அரவெனப் பூதமைந்தும்**
**விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்**
**கலங்குவ தெவரைக் கண்டால்அவரென்ப கைவிலேந்தி**
**இலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக் கிறுதியாவார்"[46]**

'உண்மைப் பொருளாகிய மாலையைக் கண்டால் முன்பு அம்மாலை போல் தோன்றிய தோற்றப் பொருளாகிய பாம்பு காணப்படாது நீங்குதல் போல, உண்மைப் பொருளாகிய எவரைக் கண்டால் அவரால் தோன்றிய பிரபஞ்சம் காணப்படாது நீங்குமோ, வேதம் வேதாந்தப் பொருளாகிய அவரே இலங்கையில் இராக்கதரோடு பொருதார்.

இறைவன் தோன்றும்போது பிரபஞ்சம் கண்ணுக்குப் புலனாவதில்லை. அதுபோல் பிரபஞ்சம் தோன்றும்போது இறைவன் புலனாவதில்லை.

இதனால் பிரபஞ்சத்தினுள் இறைவன் அந்தர்யாமியாகி உள்ளான் என்பதும், இறைவனுள் பிரபஞ்சம் வியாபித்துள்ளது என்பதுமாகிய விசிட்டாதுவைதக் கொள்கை இடம்பெற்றுள்ளமை நோக்கத்தக்கது.

**'மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தில் மறைந்தது மாமதயானை**
**பரத்தை மறைத்தது பார்முதற்பூதம்**
**பரத்தில் மறைந்தது பார்முதற்பூதம்'[47]**

என்னும் திருமூலரின் திருமந்திரப் பாடலுடன் சுந்தரகாண்டக் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒப்புநோக்கத்தக்கது.

**யுத்த காண்டம்**

**"ஒன்றே யென்னின் ஒன்றேயாம் பலவென்றுரைக்கின் பலவேயாம்**
**அன்றே யென்னின் அன்றேயாம் ஆமென்றுரைக்கின் ஆமேயாம்**
**இன்றே யென்னின் இன்றேயாம் உளதென்றுரைக்கின் உளதேயாம்**
**நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கிங் கேனோ பிழைப்பம்மா"[48]**

கடவுள் ஒருபொருள் ஆதலால் ஒன்று எனலாம். அப்பரம்பொருள் எல்லாப் பொருளினுள்ளும் எள்ளினுள் எண்ணெய் போலக் கரந்து எல்லாப் பொருளின் வடிவாயுமிருத்தலின் பலவென்று சொல்லுதற்கு ஏற்றதாகும். இதை,

> **'ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள்நின்ற**
> **நன்னெறில் நாரணன்'**[49]

என்றார் நம்மாழ்வார்.

கடவுள் சூரியன் போன்றிருப்பானா? சந்திரன் போன்றிருப்பானா? அன்று எனில் அன்றே. சூரியன் சந்திரன் முதலியவற்றிலுள்ள பேரொளியுடைமை, குளிர்ந்திருக்கை, எங்குஞ் சென்றிடுந்தன்மை முதலியன நிரம்பியிருப்பது குறித்து ஆமென்று சொல்லுதற்கு ஏற்றிருத்தலால் '**ஆமென்றுரைக்கின் ஆமேயாம்**' என்றார்.

கடவுள் இன்று என்பார்க்கு அக்கடவுள் இன்று என்பதற்குக் கருத்தாவாய்த் தோன்றுதலின் '**இன்றேயென்னின் இன்றேயாம்**' என்றும், கடவுள் உளது எனில் உளதாய்த் தோன்றுதலின் 'உளதென்றுரைக்கின் உளதேயாம்' என்றும் கூறினார்.

> **'உளனெனில் உளன் அவன் உருவமிவ் வுருவுகள்**
> **உளனலனெனின் அவன் அருவமிவ் வுருவுகள்**
> **உளனென இலனென இவைகுண முடைமையின்**
> **உளனிரு தகைமையோடு ஒழிவிலன் பரந்தே'**[50]

என்னும் நம்மாழ்வார் பாசுரம் கம்பர் பாடலோடு ஒப்புநோக்கத்தக்கது.

இதனால், கம்பரின் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் நம்மாழ்வார் பாடல்களில் பொதிந்து கிடந்து, பின்னர் இராமானுசரால் வகுத்துக் காட்டப்பட்டுள்ள விசிட்டாதுவைதக் கருத்துக்கள் விளக்கமுறுகின்றன என்பது போதரும்.

தத்துவத் திரையங்களாகிய சித்து, அசித்து, ஈசுவரன் ஆகியன பற்றித் தம் நூலில் பலவிடங்களில் கம்பர் விரித்துரைக்கிறார்.

**சித்து – பரமாத்மா**

யுத்த காண்டத்தில் வீடணன் ஒற்றரைக் கண்டுபிடித்த செய்தி இடம் பெறுகிறது. இங்கு வீடணனைக் கம்பர் ஒரு யோகிபோல்வான் என்றார்.

விபு என்று சொல்லத்தக்க வகையில் எங்கும் வியாபித்துள்ளவன் பரமான்மா. அணுவாயிருக்கும் தன்மையது சீவான்மா. இதுவே சித்து

எனப்படும். இந்த இரண்டையும் ஒருங்கே காணவல்ல யோகி என்று சொல்லுவதற்கு ஏற்றவனானான் வீடணன். இதனைக் கம்பர்,

> **'பெருமையுஞ் சிறுமைதானும் முற்றுறு பெற்றியாற்ற**
> **அருமை யினகன்று நீண்ட விஞ்சையுளடக்கித் தாமும்**
> **உருவமுந் தெரியாவண்ணம் ஒளித்தனர் குறையுமாயத்து**
> **இருவரை யொருங்கு காணும் யோகியுமென்ன லானான்'**[51]

**'ஒவ்வோர் உடலிலும் சீவான்மா, பரமான்மா என்ற இருவர் உளர். உடம்பினுள்ளே இருந்தும் இவ்விருவர் வடிவம் ஊனக் கண்ணிற்குத் தோன்றுவதில்லை. வேதாந்தங்களில் கூறப்பட்டுள்ள தகவித்யை முதலிய வித்யைகளைக் கொண்டு உபாசனை செய்தால் இவ்விருவரையும் ஞானத்துக்கு இலக்காக்கலாம். அவ்வண்ணமுள்ள சீவான்மா, பரமான்மாக்களை யோகியர் தமது யோக பலத்தால் காணவல்லவர்'**[52] என்பர்.

### அசித்து - சுத்த சத்துவம்

அசித்தில் சுத்த சத்துவம் என்பது ஒன்று. சுத்த சத்துவமாவது பரமபதம். அண்டத்தைக் கோயிலாகவும், திக்குகளின் எல்லையைச் சுவராகவும், ஒன்றன்மேல் ஒன்றாயமைந்துள்ள கீழேழ் உலகம், மேலேழ் உலகம் என்ற பதினான்கு உலகங்களையும் அக்கோயிலுக்கு நிலைகளாகவும், மூன்று மண்டலங்களையும் அதற்கு விளக்குகளாக உருவகப்படுத்தி எல்ல உலகங்களுக்குமேலுள்ள பரமபதத்தில் திருமாமணி மண்டபத்தில் ஆதிசேடன் மீதுள்ள தருமாதி பீடத்தின் மேல் பன்னிரண்டு இதழ்களையுடைய தாமரை மலரின் கொட்டையிலே எம்பெருமான் எழுந்தருளியிருப்பார்.

இப்பரமபதத்தின் தன்மை கவந்தன் துதியில் இடம்பெற்றுள்ளது.

> **'எண்டிசையும் திண்சுவரா ஏழேழ்நிலை வகுத்த**
> **அண்டப் பெருங்கோயிற் கெல்லா மழகுடைய**
> **மண்டலங்கள் மூன்றின்மேல் என்றும் மலராத**
> **புண்டரிக மொட்டின் பொகுட்டே புரையம்மா'**[53]

என்பது கவந்தன் துதியாக இடம்பெறும் பாடல்.

மருந்து மலைப் படலத்தில், பரமபதத்தில் திருமால் இருக்கும் இருப்பினைக் கண்டு அனுமன் வணங்கியதாக உள்ளது.

'தருவனமொன்றி வானோர் தலைத்தலை மயங்கித்தாழ
பொருவரு முனிவர் வேதம் புகழ்ந்துரை ஓதைபொங்க
மருவிழி துளப மௌலி மாநிலக் கிழத்தியோடும்
திருவொடு மிருந்த மூலத்தேவையும் வணக்கம் செய்தான்'[54]

**மிச்சிர தத்துவம்**

மிச்சிர தத்துவமாவது சாத்துவீகம், இராசசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களையுடையது. இருபத்து நான்கு தத்துவங்களோடு ஆன்மாவையும் சேர்த்து, தத்துவங்கள் 25 எனக் கூறுவது. இச்சாங்கியத்தினை இரணியனுக்குப் பிரகலாதன் அறிவுறுத்தினான்.

'சாங்கியம் யோகமென்று இரண்டு தன்மைய
வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன
ஆங்கவை உணர்ந்தவர்க் கன்றியன்னவன்
ஓங்கிய தனிநிலை உணரற் பாலதோ'[55]

என்பது பிரகலாதன் கூற்று.

பிரமன் இராமனுக்கு அவன் சொரூபம் உணர்த்தும் போது இருபத்தைந்தான தத்துவங்களை ஆராய்ந்துணர்ந்தால் இவ் இருபத்தைந்துக்கு மேல் இருபத்தாறாவது தத்துவமான பரம்பொருளாக நீ உள்ளாய் என்றான். இதனை,

'ஐயஞ்சாகிய தத்துவம் தெரிந்தறிந் தவற்றின்
மொய்யெஞ்சாவகை மேல்நின்ற நினக்குமேல்யாதும்
பொய்யஞ்சாவில என்னுமீ தருமறை புகலும்
வையஞ் சான்றினிச் சான்றுக்குச் சான்றில்லை வழக்கால்'[56]

என்னும் பாடல் உணர்த்தும்.

**ஈசுவரன்**

பிரமன் ஈசுவரன் தன்மையை விளக்கினான். இறைவனே இராமனாக வந்தானாதலின் பிரமன் இராமனிடம் அவனது சொரூபம் உணர்த்தினான். பிரமன் இராமனை நோக்கி, உனக்குத் தோற்றமில்லை. மூலப்பிரகிருதி உன்னிடத்திருந்து வெளிப்பட்டது. மற்ற எல்லாத் தத்துவங்களும் பஞ்சபூதங்களும் சங்கார காலத்தில் பிரிபட்டு இலயித்து அழிவடையும். நீ எப்போதும் அழியாய் என்றான்.

**'தோற்றமென்ப தொன்றுனக்கிலை நின்கணே தோற்றும்
ஆற்றல் சால்முதல் பகுதிமற்று அதனுளாம் பண்பால்
காற்றை முன்னுடைப் பூதங்களைச் சென்றுகடைக்கால்
வீற்று வீற்றுற்று வீவுறு நீயென்றும் விளியாய்'[57]**

என்பது பிரமன் கூற்று.

இதில் மூலப்பகுதி இறைவனிடத்தே தோன்றி, அம்மூலப்பகுதி பல பொருள்களாக விரிவடைந்து பின் அது இறைவனிடத்தே சென்று ஒடுங்கும் என்னும் விசிட்டாதுவைதக் கருத்து அமைந்துள்ளது.

விராதன் துதியில் இறைவனின் பல்வேறு இயல்புகள் அமைந்துள்ளமை நோக்கத்தகும்.

**'வேதங்கள் அறைகின்ற வுலகங்கள் விரிந்தனநின்
பாதங்களிவை யென்னிற் படிவங்கள் எப்படியோ
ஓதங்கொள் கடலன்றி ஒன்றினோ டொன்றொவ்வாப்
பூதங்கள் தொறுமுறைந்தால் அவைநின்னைப் பொறுக்குமோ'[58]**

என்பது விராதன் இராமனை நோக்கிச் செய்த துதியாம்.

இப்பாடலில் வேதங்கள் அறைகின்ற என்பது வேதங்களால் பேசப்படுபவன் இறைவன் என்பதும், உலகெங்கும் விரிந்தன நின் பாதங்கள் என்பது இறைவனின் வியாபகத் தன்மையினையும், ஓதங்கொள் கடலன்றி என்பது பாற்கடல் துயின்ற வியூக நிலையையும், பூதங்கள் தொறும் உறைதலாவது அனைத்திலும் அந்தர்யாமியாதலும், அவை நின்னைப் பொறுக்குமோ என்பது அனைத்துக்கும் ஆதாரமாதலும் கூறப்பட்டது. இதில் விசிட்டாதுவைதம் விளக்கும் ஈசுவரன் தன்மைகள் இடம்பெற்றுள்ளமை அறியத்தகும்.

விராதன் இராமனை நோக்கி, இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிதுகந்தோய்[59] என்றான். இது இறைவன் அவதாரம் எடுத்தலாகிய விபவம் என்பதாகும். மேலும் விராதன்,

**'பின்னமாய் ஒன்றாதல் பிரிந்தேயோ பிரியாதோ
என்ன மாயமிவை ஏனமாய் மண்ணிடந்தாய்'[60]**

என்றான்.

இதில், இறைவன் சேதந, அசேதநப் பொருள்களினின்று வேறாகியும் ஒன்றாகியும் இருத்தல் அவற்றைப் பிரிந்தோ? பிரியாமலோ? என்றான்.

விராதன் இதனால் விசிட்டாதுவைத சித்தாந்தத்தை வெளியிட்டபடி என்றார் வை.மு.கோ.

ஏனமாய் மண்ணிடந்தாய் என்றது இறைவன் எடுத்த வராக அவதாரத்தைக் குறிப்பதாகும்.

இந்திரன் துதியில் இறைவன் பொருள்களிற் கலந்தும், கலவாமலும் நிற்பவன் என்பதை 'தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற சுடரே'[62] என்றான்.

இறைவனே இராமனாக அவதாரமெடுத்து வந்து சேவடிகள் நோவ இப்பூவுலகில் நடந்தது அடியார்களாய்க் காப்பதற்காகவே என்பதை 'சிலை ஏந்திவந் தெம்மைச் சேவடிகள் நோவக் காவா தொழியின் பழிபெரிதோ?'[63] என்றான்.

**கவந்தன் துதி**

> **'ஈன்றவனோ எல்லைதீர் நல்லறத்தின்**
> **சான்றவனோ தேவர் தவத்தின் தனிப்பயனோ**
> **மூன்று கவடாய்முளைத்தெழுந்த மூலமோ**
> **தோன்றி இருவினையேன் சாபத்திடர் துடைத்தாய்'[64]**

இப்பாடலில் இறைவன் உலகப் படைப்பிற்குக் காரணமான தன்மையினையும், சிவன், திருமால், பிரமன் என்று மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம் என்பதையும் குறிப்பிட்டான். **'மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம்'** என்பது திருமாலின் வியூக நிலையைக் குறிப்பதாகும்.

அனைத்தும் இறைவனிடத்தே தோன்றியமையின் அவனுக்கு மூலம் யாதுமில்லை என்பதை,

> **'மூலமே இல்லாத முதல்வனே'[65]**

என்றான்.

மேலும் கவந்தன்,

> **'காண்பார்க்கும் காணப்படு பொருட்கும் கண்ணாகி**
> **பூண்பாய் போல் நிற்றியால் யாதொன்றும் பூணாதாய்'[66]**

என்றான்.

இதில் இறைவன் இயங்கு திணைப் பொருட்கள், நிலைத்திணைப் பொருட்கள் ஆகிய எல்லாப் பொருள்களிடத்தும் எள்ளினுள் எண்ணெய்போல் உள்ளே பொருந்தியிருந்தும், அவற்றின் சம்பந்தமான இருவினைகள் தொடரப்பெறாதவன் என்ற கருத்தினை உடையது.

**'இந்த அண்டங்கள் நீர்க்குமிழ்கள் போல் இறைவனிடத்துத் தோன்றி, அவனிடத்தே சென்று ஒடுங்குகின்றன'**[67] என்றான் கவந்தன்.

### வாலி

இராமனின் அம்பை உடம்பில் ஏற்ற வாலிஞானம் வரப்பெற்றான். இராமனைத் திருமால் என உணர்ந்தான். உயர்திணைப் பொருளாயும் அஃறிணைப் பொருளாயும், பருவங்களாயும் அவற்றின் பயனுமாயும், பூவும் மணமும்போல இருப்பவன் இறைவன் என்றான் வாலி.

> **'யாவரும் எவையுமாய் இருதுவும் பயனுமாய்**
> **பூவும் நல் வெறியுமொத்து ஒருவரும் பொதுமையாய்'**[68]

என்பது வாலி இராமனை நோக்கிக் கூறியது.

### திருமந்திரம்

விசிட்டாதுவைதிகள் சிறப்பாகப் போற்றும் திருமந்திரம் எட்டு எழுத்துக்களைக் கொண்ட **'ஓம் நமோ நாராயணாய'** என்பது முன்னர் விளக்கப்பட்டது.

திருமந்திரம் பற்றிக் குரு பரம்பரையில் கூறும் செய்தியாவது : **'திருமந்திரமும் அதன் பொருளும் வடமொழியில் இருந்தன. ஓர் ஆசாரியன் தக்க காலத்தில், தக்க சீடனைத் தேர்ந்தெடுத்து அவற்றை அவனுக்கு உபதேசிப்பது மரபு. ஆளவந்தார் என்னும் ஆசாரியர் இராமானுசரைத் தேர்ந்தெடுத்தார் எனினும், இராமானுசர் அவரிடம் வந்து அதைப் பெற்றுக் கொள்வதற்குள் ஆசாரியர் வீடுபேறு எய்தினார். ஆளவந்தார், திருக்கோட்டியூர் நம்பி என்ற ஆசாரியரிடம் மந்திரத்தையும் அதன் பொருளையும் இராமானுசருக்கு அருளுமாறு ஒப்பளித்திருந்தார். அதை அறிந்த இராமனுசர் பன்முறை நம்பிகளிடம் நடந்து அம்மரபைக் காப்பதாகச் சூளுறவு பூண்டு அவற்றைப் பெற்றார். பெற்றதும் அவ்வூர்த் திருவிழாவில் கூடியிருந்த மக்கள் அனைவர்க்கும் கோபுரத்தில் ஏறி நின்று வெளியிட்டார். கடும் கோபங்கொண்ட நம்பிகள் அவரை அழைத்துக் கேட்ப, இராமனுசர் 'சூள் பொய்த்ததற்காக நான் நரகம் புகினும் கேட்ட அனைவரும் வீடு எய்துவரன்றோ?' என உரைக்க, நம்பிகள் உவந்து அவருக்கு 'எம்பெருமானார்' என்ற பட்டம் சூட்டினார்'**[69] என்பர்.

**பிரணவம்**

'ஓம்' என்பது பிரணவம். ஓங்காரம் பிரகலாதன் கூற்றாக **'ஓம் என்னும் ஓர் எழுத்து அதன் உள் உயிர் ஆம் அவன்'**[70] என அமைந்துள்ளது.

பிரமன், இராமன் ஓங்காரப் பொருளாய் உள்ளான் என்றான். அவன் இராமனை நோக்கி,

> **'ஓங்காரப் பொருள் தேருவோர் தாம்உன்னை உணர்வோர்**
> **ஓங்காரப் பொருள் என்று உணர்ந்து இருவினை உகுப்போர்'**[71]

எனக் கூறினான்.

**'வால்மீகத்தின் தொடக்கத்தில் நூலுக்குப் புறம்பாகப் பிரணவம் உள்ளது. நூலுள் இல்லை. அதன் பெருமையும் கூறப்படவில்லை என்பர்.'**[72]

பிரணவத்தின் விரிவாக அமைந்தது திருமந்திரம். நாராயண நாமத்தின் பெருமையைத் தெரிவிக்கக் கம்பர் வகுத்துக்கொண்டது இரணிய வதைப்படலம்.

எட்டெழுத்து மந்திரத்தின் சிறப்பினைப் பிரகலாதன் இரணியனுக்குச் சொன்னான்.

> **'காமம் யாவையும் தருவதும் அப்பதங் கடந்தால்**
> **சேம வீடுறச் செய்வதும் செந்தழல் முகத்த**
> **ஓம வேள்வியின் உறுபதம் உய்ப்பதும் ஒருவன்**
> **நாமமன்னது கேள் நமோ நாராயணாய'**[73]

என்பது பிரகலாதன் கூறியது. மேலும் எல்லா உலகங்களிலுமுள்ள சராசரப் பொருள்கள் அனைத்தின் உணர்ச்சியும் செல்லுதற்கு இடமாவது திருவெட்டெழுத்து என்பதை,

> **மண்ணினின்று மேல் மலரயன் உலகுறவாழும்**
> **எண்ணில் பூதங்கள் நிற்பன திரிவன இவற்றின்**
> **உண்ணிறைந்துள கரணத்தினூங்குள வுணர்வும்**
> **எண்ணுகின்ற தில் எட்டெழுத்தே பிறிதில்லை**[74]

எனப் பிரகலாதன் வலியுறுத்தினான்.

இறைவன் இயல்பினைப் பிரகலாதன் விரித்துக் கூறுகிறான். இக்கூற்றுக்களில் விசிட்டாதுவைதக் கொள்கைகள் விரவிக் கிடப்பதை

அறியமுடியும். அப்பாடல்கள் வருமாறு :

> **'தன்னுளே உலகங்க ளெவையும் தந்தவை**
> **தன்னுளே நின்று தானவற்றுள் தங்குவான்**
> **பின்னிலன் முன்னிலன் ஒருவன் பேச்சிலன்**
> **தொன்னிலை யொருவராற் றுணியற் பாலதோ'**[75]

> **'உலகு தந்தானும் பல்வேறு உயிர்கள் தந்தானும்**
> **உலைவிலா உயிர்கள் தோறும் அங்கங்கே உறைகின்றானும்**
> **மலரினில் மணமும் எள்ளில் எண்ணெயும் போலவெங்கும்**
> **அலகில் பல்பொருளும் பற்றி முற்றிய அரிகாண் அத்தா'**[76]

> **'மூன்றவன் குணங்கள் செய்கை மூன்றவன் உருவமூன்று**
> **மூன்றுகண் சுடர்கொள் சோதி மூன்றவனுலகம் மூன்று**
> **தோன்றலும் இடையும் ஈறும் தொடங்கிய பொருள்கட்கெல்லாம்**
> **சான்றவனிதுவே வேதம் முடிவிது சரதமென்றான்'**[77]

> **'சாணினு முளனோர் தன்மை யணுவினைச் சதகூறிட்ட**
> **கோணினுமுளன் மாமேருக் குன்றினு முளன் இந்நின்ற**
> **தூணினு முளன் நீசொன்ன சொல்லிலு முளன் இத்தன்மை**
> **காணுதி விரைவி லென்றான்'**[78]

## சிலம்பி சித்தாந்தம்

விசிட்டாதுவைதக் கருத்தினைச் சிலந்திப் பூச்சியின் இயல்பினைக் காட்டி விளக்குவர். இதைச் சிலம்பி சித்தாந்தம் எனலாம்.

கம்பரும் இதனை, சிலந்திப் பூச்சி தன் உருவத்திற்கு விகாரம் சிறிதும் இல்லாமலே நூலை உண்டாக்கி அதில் தங்கிப் பின்னர் உட்கொள்வது போல இறைவன் தன் சுயரூபத்திற்கு விகாரமில்லாமல் அண்டங்களைப் படைத்து அவற்றுள்ளே தங்கி மீண்டும் அவற்றை விழுங்குகிறான் என்றார்.

இதைத் தேவர்கள் கூற்றாக,

> **'அண்டம் பலவும் அனைத்துயிரும் அகத்தும் புறத்தும் உளவாக்கி**
> **உண்டும் உமிழ்ந்தும் அளந்திடந்தும் உள்ளும்புறத்தும் உளையாகிக்**
> **கொண்டு சிலம்பிதன் வாயிற் கூர்நூல் இயையக் கூடியற்றிப்**
> **பண்டுமின்றும் அமைகின்ற படியை ஒருவாய் பரமேட்டீ'**[79]

எனக் கம்பர் அமைத்தார்.

இதையே திருவரங்கத்துமாலை,

> ***சின்னூல் பலவாயிழைத்துச் சிலந்திபின்னும்***
> ***அந்நூ லருந்தி விடுவதுபோல் அரங்கனண்டம்***
> ***பன்னூறு கோடி படைத்தவை யாவும் பழம்படியே***
> ***மன்னூ ழி தன்னில் விழுங்குவர் போதமன மகிழ்ந்தே***[80]

எனக் குறிப்பிடுகிறது.

தன் இயல்புக்கு விகாரமில்லாமலே படைத்தலும் படைத்தவற்றை உட்கொள்ளுதலும் இயலுமா? பரம்பொருளின் ஆக்கல், அழித்தல்செயல்களில் தோன்றும் ஐயத்தைப் போக்கச் சிலந்தி இயல்பு கூறப்பட்டுள்ளது எனலாம்.

**கருடன் துதி**

நாகபாசப் படலத்தில் கருடன் இராமனைத் துதித்தான். அத்துதியில்,

> *'மூவாத நாளு முலகேழொ டேழுமர சாளு மேன்மை முதல்வா*
> *மேவாத இன்பம் அவை மேவி மேவ நெடுவீடு காட்ட முடியாய்'*[81]

என நலமந்தமில்லதோர் நாட்டில் நித்திய முத்தர்க்குப் போக்கியனாய்க் கொண்டு வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செலுத்தும் பரத்துவத்தின் நிலை கூறப்பட்டது.

எழுவாயெவர்க்கு முதலாகி யீறொடு இடையாகி எங்கும் உளையாய் என்றான் கருடன். இதில் முதலாகி இடையாகி, ஈறாகி என்பன வியூக நிலைகளாகிய பிரத்தியும்நன், அநிருத்தன், சங்கர்ஷணன் ஆகியோரைக் குறிப்பிடுவதாகும்[82] என்பர்.

**ஈசுவரன் குணங்கள் - கிருபை**

ஈசுவரன் எண்ணிலடங்காக் குணங்களின் இருப்பிடமானவன். அவற்றுள் கிருபை என்பது ஒன்று. கிருபையாவது பிறர் துக்கம் காணுமிடத்து ஐயோ என்று இரங்கும் தன்மை. முடிசூட்டிக்கொள்ள வேண்டிய பரதன் சடைமுடி தரித்து நகை இழந்து சோகவடிவினனாகக் காணப்பட்டான். இதைக் கண்ட இராமன் வருந்தியதை எண்ணிச் சீதை கவன்றாள். இதைக் கம்பர்,

**'உரங்கொள்தேமலர்ச் சென்னி உரிமைசால்
வரங்கொள் பொன்முடி தம்பி வனைந்திலன்
திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்கு
இரங்கி ஏங்கிய தெண்ணி இரங்குவாள்'**[83]

எனக் குறிப்பிட்டார்.

### சௌசீல்யம்

வேட்டுவச் சாதியில் பிறந்த குகனை, **'ஏழை, ஏதலன், கீழ்மகன் என்னாது'**[84] இராமன் தன் தம்பியாக ஏற்றுக்கொண்டான். அவனிடம் **'யாதினும் இனிய நண்ப எம்மொடு ஈண்டு இருத்தி'**[85] என அன்பு பெருகக் கூறினான். இது இராமனின் சௌசீல்ய குணத்திற்குச் சான்றாக அமைகிறது.

### அஸரண்ய சரணத்துவம்

'தமக்கு ஒரு பற்றுக்கோடும் இல்லாமலும் தாம் எளியர் எனச் சொல்லியும் என்னை அடைந்தோரின் தீமையைத் தீர்ப்பதே என் கடமையாகக் கொண்டுள்ளேன்' என்றான் இராமன். இது அவனிடம் அமைந்த அஸரண்ய சரணத்துவ குணமாகும்.

**'ஏதிலாரும் எளிய ரென்றாரையும்
தீது தீர்ப்பதென் சிந்தைக் கருத்தரோ'**[86]

என்பது இராமன் கூற்று.

### சௌலப்பியம்

பரம்பொருள் இராமனாகப் பிறந்து பிறர் துயர் தீர்க்கத் தான் பல துன்பங்களை ஏற்றான். பிறர் பொருட்டுத் தான் எளியோனாதலைச் சௌலப்பியம் என்பர். இதை இந்திரன் **'சேவடிகள் நோவக் காவாதொழியின் பழி பெரிதோ?'**[87] என்றான்.

### வாத்சல்யம்

தன்னை அடைந்த சேதனர்கள்பால் அன்பும் ஆதரமும் பெருகக் கொண்டு விளங்கல் வாத்சல்யம் எனப்படும். சுக்கிரீவன் இராவணனோடு போர் செய்து அவன் மகுடத்தினைப் பறித்து வந்தான். அதை இராமன் திருவடிகளில் வைத்தான். அவன் உடம்பு முழுதும் புண்பட்டு இரத்தம் கசிந்தது. இராமன் சுக்கிரீவனைத் தழுவி இராவணனைத் தீண்டிய இழிவு நீங்குமாறு கண்ணீரினால் நீராட்டினான். இதனை,

'அன்பனை அமரப்புல்லி அஞ்சன மாட்டிவிட்டான்
தன்பெரு நயனமென்னுந் தாமரைத் தடத்துநீரால்'[88]

என்றார்.

## புருஷகாரம்

எம்பெருமான் இரட்சிக்கும்போது பிராட்டி சந்நிதி இருக்கவேண்டும். ஈசுவரனுக்குச் சேதநரிடம் கருணை பிறக்குமாறு புருஷகாரம் (தகவுரை) செய்யும் பிராட்டியார் அருகில் இருக்க வேண்டும். அப்போது தான் இறைவனின் அருள் பாலிப்பு இடையீடின்றி நடைபெறும். இதைச் சீதை பிரிந்ததாலே இராமன் திகைத்துத் தன்மீது அம்பினை எய்ததாக வாலி குறை கூறினான். இங்குப் புருஷகாரம் செய்யப் பிராட்டி இன்மையால் இராமன் தவறிழைத்தான் என்பது வாலி கூற்று.

'ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை'[89]

என்றான் வாலி.

## பிரபத்தி

இறைவனின் ஆற்றலில் முழு நம்பிக்கை வைத்து எந்தவித நிபந்தனையும் இன்றிச் சரணடைவதே பிரபத்தி நெறியாகும். இராமனைச் சரணடைந்தோர் தண்டகவன முனிவர்கள், சுக்கிரீவன், காகாசுரன், வீடணன் ஆகியோராவர்.

## தண்டகவன முனிவர்கள்

இராமனைக் கண்ட தண்டகவன முனிவர்கள் மகிழ்ந்தனர். அவன் வருகை தீப்பற்றி எரியும் காட்டில் நீர்ப்பெருக்கு வருவதால் பிழைத்துச் செழிக்கின்ற மரங்கள் போன்ற உணர்வினை அவர்களுக்குத் தந்தது.[90]

நெருப்புப் பற்றி எரியும் காட்டில் பிரிந்து சென்ற தாய்ப் பசுவைக் கண்ட கன்று போலாயினர்.[91]

இராமன் வருகையால், அரக்கரெனும் கடலில் ஆழ்கின்ற அவர்கள் ஒரு மரக்கலம் பெற்றது போல் மகிழ்ந்தார்கள்.[92]

அம்முனிவர்கள் தங்கட்கு அரக்கரால் நேர்ந்த துன்பங்களை எடுத்துக்கூறி இராமனைச் சரணடைந்தனர். இதனை,

'உருளுடை நேமியால் உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ போக்கிலா
இருளிடை வைகினேம் இரவி தோன்றினாய்
அருளுடை வீரநின் அபயம் யாமென்றார்'[93]

என்ற பாடல் உணர்த்தும்.

முனிவர்கள் அபயம் வேண்டியதற்கு விடையாக இராமன், தான் செய்த புண்ணியத்தின் பயனாக வனம் போந்ததாகக் குறிப்பிட்டான். தான் அரக்கரின் வலியினை ஒடுக்கவில்லையெனில் தானெடுத்த பிறவியினால் பயனில்லை என்பதை,

'அறந்தவா நெறி அந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலை யேனெனில்
இறந்து போகினு நன்றிது வல்லது
பிறந்தி யான்பெறும் பேறென்ப தியாவதோ'[94]

எனக் குறிப்பிட்டான்.

**சுக்கிரீவன்**

அனுமன் சுக்கிரீவனை இராமனுக்கு அறிமுகம் செய்தான். தன் மனைவியை அபகரித்துக் கொண்டு தன்னையும் துரத்தியடிக்கத் தான் இரலயங் குன்றில் தங்கி உய்ந்ததாகச் சொல்லி இராமனைச் சரண் புகுந்தான்.

'முரணுடைத் தடக்கை ஓச்சி முன்னவன் பின்வந்தோனை
இரணிலைப் புறத்தின் காறும் உலகெங்கும் தொடர இக்குன்று
அரணுடைத் தாகிஉய்ந்தேன் ஆருயிர் துறக்கலாற்றேன்
சரணுனைப் புகுந்தேன் என்னைத் தாங்குதல் கருமம் என்றான்'[95]

சுக்கிரீவனை இராமன் தன் இன்னுயிர்த் துணைவனாக ஏற்றுக்கொண்டான்.[96]

**காகாசுரன்**

காகாசுரன் இராமனைச் சரணடைந்த செய்தியைக் கம்பர் விரிவாக விளக்கவில்லை. அசோகவனத்தில் அனுமனிடம் சீதை கூறியதாக இடம்பெறும் பெரியாழ்வாரின் பாசுரத்தில் இச்செய்தி இடம்பெறுகிறது.

பெரியாழ்வார் அனுமனுக்கு அடையாள முரைத்ததாகக் கூறும்போது,

> **'சித்திர கூடத்திருப்ப சிறுகாக்கை முலைதீண்ட**
> **அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி**
> **வித்தகனே இராமாவோ நின்னபயம் என்றழைப்ப**
> **அத்தரமே அதன்கண்ணை அறுத்ததுமோர் அடையாளம்'** [97]

என்றார்.

அசோகவனத்திருந்த சீதை, சயந்தன் என்னும் காகாசுரன் இராமனைச் சரணடைந்ததையும், அவன் ஒரு கண்ணை மட்டும் அம்பினால் எய்தமையையும் மனத்தால் எண்ணி இராமனைக் கொண்டாடினாள்.

> **'ஏக வாளியால் இந்திரன் செம்மல்மேல்**
> **போக ஏவியது கண் பொடித்தநாள்**
> **காக முற்றுமோர் கண்ணில வாக்கிய**
> **வேகவென்றியைத் தன்றலை மேற்கொள்வாள்'** [98]

என்பது காகாசுரன் பற்றிய கம்பரின் பாடல்.

**வீடணன்**

இலங்கையிலுள்ள அசோகவனத்தில் சீதை உள்ளாள் என அனுமன் மூலம் அறிந்த இராமன் வானரசேனையுடன் கடற்கரை வந்தான். படைகள் வந்துள்ளமையை அறிந்த இராவணன் தன் மந்திரிமாருடன் ஆலோசனை நடத்தினான். அமைச்சரும் மற்றையோரும் தங்கள் கருத்தினைத் தெரிவித்தனர்.

அவ்வவையில் வீடணன், **'தன்னின் முன்னிய பொருளிலா ஒரு தனித் தலைவனே'** [99] மானிடனாக வந்துள்ளான் எனக் கூறினான். ஆணவத்தால் பரம்பொருளை அவமதித்த இரணியன் வரலாற்றை இராவணனிடம் கூறினான்.

இராவணன் வீடணன் மீது சினங்கொண்டு **'விரைவில் என்னை விட்டுப்போ; என் கண் முன் நிற்பாயானால் இறந்துபடுவாய்'** [100] என்றான்.

அனலன் முதலிய நால்வர் உடன்வர வானரசேனையுடன் வீடணன் இராமனிருந்த கடற்கரையை அடைந்தான். தாம் செய்யத்தக்கது குறித்து மந்திரிமாரை வினவ,

> **'தாழ்ச்சியில் பொருள் தரும் தருமமூர்த்தியைக்**
> **காட்சியே இனிக்கடன்'** [101]

என்றனர். மேலும்,

**'எல்லையில் பெருங்குணத் திராமன் தாளிணைப்
புல்லுதும் புல்லிஇப் பிறவி போக்குவோம்'**[102]

என்றனர்.

வீடணன் இராமன் அருகில் வந்து,

**'எந்தையே இராகவ சரணம்'**[103]

என்றான். சரணம் அடைய வந்தார் யாவரென இராமன் வினவினான். இரு வானர வீரர் வீடணனை நெருங்கி உண்மையறிந்து, **'இராமனைச் சரணடைய வீடணன் வந்துள்ளான்'** என்றனர்.

தன்னை அண்டிவந்த வீடணனையும் மற்றையோரையும் சேர்ப்பதா தவிர்ப்பதா என இராமன் வினவச் சுக்கிரீவன் முதலானோர் வீடணனைத் தவிர்த்தலே நன்றென்றனர். ஆயின் அனுமன், **'இவன் வரவு நல்வரவே என உணர்ந்தேன். வேதநூல் எனத் தகைய திருவுளத்தின் குறிப்பறியேன்'**[104] என்றான். இராமன் அனுமனைப் பாராட்டினான். அடைக்கலம் ஏற்பதன் சிறப்பினை,

**உடைந்தவர்க் குதவானாயின் உள்ளதொன்று ஈயானாயின்
அடைந்தவர்க் கருளானாயின் அருளென்னாம் ஆண்மை என்னாம்**[105]

என்றான்.

சிபி புறாவுக்கு அடைக்கலம் தந்து காத்தது,[106] **'ஆதிமூலமே'** என அழைத்து அபயம் வேண்டிய யானைக்குத் திருமால் அருள் புரிந்தது[107], சிவன், தன்னைச் சரணடைந்த மார்க்கண்டேயனுக்காக எமனைக் காலால் உதைத்தது[108] ஆகியவற்றை எடுத்துக்கூறி **'வீடணனைக் கொணர்க'**[109] எனச் சுக்கிரீவனை அனுப்பினான்.

தன்னை அங்கீகரித்த இராமனை வீடணன் கொண்டாடி அவன்பால் வந்தான். இராமனைக் கண்ட வீடணன்,

**'கார்முகில் கமலம் பூத்ததன்றிவன் கண்ணன் கொல்லாம்'**[110]

எனத் தெளிந்தான். அவனது வரங்களின் வாரியன்ன தாளிணை[111] களில் வீழ்ந்தான்.

இராமன் வீடணனுக்கு இலங்கையரசுச் செல்வத்தை அளித்தான். அதன் அடையாளமாக அவனுக்கு முடிசூட்டுமாறு இலக்குவனிடம்

சொன்னான். அப்போது வீடணன் தான் அரக்கனாகிய இராவணன் தம்பியாகப் பிறந்த குற்றம் தீருமாறு பரதனுக்குக் கொடுத்த பாதுகைகளாகிய கிரீடத்தைத் தனக்கும் சூட்டுமாறு சொன்னான்.

**'இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி'**[112]

என்பது வீடணன் கூற்று. இராமன் வீடணனைத் தன் தம்பியருள் ஒருவனாக்கினான். வானவர் பூமழை பொழிந்தனர். பிரமதேவனும் அறக்கடவுளும் மகிழ்ந்தனர்.

திரிவிக்கிரமவதாரத்தில் பிரமனால் கழுவப்பட்ட நன்னீரே கங்கையாகப் பெருக்கெடுத்து உலகத்தாரின் பாவத்தைப் போக்கும் தன்மையது. அந்தத் திருவடியைத் தலையில் சூட்டிய வீடணன் பெருமை மகத்தானது[113] என்பர்.

> வீடணன் சராணகதியின் சிறப்பை மு. ராகவையங்கார் பின்வருமாறு விளக்குகிறார். "ஸ்ரீ ராமபிரானது நற்குணக் கடலிலே ஆடி, அவனது பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகிக் களித்த கம்பர், தான் அனுபவித்த அப்பிரானது ஆனந்த கல்யாண குணங்களில் அவனது அளவிலாக் கருணைத் திறத்தைப் பலபடப் பாராட்டுகிறார். அப்பெருமானுக்குக் கருணாகரன் என்ற திருநாமத்தை முன்னோரிட்டு வழங்கியதும் இது பற்றியேயாம்.
>
> > 'இலங்கையெறிந்த கருணாகரன்' (செயங்கொண்டார்)
> > கருணையங் கடலில் கிடந்தனன் கருங்கடல்
> > நோக்கி (கம்பர்)
> > **கடுமையார் கானகத்துக் கருணையார் கலியேக (கம்பர்)**
>
> **எனக் காண்க. இத்தகைய கருணை ஸ்ரீ இராமபிரானிடமிருந்து வெளிப்பட்ட சந்தர்ப்பங்கள் எத்தனையோ உண்டு. அவற்றுளெல்லாம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது ஸ்ரீவிபீஷண சரணாகதியேயாகும். இக்கதாபாகம் போல் அப்பெருமானது கருணாப் பிரவாகம் பெருக்கெடுத்தோடிய இடம் வேறில்லை என்றே கொள்ளலாம். இச்சிறப்புப் பற்றியே 'சரணாகதி சாஸ்திரம்' என்று ஸ்ரீமத் ராமாயணமும் புகழ்பெறுவதாயிற்று. தண்டகாரண்ய முனிவர்களுக்கும் காகாசுரனுக்கும் சுக்கிரீவனுக்கும் இராமபிரானளித்த**

அபயங்களைக் காட்டிலும் சத்துரு பக்ஷத்திலிருந்து வந்த இந்த விபீஷணனிடம் அப்பெருமான் காட்டிய கருணைத் திறத்தில் சரணாகதி லக்ஷணம் பூர்த்தி பெற்று விளங்குகிறது. தர்மாத்மாவான விபீஷணன் சீதாப் பிராட்டி விஷயத்தில் தன் தமயன் புரிந்த தீச் செயல்களைச் சகியாமல் அப்பிராட்டியைச் சிறை நீக்குதற்குச் செய்த பெருமுயற்சிகளெல்லாம் வீணானதாலும், இராவணனால் பகைக்கப்பட்டவன் அவதாரமூர்த்தி என்பதை அறிந்தவன் ஆதலாலும் முடிவாகத் தான் கூறிய நன்மொழிகளை ஏற்காது (துவாம் துதிக் குலம்பாஸனம்) என்று தன்னை உதறித் தள்ளியவனாதலாலும், இராமபிரானது சீற்றத்தால் இலங்கை பாழாவதற்கு முன் அப்புருஷோத்தமனை அடைந்துய்வதே கருமம் என்பதை அவன் நன்கு உணரலாயினான். உணர்ந்து சிறிதும் தாழாமல் தன் மந்திரிகள் நால்வருடன் அக்கரை வந்து ஆகாசத்தில் நின்றபடியே,

> 'ஸர்வலோக சரண்யாய ராகவாய மஉறாத்மனே
> நிவே தயதமாம் க்ஷிப்ரம் வி।பீஷண முமஸ்த்தம்'

என்று சர்வலோக சரண்யனை அடைக்கலம் புகுந்தபடியை அப்பெருமானுக்கு அறிவுக்கும்படி வேண்டினன் என்பர்".[114]

இதனால், மற்றைய சரணாகதியினும் வீடணன் சரணாகதியே சிறப்பிடத்தைப் பெறுகின்றது என்பது நன்கு விளங்குகின்றது. இவ்வீடணன் அரசுப் பேற்றை மனத்தில் கொண்டு இராமனைச் சரணடைந்தான் எனக் கொள்ளமுடியாது. அவன் அருட்கடலாகிய இராமனைச் சரணடைந்ததன் நோக்கம் பிறவி அறுத்து வீடு பேறடைவதேயாகும். இக்கருத்தினைப் பின்வரும் மேற்கோள் விளக்குகிறது.

பிரபத்தியாகிய சரணாகதிக்குக் காலதேச நியமங்களேனும், ஜன்ம விருத்தி நியமங்களேனும் இல்லை என்ற முன்னோர் கருத்து இங்கு அறியத்தக்கது. இனி சரண்புக்க விபீஷணனது நோக்கம் இலங்கை அரசுப் பேறே என்ற கருத்தைப் பலவிடங்களில் குறிப்பிட்டுச் செல்வர் வான்மீகி பகவான். அம்முறையில் 'அருத்தியும்

அரசின் மேற்றே' என்று கம்பரும் கூறினாரேனும் இவர்க்கு அரசே அவர் விரும்பிய பேறென்பது உள்ளார்ந்த கருத்தன்று.

> 'எல்லையில் பெருங்குணத்து இராமன் தாளிணை
> புல்லுதும் புல்லி இப்பிறவி போக்குவோம்'
> 'என்புறக் குளிரும் நெஞ்சுருகு மேலவன்
> புன்புறப் பிறவியின் பகைஞன் போலுமால்'
> 'மறவினை நீக்கலில்லா மாயமும் மாயவாழ்க்கைப்
> பிறவியும் பெயர்த்தேன் பின்னு நரகினிற் பிழைப்பதானேன்'

என்ற விபீஷண வசனங்களால் பிறவி அறுத்துய்தலே அவன் நோக்கம் என்பதை நன்கு விளக்கிய கம்பர் அரசுப்பேறே அவனருத்தி என்ற கருத்தில் அத்தொடரை அமைத்திரார். .................... அரசுப் பேறென்பது வீட்டரசு எனக் கொள்ளலாம்.[115]

மேலும், வீடணன் இராமன் பாதுகைகளைக் கிரீடமாகத் தலையில் சூடிக் கொண்டமையாலும், அரசைப் பெறுவது அவன் நோக்கமாக இல்லை என்பது நன்கு புலப்படும்.

இராமனைச் சரணடைந்து உய்ந்தோர் வரலாறுகள் விளக்கப்பட்டன. இவ் இராமாயணம் சரணாகதிக் காப்பியம் என்ற சிறப்பினைப் பெறுவது எவ்வாறு என்பது ஆராயத்தக்கது.

> "இவ்விராமாயணம் சராணகதிக் காப்பியம் என்று கூறுதற்கேற்ப காண்டந்தோறும் சரணாகதி பேசப்படுகிறது பால காண்டத்தில் அரக்கரால் நேருந் துன்பத்தைத் தாங்கலாற்றாது தேவர்கள் திருப்பாற் கடலில் துயிலும் திருமாலைச் சரண்புக அப்பண்ணவன் 'வருந்தலை வஞ்சகர் தம் தலையறுத்து இடர் தணிப்பன்' என்று அபயமளித்தமை கூறப்பட்டது. அயோத்தியா காண்டத்தில் இராமன் தன்னை நீத்துக் கானகஞ் செல்வதையறிந்து இலக்குவன் அப்பிரானைக் குறையிரந்து உடன் சென்று தொண்டு புரிதலாகிய தன் விருப்பம் நிறைவேற்றப் பெற்றமையைக் கூறுதலான் சரணாகதி கூறப்பட்டது. ஆரணிய காண்டத்தில் இராமபிரான் தண்டகாரணியம் சென்றபோது அங்கு

> **உறைபவரான மகரிஷிகள் அரக்கரின் கொடுமையைத் தாங்க மாட்டாது 'அருளுடைய வீர : நின் அபயம் யாம்' என்று சரண்புக 'ஆரறத்தினோடன்றி நின்றாராவர் வேரறுப்பன் வெருமன்மின் நீர்' என்று அபயமளித்தமையும் கிட்கிந்தா காண்டத்தில் சுக்கிரீவன் சரண்புக 'உனக்கு நேர்பவற்றைத் தீர்ப்பேன்' என்று அபயமளித்ததையும், சுந்தர காண்டத்தில் காகாசுரனுக்கு அபயமளித்த செய்தியும், யுத்த காண்டத்தில் வீடணனது அடைக்கலமும் கூறப்பட்டன".[116]**

இவ்வாறு காண்டந்தோறும் சரணாகதியின் சிறப்பு பேசப்படுதலின் இக்காப்பியம் சரணாகதிக் காப்பியம் என்னும் சிறப்பினைப் பெறுகிறது.

## தொகுப்புரை

இவ்வியலில் விசிட்டாதுவைதக் கொள்கை விளக்கப்பட்டுள்ளது. இராமானுசர் வெளியிட்ட தத்துவங்கள் கம்பராமாயணத்தில் விரவிக் கிடக்கும் தன்மை ஆராயப்பட்டுள்ளது. நூலில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களிலும் விராதன், கவந்தன், கருடன் ஆகியோர் துதிகளிலும் இத்தத்துவம் இடம் பெற்றிருப்பது ஆராயப்பட்டுள்ளது. ஓம் நமோ நாராயணாய என்னும் எட்டெழுத்து மந்திரம் நூலில் சிறப்பித்துப் பேசப்படுகின்றமை விளக்கப்பட்டுள்ளது. ஈசுவரனின் பல்வேறு குணங்கள், இறைவனின் அவதாரமாகத் தோன்றிய இராமனிடம் பொருந்தியிருக்கும் இயல்பு சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. இறுதியாகக் காப்பிய மாந்தர்கள் காப்பியத் தலைவனிடம் சரணடைதல் சுட்டப்படுவதோடு, இக்காப்பியம் ஒரு சரணாகதிக் காப்பியம் எனவும் நிறுவப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. *லக்ஷ்மணன், கி.,* **இந்தியத் தத்துவ ஞானம்,** *ப.304.*
2. *மேலது, ப. 347.*
3. *சுப்பு ரெட்டியார், ந.,* **முத்தி நெறி,** *ப. 9.*
4. '...... Sri Ramanuja did not cut new ground as such, but only adhered to the path chalked out by the illustrious teachers of yore, like sages Bodhayana, Dramidacharya, Brahamandi, Guhadeva Charya etc. etc., 'Sri Bhashya' the glossary of Sri Ramanuja has been acclaimed even by the western philosphers to be the only one, running in close unison with the intentions of the Brahma Sutras. It also needs to be mentioned that Sri Ramanuja was largely inspired by the soul-slirring hymns of Saint Nammalvar and the philosphy expanded therein. - Sathyamoorthi Ayyangar, S., ***What is Visishtadvaita System of Philosophy?*** (pp. i - ii)
5. *வரதராஜுலு நாயுடு, நா., கம்பராமாயணத்தில் விசிட்டாதுவைதம்,* **காரைக்குடி கம்பன் விழா மலர்,** *1991, ப. 34.*
6. **பெரிய திருமொழி,** *தனியன் - 4.*
7. If letters I am the letter 'A', - Bahavad Gita, Chapter - X, Slogan - 33.
8. *சுப்பு ரெட்டியார், ந.,* **முத்தி நெறி,** *ப. 7.*
9. *மேலது, ப. 8.*
10. **திருவாய்மொழி,** *1.5.4.*
11. **தத்துவத்திரையம்,** *ஈஸ்வரப், 29.*
12. *சுப்பு ரெட்டியார், ந.,* **முத்தி நெறி,** *ப. 66.*
13. **பரிபாடல்** *- 3, அடி 81 - 82.*
14. **முதல் திருவந்தாதி** *44.*
15. **திருவாய்மொழி,** *6.9.5.*
16. **ஸ்ரீவசனபூஷணம்** *42.*
17. **திருவாய்மொழி,** *1.1.7*
18. **பரிபாடல்** *- 3, அடி 68.*
19. *அண்ணங்கராசாரியர், திருவாய்மொழி, முதற்பத்து,* **திவ்யார்த்த தீபிகை,** *ப. 30.*
20. **திருவாய்மொழி,** *9.6.4.*
21. **நற்றிணை,** *கடவுள் வாழ்த்து.*
22. *லக்ஷ்மணன், கி.,* **இந்தியத் தத்துவ ஞானம்,** *ப.343.*
23. **முதல் திருவந்தாதி,** *59.*
24. **பெரிய திருமொழி,** *1.6.9.*

25. **திருவாய்மொழி,** *5.9.11.*
26. *மேலது, 5.8.11.*
27. *மேலது, 5.7.10.*
28. **முமுட்சுப்படி,** *147.*
29. *சுப்பு ரெட்டியார், ந.,* **முத்தி நெறி,** *ப. 111.*
30. I *: 5 : 25.*
31. **கம்பராமாயணம்,** *த.சி.பா. 1.*
32. **ஸ்ரீ விஷ்ணு புராணம்,** *ப. 22*
33. *இராகவையங்கார், மு.,* **தெய்வப் புலவர் கம்பர்,** *ப. 112.*
34. **கம்பராமாயணம்,** *த.சி.பா. 2.*
35. *மேலது, 3.*
36. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *பாலகாண்டம் - 1, அ.ப. பதிப்பு, த.சி.பா.உரை, ப. 35.*
37. I *: 1 : 1.*
38. **திருவாய்மொழி,** *7.5.2.*
39. *மேலது, 1.1.7.*
40. II *: 1 : 1. வை.மு.கோ. விளக்கம்.*
41. III *: 1 : 1.*
42. **திருவாய்மொழி,** *9.6.5.*
43. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *ஆரணிய காண்டம் - 1, அ.ப. வெளியீடு, ப. 35.*
44. IV *: 1 : 1.*
45. **திருவாய்மொழி,** *8.8.4.*
46. **கம்பராமாயணம்,** *சுந்தர காண்டம். காப்புச் செய்யுள்.*
47. *திருமூலர்,* **திருமந்திரம்,** *எட்டாம் தந்திரம், அவத்தைபேதம். 22.*
48. VI *: 1 : 1.*
49. **திருவாய்மொழி,** *1.3.7.*
50. *மேலது, 1.1.9.*
51. VI *: 8 : 26.*
52. **கம்பராமாயணம்,** *யுத்த காண்டம் - 2, வை.மு.கோ.பதிப்பு, பக். 380-381.*
53. III *: 10 : 46.*
54. VI *: 23 : 50.*
55. VI *: 3 : 60.*
56. VI *: 37 : 104.*
57. VI *: 37 : 107.*
58. III *: 1 : 48.*
59. III *: 1 : 51.*

60. III *: 1 : 60.*
61. **கம்பராமாயணம்,** *ஆரணிய காண்டம், வை.மு.கோ.பதிப்பு, ப. 46.*
62. III *: 2 : 27.*
63. III *: 2 : 28.*
64. III *: 10 : 42.*
65. III *: 10 : 43.*
66. III *: 10 : 44.*
67. III *: 10 : 48.*
68. IV *: 7 : 124.*
69. *வரதராஜுலு நாயுடு, நா., கம்பராமாயணத்தில் விசிட்டாதுவைதம்,* **காரைக்குடி கம்பன் விழா மலர்,** *1991, பக். 35 - 36.*
70. VI *: 3 : 76.*
71. VI *: 37 : 111.*
72. *வரதராஜுலு நாயுடு, நா., கம்பராமாயணத்தில் விசிட்டாதுவைதம்,* **காரைக்குடி கம்பன் விழா மலர்,** *1991, ப. 36.*
73. VI *: 3 : 42.*
74. VI *: 3 : 43.*
75. VI *: 3 : 59.*
76. VI *: 3 : 120.*
77. VI *: 3 : 122.*
78. VI *: 3 : 124.*
79. VI *: 21 : 226.*
80. **திருவரங்கத்துமாலை,** *18.*
81. VI *: 18 : 251.*
82. **கம்பராமாயணம்,** *யுத்த காண்டம் - 2, வை.மு.கோ.பதிப்பு, ப. 1092.*
83. V *: 3 : 25.*
84. **பெரிய திருமொழி,** *5.8.1.*
85. II *: 6 : 46.*
86. IV *: 7 : 102.*
87. III *: 2 : 28.*
88. VI *: 11 : 34.*
89. IV *: 7 : 78.*
90. III *: 3 : 4.*
91. III *: 3 : 5.*
92. III *: 3 : 6.*
93. III *: 3 : 16.*
94. III *: 3 : 19.*

95. IV : 3 : 25.
96. IV : 3 : 27.
97. **பெரியாழ்வார் திருமொழி,** 3.10.6.
98. V : 3 ; 28.
99. VI : 2 : 111.
100. VI : 4 : 9.
101. VI : 4 : 19.
102. VI : 4 : 20.
103. VI : 4 : 36.
104. VI : 4 : 105.
105. VI : 4 : 111.
106. VI : 4 : 110.
107. VI : 4 : 113.
108. VI : 4 : 115.
109. VI : 4 : 120.
110. VI : 4 : 137.
111. VI : 4 : 140.
112. VI : 4 : 145.
113. VI : 4 : 153.
114. இராகவையங்கார், மு., **தெய்வப் புலவர் கம்பர்,** பக். 73 - 75.
115. மேலது, பக் 78 - 79.
116. **கம்பராமாயணம்,** யுத்த காண்டம் - 1, வை.மு.கோ.பதிப்பு, ப. ii.

# இயல் 7

## கம்பரின் கடவுட் கோட்பாடு

### முன்னுரை

கம்பர் கடவுளே அனைத்திற்கும் காரணமானவன் என்பதில் உறுதியான நம்பிக்கை உடையவர். அவர் எக்கடவுளர்க்கும் மேலான கடவுளைப் பரம்பொருள் எனக் குறிப்பிடுகிறார். அப்பரம்பொருளின் இயல்புகளையும், ஆற்றல்களையும் அருட்செயல்களையும் தம் நூலில் போற்றிப் பரவுகிறார். மேலும் அவர் பிற கடவுளர்கள் பற்றியும் பேசுகிறார். இவற்றால் அவரது கடவுட் கோட்பாடு விளக்கம் பெற்றுத் தெளிவாகிறது. கம்பர் தம் கொள்கைகளைத் தம் முன்னோர் மொழிகளினின்று பெற்றுள்ளார். இவற்றை இவ்வியல் விரிவாக ஆராய்ந்து நூல் புலப்படுத்தும் கடவுட் கோட்பாட்டைக் கண்டறிகிறது.

### கடவுள் - சொற்பொருள் விளக்கம்

கடவுள் என்னும் சொல்லிற்கு நூற்றொன்பது பொருள்களைக் கழகத் தமிழ் அகராதி தருகிறது.[1] இவற்றுள் குரு, தெய்வம், இறைவன், முனிவன், ஈசன், தேவன், பரம், ஃமூவுலகாளி, விமலன் ஆகிய பொருள்கள் குறிப்பிடத் தக்கவை எனலாம்.

கடவுள் எல்லாவற்றையும் கடந்த பொருள். இதனால் கடவுள் உயிருமன்று, உலகப் பொருள்களுள் எதுவுமன்று, உலகப் பொருள் ஒன்றுமன்றாதலின் அது உலகப் பொருள்போல் அழிவதன்று, காணப்படுவதன்று, உலகெலாம் அறிதற்கு அரியது என்ற கருத்துக்கள் தோன்றுகின்றன.

கடவுதல் என்பது செலுத்துதல் என்னும் பொருளுடைமையால் எல்லா உலகத்தையும் உயிர்களையும் உள் நின்று செலுத்துவது அப்பொருள் என்பது முடியும். எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற பொருளுக்கும் நமக்கும் தொடர்பு யாதெனில் நம்மை அது செலுத்துகின்றது, அறிவிக்கின்றது என்பதனாலாகிய தொடர்பு பெறப்படும். இறைவன் உலகத்தைக் கடந்த நிலையை மேல்நாட்டினர் *Transcedental* என்பர். எங்கும்

நிறைந்து எல்லாவற்றையும் இயக்கும் தன்மையை *Immanent* என்பர். இவ்விரு கருத்தையும் கடவுள் என்ற ஒரு சிறு சொல் தன்னுள் அடக்கி நிற்றல் வியக்கத்தக்கதாகும்.[2]

உலகத்திலுள்ள ஒவ்வொரு மக்கள் குழுவினரும் ஒவ்வொரு கடவுளை வணங்குகின்றனர். அவர்கள் தாங்கள் வணங்கும் கடவுளையே எல்லாக் கடவுளர்களுக்கும் தலைமையாகக் கருதுகின்றனர்.

> எகிப்தியர், பாபிலோனியர், கிரேக்கர், ரோமர் ஆகியோர் தத்தம் கடவுளர்களில் ஒருவர் கடவுள் கூட்டத்திற்குத் தலைமை தாங்குவதாக எண்ணினார்கள். ஜார தூஷ்டிரர் வகுத்த பார்சி மதத்தினர் தாங்கள் வணங்கி வந்த அஹுர-மாஜ்டா என்னும் வானக் கடவுளை எல்லோருக்கும் இறைவராகச் செய்தனர். மற்றக் கடவுளர்களெல்லாம் அந்த இறைவனுடைய ஆணைவழி நிற்பவர்களாக எண்ணினர்.
>
> இந்தியாவிலுள்ள அறிஞர்கள் பிரமம் என்ற ஒரே பொருள் உண்டென்று கூறினர். சீனா தேசத்து அறிஞர்கள் தாவோ என்னும் வஸ்துவே உலகத்தை இயக்குவதாக எண்ணினார்கள். ஆனால் சீன மக்கள் இயற்கைத் தெய்வங்களையே வணங்கி வந்தார்கள்.
>
> யூதர்கள் தொடக்கத்தில் பல கடவுளர்களை வணங்கினார்கள். பின்னர் அக்கடவுள்களில் ஒருவரான ஏகோவா அவர்களுக்குத் தலைவரானார். யூதர்கள் தங்கள் கடவுளே மற்ற நாட்டார் கடவுளர்களைவிட உயர்ந்தவர் எனவும் ஆற்றல் மிகுந்தவர் எனவும் எண்ணினார்கள். நாளடைவில் உலகம் முழுவதையும் ஆண்டுவரும் தங்கள் கடவுள் மிகுந்த அறிவும் அன்பும் உடையவர் என்று கொண்டாடினார்கள். கிறிஸ்துவர்கள் கடவுளை யூதர்களுடைய தந்தையாக மட்டும் எண்ணாமல் எல்லா மக்களுடைய தந்தையாகவும் எண்ணுகிறார்கள். முஸ்லீம்கள் கடவுளை அல்லா என்ற பெயருடன் வணங்குகிறார்கள். இறைவன் ஒருவனே என்பது இஸ்லாம் மதத்தின் முக்கிய கடவுட் கொள்கையாகும்.[3]

இவற்றால் உலகத்திலுள்ள பல்வேறு இனத்தவரும், மதத்தவரும், தங்கள் கடவுளே மேலானவர் என்ற கருத்தினைக் கொண்டுள்ளமை விளங்கும்.

**கடவுளின் உண்மை**

உலகத்தைப் படைத்துக் காத்து ஆண்டுவரும் கடவுள் ஒருவன் உண்டு என்பதை அறிஞர்கள் வலியுறுத்தியுள்ளனர். எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் முதலாக உள்ளது போல், ஆதியாகிய இறைவன் உலகத்திற்கு முதலாக உள்ளான் என்பது வள்ளுவம்.[4]

சமணத் துறவியாகிய இளங்கோவடிகள் '**தெய்வந் தெளிமின்**'[5] என்றார்.

கடவுளின் உண்மையைக் கம்பர்தம் காப்பியத்தில் வலியுறுத்தியுள்ளார்.

வான்மீகத்தில் இடம்பெறும் ஜாபாலி முனிவர் நாத்திகவாதம் பேசுபவர்.[6] அவர் பற்றிக் கம்பராமாயணத்தில் பேச்சே இல்லை. '**கம்பனுடைய பக்திக் கொள்கைக்கு ஜாபாலியின் கொள்கை முரண்படுவதால் ஜாபாலி என்ற பாத்திரத்தைக் கம்பர் பாடாது விடுத்துள்ளார் என்பதை அறியமுடிகிறது**'[7] என்பர்.

'**கடவுள் உண்டு**' என்பது கம்பரது கொள்கை. இதை ஓர் உவமையின் மூலம் அவர் விளக்குகிறார். திருமணத்தின் பொருட்டுச் சீதைக்குப் பெண்கள் ஒப்பனை செய்தனர். சீதையின் இடையினை அழகு செய்ய அம்மாதர் விரும்பினர். அவருள் சிலர் சீதைக்கு '**இடையில்லை**' என்றனர். வேறு சிலர் '**உண்டு**' என்றனர். இடையின்றிப் பெண்ணொருத்தி இருக்க முடியாதென்பது ஒருதலை. ஆகவே உண்மையை உணர்ந்த பின்னர் அம்மகளிர் அறிவுபெற்றுச் சீதையின் இடையினை அலங்கரித்தனர். இது எவ்வாறு இருந்ததெனில், '**மெய்யறிவு வாய்ந்த மேலோர் படைக்கப்பட்ட உலகத்தைக் கண்டு படைத்தவன் உளன் என்பதை உணர்ந்ததே போன்று, பெண்ணின் தலை, கடைகளை நோக்கி இடை உண்டு என்னும் உண்மையை உணர்ந்தனர்**'. இதனைக் கம்பர்,

> **"சில்லியல் ஓதிக்கொங்கை திரள்மணிக் கனகச்செப்பில்**
> **வல்லியும் அனங்கன் வில்லும் மான்மதச் சாந்தும் தீட்டிப்**
> **பல்லியல் நெறியில் பார்க்கும் பரம்பொருள் என்னயார்க்கும்**
> **இல்லையுண் டென்னநின்ற இடையினுக் கிடுக்கண் செய்தார்"**[8]

எனப [illegible] கடவுளின் உண்மையை வலியுறுத்தப்
பயன் [illegible]

[illegible] ளைப் பொய்யென்று சாதிக்கும்
ந [illegible] நரகத்தில் வீழ்வானென்றும்"[9]
'வே [illegible] றுபிறப்பும், இருவினைப் பயனும்
இல்லை [illegible] சால் [illegible] நாகள் நரகத்தில் விழுவார்கள்'[10]
என்றும் கம்பர் கு [illegible] பிடுவ [illegible] கடவுள் மறுப்புக் கொள்கையின் மீது
அவர் கொண்டிரு [illegible]

**கடவுளின் உருவு கண்டார்**

இராமன் உலா வருவதைக் கண்ட காரிகையர் தத்தம் கண்களுக்குப் புலனாய உறுப்பினை நோக்கினர். சிலர் இராமனின் தோள் கண்டனர்; சிலர் தாள் கண்டனர்; தடக்கை கண்டனர் சிலர். இங்ஙனம் ஒவ்வொருவரும் ஒவ்வோர் உறுப்பினைக் கண்டு நிறைவடைந்து மேற்செல்ல இயலாதவராயினர். அதுபோல் ஒவ்வொரு சமயமும் இறைவனின் ஒரு சக்தியைக் கண்டு மயங்கி நிற்கின்றதன்றி அப்பெருமானின் முழுத் தோற்றத்தையும் சக்தியையும் அறிந்த பாடில்லை. இக்கருத்தினை

> "தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழல் கமலமன்ன
> தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாருமஃதே
> வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக்கண்டார்
> ஊழ் கொண்ட சமயத் தன்னான் உருவுகண்டாரை யொத்தார்"[11]

எனக் கம்பர் பாடுவர்.

> "தோள் கண்டவர் தோளே அழகிது என்று கூறுதல் போல ஒரு சமய [illegible] ார் தாம் கண்ட உண்மையை மிகச் சிறந்ததென்று கூறு [illegible] தவறு என் [illegible] இராமனது ஒவ்வோர் உறுப்பும் எவ் [illegible] கண்ணை [illegible] தக்கதாய் இருந்ததோ அவ்வாறே [illegible] ருளைக் [illegible] போந்த ஒவ்வொரு சமயத்திலும் [illegible] பொருள [illegible] டுகின்றது என்றும் இராமன் [illegible] ம் பார்த்து முடிந்தால் இராமன் [illegible] வடிவை [illegible] போல, பல சமயங்கள் தோறும் [illegible] உண் [illegible] தத்துவங்களை ஒருங்குசேர்த்து [illegible] ந்தால் உண்மை [illegible] பரம்பொருளின் தத்துவத்தைக் [illegible] லாமென்று [illegible] கம்பர் கருதுவது மனத்தில் [illegible] கத்தக்கது"[12] [illegible]

உலகிலுள்ள ஒவ்வொரு சமயமும் பரம்பொருளின் ஒவ்வோரியல்பினைக் கண்டு நிறைவடைவதாகக் கம்பர் குறிப்பிடுவர் எனலாம்.

**பரம்பொருள் ஒன்றே**

ஆதியில் மனிதன் பல கடவுள்களை உடையவனாயிருந்தான். தன்னைவிட வலிமையுடைய சூரியன், சந்திரன், நெருப்பு, காற்று ஆகிய இயற்கைச் சக்திகளைக் கடவுள்களாகப் பாவித்து வழிபட்டான். ஆன்மா என ஒன்று தனியாக இருப்பதாக எண்ணிய நிலையில் அவன் தன் மூதாதைகளின் ஆவிகளைக் கடவுள்களாக எண்ணி வணங்கினான். நாகரிகம் முதிர்ந்த நிலையில் மனிதன் பல கடவுள்களை வழிபடுவதை விட்டு ஒரே கடவுளை வணங்கத் தொடங்கினான். தன்னைப் படைத்தும் காத்தும் வரும் கடவுள் ஒருவனே என எண்ணினான்.

**திருமூலர்**

இந்நிலையில் திருமூலர் போன்ற ஞானியர்,

**'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'** [13]

என்ற கொள்கையை வலியுறுத்தினர். இறைவனை அடைய வழிகள் பல உள என்பதை வலியுறுத்திய திருமூலர்,

**'ஒன்றது பேரூர் வழியாறு அதற்குள<br>என்றது போல இருமுச் சமயமும்<br>நன்றிது தீதிது என்றுரையாளர்கள்<br>குன்று குரைத்திடு நாயை ஒத்தார்களே'** [14]

என்றார்.

**மாணிக்கவாசகர்**

**'தென்னாடுடைய சிவனே போற்றி<br>எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'** [15]

என்பது திருவாசகம். உலகமனைத்தினுக்கும் அருள் புரிவோனாயுள்ள இறைவன் தென்னாட்டில் சிவன் என்ற பெயரில் வழிபடப்படுகிறான் என்பது இதன் பொருளாகும்.

**தாயுமானவர்**

சமயங்களெல்லாம் ஒரே இறைவனையே சுட்டுகின்றன என்பதைத் தாயுமானவர்,

'வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கில்
விளங்குபரம் பொருளே நின் விளையாட்டல்லால்
மாறுபடு கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா'[16]

என்றார்.

**இராமலிங்க அடிகள்**

பல பெயர்களையுடைய எல்லாக் கடவுள்களும் ஓர் இறைவனையே சுட்டுகின்றன என்பதை வள்ளலார்,

'பெருகிய பேரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர் திருப்பேர் புகலென்றார்
அருகர் புத்தர் ஆதியென்பேன் அயனென்பேன் நாரா
யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவனென்பேன்
பருகு சதா சிவனென்பேன் சக்தி சிவமென்பேன்
பரமனென்பேன் பிரம மென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவு சுத்தப் பிரமமென்பேன் துரிய நிறைவென்பேன்
சுத்த சிவமென்பன் இவை சித்து விளையாட்டே'[17]

என்று தம் பொதுமை உள்ளத்தை வெளிப்படுத்துகிறார்.

**பாரதியார்**

இவர்கள் மரபில் தோன்றிய இக்காலக் கவிஞர் மகாகவி பாரதியாரும்,

'தீயினைக் கும்பிடும் பார்ப்பார் - நிதம்
திக்கை வணங்கும் துருக்கர்
கோயிற் சிலுவையின் முன்னே - நின்று
கும்பிடும் ஏசு மதத்தார்
யாரும் பணிந்திடுந் தெய்வம் - பொருள்
யாவினும் நின்றிடுந் தெய்வம்
பாருக்குள்ளே தெய்வம் ஒன்று - இதில்
பற்பல சண்டைகள் வேண்டா'[18]

எனப் பறை சாற்றினார்.

இவற்றால், அனைத்துச் சமயங்களும் வலியுறுத்தும் பரம்பொருள் ஒன்றே என்ற கருத்து தைலதாரைபோல் ஞானியரிடையே தொடர்ந்து வந்துள்ளமை அறியத்தகும்.

**கம்பர்**

இஞ்ஞானியருள் ஒருவராகிய கம்பரும் இதற்கு விதிவிலக்கல்லர் என உணரமுடிகின்றது. அவர்தம் நூலில் பல்வேறு சமயக் கடவுளர் பற்றிக் குறிப்பிடுகிறார். எனினும் பரம்பொருள் ஒன்றே என்பது அவருள்ளத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது என்பதை அறியமுடிகின்றது.

ஒன்றேயாயுள்ள பரம்பொருள் பின் இடந்தோறும் வழிபடுவோர் விரும்பியவாறு வேறு வேறு உருவும் பேரும் கொண்டு விளங்கும். அதுபோல முன்னே ஒன்றாய் நின்ற சரயு பின் பயன்கொள்வார் விரும்பியபடி, குளம், ஏரி, வாவி முதலிய நீர்த்துறைகளில் வேறு வேறு உருவும் பெயருங் கொண்டு பரவியது என்பதைக் கம்பர்,

> 'கல்லிடைப் பிறந்துபோந்து கடலிடைக் கலந்த நீத்தம்
> எல்லையில் மறைகளாலும் இயம்பரும் பொருளீதென்னத்
> தொல்லையில் ஒன்றேயாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
> பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும் போற்பரந்தவன்றே'[19]

என்றார்.

'....... அறிதற்கு அரியதோர் உண்மையைத் தெளிவாகத் தெரிந்து ஆற்று நீரின் நிலையைக் கொண்டு எளிதாக விளக்கிக் காட்டியுள்ள கம்பரின் அறிவுரமும் ஆராய்ச்சித் திறமும் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துவதாகும்'[20] என்னும் கருத்து மனங்கொள்ளத்தக்கது.

'....... ஆற்று நீர் வயல், காடு, குளம், மதகு, சோலை முதலிய இடங்களில் புகுந்திருக்கும்பொழுது வயல்நீர், காட்டாறு, குளத்துநீர், மதகுநீர், சோலை நீர் எனப் பல்வேறு பெயர்களைப் பெறுகிறது. என்றாலும் ஒரே ஆற்றுநீர்தான் அது. அதுபோலப் பரம்பொருள் ஒன்றேயாயினும் ஒவ்வொரு சமயத்தாரும் வெவ்வேறு பெயர்களால் அந்த ஒரே பொருளை அழைக்கின்றனர். எனவே சமய வேறுபாடுகள் மனிதர்களாகச் செய்து கொண்டவை என்பதும், அச்சமயங்கள் வெவ்வேறு பெயர்களால் அழைத்தாலும் மூலப்பொருள் ஒன்றே என்பதும் பெறப்பட்டது. இந்த உவமையால் பரம்பொருள் கட்புலனுக்கு வெளிப்பட்டு நின்று அண்ட, பிண்ட, சர, அசரமாக விளங்கும் இயல்பு கூறப்பட்டது'[21] என்பர்.

இதே போன்று ஓர் உவமை திருக்குற்றாலத் தலபுராணத்தில் இடம் பெற்றுள்ளது.

> 'திங்கள் சூடிய தேவன் ஒருவனே
> பொங்குபல் சமயப் பொருளாதல்போல்
> அங்கங்கே பகுத்து ஆயிரமாமுகக்
> கங்கைபோன்றது சித்திர கங்கையே'[22]

என்பது அத்தல புராணப் பாடலாகும்.

எனவே, சமயங்கள் கடவுளர் பலரைப் பேசினாலும், அனைத்துக்கும் மேலான பரம்பொருள் ஒன்று என்ற கொள்கையில் கம்பர் உறுதியாக நிற்பவர் என்பது அறியத்தக்கது.

## சிவனின் முதன்மை

சிவன், திருமால், பிரமன் ஆகியோர் மும்மூர்த்தியர் எனப்படுவர். சிவபெருமானின் முதன்மையை,

> 'முத்தியாய் மூவருள் முதல்வனாய் நின்றவன்'[23]

என ஞானசம்பந்தரும்,

> 'முந்தையர் முந்தியுள்ளார் மூவர்க்கு முதல்வரானார்'[24]

எனத் திருநாவுக்கரசரும் வலியுறுத்தியுள்ளார்கள்.

## திருமாலின் முதன்மை

திருமாலே மூவர்க்கும் முதல்வன் என்பதைச் சங்கப் பாடல்கள், சிலப்பதிகாரம் மற்றும் ஆழ்வார் பாசுரங்கள் மூலம் அறியலாம்.

> ஞால மூன்றடித்தாய முதல்வன்[25]

என்பது கலித்தொகை.

சிலப்பதிகாரத்தில், பெரிய உலகத்தை உந்தியிலே உடைய விண்ணவனே பெரியவனாகிய மாயவன்[26] என்றார் இளங்கோவடிகள்.

## பொய்கை ஆழ்வார்

மூவர்க்கும் முதலானவன் பாற்கடல் துயின்ற பரமன் என்பதை,

> 'முதலாவார் மூவரே அம்மூவருள்ளும்
> முதலாவான் மூரிநீர் வண்ணன்'[27]

என்பர் பொய்கை ஆழ்வார்.

**திருமங்கை ஆழ்வார்**

திருமாலின் முதன்மையினை,

*'யாவருமாய் யாவையுமாய் எழில்வேதப் பொருள்களுமாய்*
*மூவருமாய் முதலாய மூர்த்தியமர்ந் துறையுமிடம்'*[28]

என்றும்,

*'மூவரில் முன்முதல்வன் முழங்கார் கடலுள் கிடந்து*
*பூவலர் உந்தி தன்னுள் புவனம் படைத்துண்டு மிழ்ந்த*
*தேவர்கள் நாயகன்'*[29]

என்றும்,

*'மூவரில் முதல்வனாய ஒருவனை'*[30]

என்றும் திருமங்கை ஆழ்வார் பாடிப் பரவுவர்.

**நம்மாழ்வார்**

*'தேவர் முனிவர்க் கென்றும் காண்டற் கரியன்*
*மூவர் முதல்வன்'*[31]

*'மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன் தன்னை'*[32]

என்பன திருவாய்மொழிப் பாசுரங்கள்.

**பெரியாழ்வார்**

*'மூவர் காரியமுந் திருத்தும் முதல்வன்'*[33]

என்பது பெரியாழ்வார் திருமொழி.

**கம்பர் உணர்த்தும் முதல்வன்**

ஆழ்வார்கள் போன்றே கம்பரும் திருமாலையும், திருமாலின் அவதாரமாகிய இராமனையும் **'மூவர்க்கும் முதல்வன்'** எனக் கவிக் கூற்று மற்றும் பாத்திரக் கூற்றுக்களால் நிறுவுவர்.

## கவிக் கூற்று

### அனைத்தும் நாராயணன் வடிவங்கள்

அனைத்தும் நாராயணன் வடிவங்கள் என்பதைக் கம்பர் வலியுறுத்துவர். '**வேதங்களும், மனு முதலான அற நூல்களும், வேள்விகளும் சத்தியமும் அந்தணர்களின் விருப்பமும் சக்கரமேந்திய அழகிய தாமரை மலர் போன்ற கைகளை உடைய நாராயணன் சொரூபம் என்று உணராத அறிவீனர் மனம்போல இருள் பரவியிருந்தது.**'[34] என்றார்.

### மூவரில் முதல்வன்

கம்பர் திருமாலின் அவதாரமாகிய இராமனை மூவர்க்கும் முதல்வன் என்பர். திருமணத்திற்கு முன்னர் இராமனுக்கு ஒப்பனை நடைபெற்றது. அவ் ஒப்பனையின் சிறப்பினை,

> 'முப்பரம் பொருளிற்குண் முதலை மூலத்தை
> **இப்பரந் துடைத்தவர் எய்தும் இன்பத்தை**
> **அப்பனை அப்பினுள் அமிழ்தந் தன்னையே**
> **ஒப்பனை ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ**'[35]

என்பர். கம்பர் இராமனை எண்ணுந்தோறும் அவர் நெஞ்சத்தில் நீரில் அமிழ்தம் போன்று விளங்கிய திருமாலின் நினைவு தோன்றியது எனலாம்.

இராமன் தன் தோளில் மூன்று முத்துவடங்கள், அணிந்திருந்தான். அது '**மூவகை உலகிற்கும் முதல்வன் நாம்**' எனத் தெரிவிப்பது போன்றிருந்தது.[36]

கம்பர் திருமாலை மெய்ப்பொருளென்றார். '**ஆதிமூலமே**' என்றழைத்த கசேந்திராழ்வானுக்கு அருள் புரிந்த மெய்ப்பொருளுக்கு வசிட்டன் இராமன் எனப் பெயரிட்டான்.[37]

### பாத்திரக் கூற்று - பரதன்

கோசலை முன்னர் பரதன் வஞ்சினம் கூறினான். '**கைகேயியின் சூழ்ச்சி எனக்கு முன்னமே தெரிந்திருந்தால் தழைத்த தண் துழவினனாகிய திருமாலைத் தலைவன் அல்லவென்று அழைத்தவன் அடையும் இழிநிலையை யான் அடைவேனாக**'[38] என்பது பரதனது வஞ்சின மொழி.

### அகத்தியன்

அகத்தியன் திருமாலை '**முழு முதல்வன்**' என்றான். பரசுராமன்

அரிதிற் பெற்றிருந்த தவத்தையெல்லாம் இராமன் தன் அம்புக்கு இலக்காக்கி அழித்தான். பரசுராமன் இராமனை **'நீ இங்கு யாவர்க்கும் ஆதியான்'**[39] என்றான்.

**வாலி**

வாலி இராமனின் தெய்வத்தன்மையைத் தன் மைந்தன் அங்கதனிடம் கூறும்போது,

> **'.............................................................. தன்னின்**
> **மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந்தாங்கிக்**
> **கால் தரை தோயநின்று கட்புலக் குற்றதம்மா'**[40]

என்றான்.

**வீடணன்**

வீடணன், இராமன் மானிடனாக அவதரித்ததை,

> **'தன்னின் முன்னிய பொருளிலா ஒருதனித் தலைவன்**
> **அன்ன மானுடனாகி வந்தவதரித் தமைந்தான்'**[41]

எனக் குறிப்பிட்டான்.

இவ்விருவரின் கூற்றுக்களும்,

> **'உயர்வற உயர்நலம் உடையவன் யவன் அவன்'**[42]

என்னும் திருவாய்மொழிப் பாசுரத்தோடு ஒப்புமை உடையன எனலாம்.

இந்திரசித்தனிடம் சீதையைப் பற்றி வீடணன் குறிப்பிடுகையில்,

> **'முத்தேவர் தம் தேவன் தேவி'**[43]

என்றான்.

**சடாயு**

இராவணன் சீதையை வான் வழியாகத் தூக்கிச் சென்றான். சடாயு இராவணனைத் தடுத்து அவனுடன் போரிட்டான். அப்போது சடாயு, இராமனை மூவரில் மூலமுதற் பொருள் என்றான்.

**'முத்தேவரில் மூலமுதற் பொருளாம்**
**அத்தேவரிம் மானுடராதலினால்**
**எத்தேவரோ டெண்ணுவது'[44]**

என்பது சடாயு கூற்று.

**வருணன்**

கடலைக் கடக்க வருணனை இராமன் வழிவேண்ட வருணன் வாளாவிருந்தான். சினங்கொண்ட இராமன் கடலை நோக்கி அம்புகளை எய்தான். அப்போது வருணன் நேரில் தோன்றி,

**'.................................. மறையிற்கூறும்**
**எள்ளலாகாத மூலத்து யாதுக்கு முதலாயுள்ள**
**வள்ளலே'[45]**

எனத் துதித்தான்.

இதுகாறும் கூறியவற்றால், கம்பர் திருமாலையும் திருமாலின் அவதாரமாகிய இராமனையும் மூவர்க்கும் முதல்வன் எனவும், அனைத்துக்கும் மூலமானவன் எனவும் கருதினார் என்பது மனங்கொள்ளத்தக்கது.

**வழிபாடுகள் - திருமாலைச் சேர்வன**

பிற கடவுளர்க்குச் செய்யப்படும் வழிபாடுகள் அனைத்தும் திருமாலைச் சேரும் என ஆழ்வார்கள் கருதினர். இதனை,

**'சமணரும் சாக்கியரும் வலிந்து வாது செய்வீர்களும்**
**மற்றும்நும் தெய்வமும் ஆகிநின்றான்'[46]**

என்றும்,

**'நும்மின் கவிகொண்டு நும் இட்டாதெய்வம் ஏத்தினால்**
**செம்மின் சுடர்முடி எம் திருமாலுக்குச் சேருமே'[47]**

என்றும் நம்மாழ்வார் கூறுவர்.

இதையே கம்பர் விராதன் கூற்றாகப் பிற தெய்வங்களுக்குச் செய்யும் வழிபாடுகளை நீ ஏற்கிறாயாதலின் பிற தெய்வங்களால் பயனேதும் இல்லை என்பதை,

> 'பனிநின்ற பெரும் பிறவிக் கடல் கடக்கும் புணைபற்றித்
> தனிநின்ற சமயத் தோரெல்லாரும் நன்றென்னத்
> தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி நீயாயின்
> இனிநின்ற முதற்றேவரென் கொண்டென் செய்வாரே'[48]

என்றார்.

## திருமாலே நாயகன்

முன்னொரு காலத்தில் சிவபெருமான் பிரமன் தலைகளுள் ஒன்றைக் கொய்தனன். கொய்ததலை பிரமனின் சாபத்தால் சிவன் கையினின்று நீங்காததாயிற்று. ஒருவரிடும் பிச்சையால் அப்பிரம கபாலம் நிரம்பினால் அது கையை விட்டு நீங்குமென்று நிபந்தனை விதிக்கப்பட்டது. பலரும் அதில் பிச்சையிட்டும் அது நிரம்பவில்லை. திருமால் அட்சயம் என்று சொல்லிப் பிச்சையிட்ட அளவில் அது நிரம்பிற்று. கபாலம் கையை விட்டு நீங்கிற்று. இதனை நம்மாழ்வார்,

> 'பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்
> நாயகனவனே கபால மோக்கத்துக் கண்டு கொண்மின்'[49]

என்பர்.

திருமாலே தலைவன் என்பதை இக்கபாலம் நிரம்பிய கதையால் உலகத்தார் ஐயமறத் தெளிந்தனர் என்றான் விராதன்.

> 'வையத்தார் வானத்தார் மழுவாளிக் கன்றளித்த
> ஐயத்தாற் சிறிதையந் தவிர்ந்தாரு முளரையா'[50]

என்பது விராதன் துதி. இதன் மூலம் கம்பர், சிவன், பிரமன் ஆகியோரினும் திருமால் மேலானவன் என்பதை உணர்த்த விழைவர் எனலாம்.

## மூவுருவும் ஒருரு - பரிபாடல்

சங்கப் பாடலாகிய பரிபாடல் **'ஐந்து தலைகளையுடைய சிவபெருமானும், அவனாற் செய்யப்படுகிற ஒடுக்கத் தொழிலும் வேதமும், பிரமனும், படைப்புத் தொழிலும் நீயே'** எனத் திருமாலைச் சுட்டுகிறது.

> 'ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
> மைந்துடை ஒருவனும் மடங்கலும்நீ

> **நலமுழு தளைஇய புகலறு காட்சிப்**
> **புலனறு பூவனு நாற்ற முநீ'**[51]

என்பது பரிபாடல்.

பிரமனும் திருமாலும் ஒன்றான தன்மையை,

> **'தாமரைப் பூவினுட் பிறந்தோனும் தாதையும்**
> **நீயென மொழியுமால் அந்தணர் அருமறை'**[52]

என மேலும் பரிபாடல் குறிப்பிடுகின்றது.

### ஆழ்வார்கள் - திருமங்கை ஆழ்வார்

மும்மூர்த்திகளும் ஒரு மூர்த்தியாக இருப்பதைத் திருமங்கை ஆழ்வார்,

> **'ஏருருவில் மூவருமே என்னநின்ற**
> **இமையவர்தம் திருவுரு வேறெண்ணும்போது,**
> **ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ**
> **ஒன்றுமா கடலுருவம் ஒத்துநின்ற**
> **மூவுருவும் கண்டபோ தொன்றாம் சோதி**
> **முகிலுருவம் எம்மடிகள் உருவந்தானே'**[53]

என்று பாடுவர்.

### திருமழிசை ஆழ்வார்

திருமால் மூவராய் நிற்கும் தன்மையைக் கூறி எல்லாம் திருமாலே என்பதை,

> **'தேவராய் நிற்குமத் தேவும் அத்தேவரில்**
> **மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும் - யாவராய்**
> **நிற்கின்ற தெல்லாம் நெடுமாலென் றோராதார்**
> **கற்கின்ற தெல்லாம் கடை'**[54]

என்பர் திருமழிசை ஆழ்வார்.

### நம்மாழ்வார்

மும்மூர்த்திகளும் ஒன்றாய் நின்ற நிலையினை

> **'தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலை'**[55]

என்றும்,

'ஏறாளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும்
கூறாளும் தனியுடம்பன்'[56]

என்றும்,

'தாளோர் உருவே தனிவித்தாய் தன்னில் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்'[57]

என்றும் திருவாய்மொழியில் நம்மாழ்வார் குறிப்பிடுவர்.

**கம்பர் - கவிக்கூற்று**

ஆழ்வார்களைப் போன்று கம்பரும் மூவராய் நிற்கும் மூர்த்தியே இராமனாக அவதரித்தான் என்பர்.

தாமரை இயற்கையாய் மலர்தலை, இராமனது முடிசூட்டு விழாவைக் காணும் ஆசையால் மலர்ந்ததாகக் கம்பர் குறிப்பிடுவர்.

'மூவராய் முதலாகி மூலமுமாகி ஞாலமுமாகியத்
தேவதேவர் பிடித்த போர்வில் ஒடித்த சேவகர் சேணிலம்
காவன் மாமுடி சூடுபேரெழில் காணலாமெனும் ஆசைகூர்
பாவைமார் முகமென்ன மலர்ந்த பங்கய ராசியே'[58]

என்பது அப்பாடல். இப்பாடலில் 'மூவராய் முதலாகி மூலமுமாகி ஞாலமுமாகி' என்பது இராமனையும் 'அத்தேவதேவர்' என்பது சிவபெருமானையும் குறித்து நின்றன. இராமன் மூவராகவும், மூவர்க்கும் முதல்வனாகவும், அனைத்திற்கும் மூலமாகவும், இந்த ஞாலமாகவும் விளங்குகிறான் என்பது கம்பர் கருத்து. ஆனால் இப்பாடலிலுள்ள 'மூவராய் முதலாகி மூலமுமாகி ஞாலமுமாகிய தேவதேவர்' என்பது சிவனைக் குறிப்பதாக உரை வரைந்துள்ளனர்.[59] கம்பர் தம் நூலில் சிவபெருமானை மூவராகவும், முதல்வனாகவும், மூலமாகவும், யாண்டும் குறிப்பிடாமையின் அவ்வுரை பொருந்தாது. அவ்வருணனை திருமாலின் அவதாரமாகிய இராமனுக்கே உரியது என்பது அறியற்பாலது.

**பாத்திரக்கூற்று - அனுமன்**

கம்பர், மூவராகிய மூர்த்தியே இராமனாக வந்தான் என அனுமன் கூற்றாக அமைத்துள்ளார். தொடக்கமும் நடுவும் இறுதியும் இல்லா முக்காலமும் கணக்கும் நீத்த காரணனாகிய திருமால் கைவில் ஏந்திச் சூலமும், சக்கரமும், சங்கும், கரகமும் துறந்து ஆலிலையும், தாமரையும், கைலாயமும் விட்டு இராமனாக அயோத்தி வந்தான் என்றான்.

'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்தகாரணன் கைவில்லேந்தி
சூலமுந் திகிரி சங்கும் கரகமுந் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு
அயோத்திவந்தான்'[60]

என்பது அனுமன் கூற்று.

**சுக்கிரீவன்**

பிரமன், சிவன், திருமால் ஆகிய மூவரும் சேர்ந்து ஒன்றான உருவமே இராமன் என்பதை,

'முளரிமேல் வைகுவான் முருகற்றந்தவத்
தளிரியல் பாகத்தான் தடக்கை ஆழியான்
அளவிலொன்றாவரே யன்றி ஐயமில்
கிளவியாய் தனித்தனிக் கிடப்பரோதுணை'[61]

என்றான் சுக்கிரீவன்.

**பரம்பொருள்**

கம்பர், இராமன் பரம்பொருள் என்பதைப் பிரமன், சிவன் ஆகியோர் வாக்கால் உணர்த்தினர். பிரமன் இராமனின் தன்மையினை உணர்த்தும் போது, '**பிரமனாகிய எனக்கும், எட்டுவகை வடிவையுடைய ஒரு கடவுளான சிவனுக்கும், இந்திரனுக்கும் முனிவர்களுக்கும், உயிரோடு கூடிய எல்லாப் பொருள்களுக்கும் நீயே பரம் என்ற உண்மைப் பொருளை அறிந்தார் தளைகளிலிருந்து விடுபட்டு முத்தி அடைவர்**'[62] என்றான்.

சிவபெருமான் இராமன் தன்மையினைத் தேவர்கட்கு உணர்த்தினான். '**தயிராதற்குக் காரணமான பிரைமோரைப் போன்ற இராமன் எங்கும் பரந்த தலைவன். ஒப்பற்ற பொருள்; இதுவே பரம்பொருள்**'[63] என்றான் சிவன்.

**நரசிம்மத்தை வணங்கல்**

இரணியவதைப் படலத்தின் நரசிம்ம அவதாரத்தினைச் சிவன், பிரமன், இந்திரன் ஆகியோர் வணங்கியதாகக் கம்பர் குறிப்பிடுவர்.

'**ஓம் நமோ நாராயணாய**' என்னும் எட்டெழுத்து மந்திரத்தின் சிறப்பினைப் பிரகலாதன் இரணியனிடம் கூறினான். இரணியன்

ஏற்கவில்லை. '**நாராயணன் எங்கும் உறைகிறான்**' என்றான் பிரகலாதன். அருகிலிருந்த தூணைக் காட்டி, '**இத்தூணில் உள்ளானா?**' என இரணியன் வினவினான். இறைவன் அத்தூணிலும் உள்ளான் எனப் பிரகலாதன் சொல்ல, இரணியன் தூணை உதைத்தான். நரசிங்கம் வெளிப்பட்டு இரணியனைக் கிழித்துக் கொன்றது. முன்பு இரணியனுக்கு அஞ்சி ஓடிய சிவனும், பிரமனும் மற்றைத் தேவர்களும் அச்சமின்றி அங்குவந்து நரசிங்கத்தை வணங்கினர். இதனைக் கம்பர்,

> **'.......................... இமையாத முக்கணனும்**
> **வன்றாள் மழுவோனும் யாரும் வணங்கினரால்'**[14]

என்றார்.

திருமாலின் அவதாரமாகிய இராமனைப் பிரமனும் சிவனும் பரம்பொருள் எனக் கூறினர் என்பதும் அவர்கள் திருமாலின் அவதாரமாகிய நரசிம்மாவதாரத்தை வணங்கினர் என்பதும் உணர்த்தப்பட்டன.

### மூவருமல்லன் – சீதை கூற்று

இராமன் திருமாலின் அவதாரம்; அவன் மூவரின் முதல்வன்; மும்மூர்த்திகளும் ஒருருவானவன்; அவனே பரம்பொருள் ஆகிய உண்மைகள் கம்பரின் காப்பிய அடிப்படையில் ஆராயப்பெற்று வலியுறுத்தப்பட்டுள்ளன.

ஆயின் அசோகவனத்திருந்த சீதை இராவணனை நோக்கிக் கூறிய கூற்று சிந்திக்கத்தக்கதாக உள்ளது. அசோகவனத்திருந்த சீதையை அணுகித் தன்னை ஏற்குமாறு இராவணன் நயவுரைகள் பல கூறி வேண்டினான். ஆனால் சீதை அதனை மறுத்து,

> **'செங்கண்மால் நான்முகன் சிவனென்றே கொலோ**
> **எங்கள் நாயகனை நினைத்தது ஏழைநீ'**[15]

என்றாள். சீதையின் இக்கூற்றால் இராமன் திருமாலுமல்லன்; நான்முகனுமல்லன்; சிவனுமல்லன் என்றாள் எனலாம். ஆயின் இராமன் யார்? சீதை பேசியதன் பொருள் யாது? இராமன் தனித்தனியே மூவருமல்லன். மூவரும் இணைந்த மூலப்பொருளாக இராமனைச் சீதை எண்ணினாள் என்பதை இக்கூற்றின் மூலம் கம்பர் பெற வைத்துள்ளார் என்பது உய்த்து உணரத்தக்கது.

### இராமன் - வேதமுதற் காரணம்

இராமனுக்கும் இராவணனுக்கும் நடைபெற்ற இறுதிப் போரில் இராமனது வில்லாற்றலை இராவணன் வியந்தான். அவன் தன்னை வெல்லக் கூடுமென எண்ணினான். வீடணன் சொல்லை நினைவுகூர்ந்தான். அப்போது, இராமன் திருமாலுமல்லன்; நான்முகனுமல்லன்; சிவனுமல்லன் எனச் சீதை கூறியதையும் மனதில் எண்ணினான் போலும். தான் பெற்றிருந்த வரங்களை எல்லாம் அழிக்கும் அவன் சிவனுமல்லன்; நான்முகனுமல்லன்; திருமாலுமல்லன்; தவம் செய்தவனுமல்லன். இவன் அவ்வேதமுதற்காரணனகிய பரம்பொருளே என்றான். இறக்கும் தருணத்தில் இராமனைப் பரம்பொருளென்று உணர்ந்த இராவணன்,

> **'சிவனோவல்லன் நான்முகனல்லன் திருமாலாம்**
> **அவனோ வல்லன் மெய்வரமெல்லா மடுகின்றான்**
> **தவனோ வென்னிற் செய்து முடிக்குந் தரனல்லன்**
> **இவனோ தானவ் வேதமுதற் காரணன்'[66]**

என இராவணன் குறிப்பிட்டான்.

### அரன் அதிகன்? அரி அதிகன்?

வானரர்க்குச் சுக்கிரீவன் சீதையைத் தேடிச் செல்ல வேண்டிய வழியினைச் சொன்னான். அப்போது சுரநதிக்கருகில் அமைந்த அருந்ததி மலையின் புகுதற்கரிய இயல்பினை,

> **'அரனதிகன் உலகளந்த அரியதிகன்**
> **என்றுரைக்கும் அறிவிலார்க்குப்**
> **பரகதி சென்றடைவரிய பரிசேபோல்**
> **புகலரிய பண்பிற்றாமால்'[67]**

எனச் சுக்கிரீவன் கூறினான்.

சிவனே பெரியவன், உலகளந்த திருமாலே பெரியவன் எனக் கூறும் அறிவில்லாதவர் பரகதி சென்றடைதல் அரிது. அதுபோல் சுரநதிக்கருகில் அமைந்த வானளாவிய சிகரத்தினையும், சூரிய சந்திரர்களின் ஒளியினையுமுடைய அருந்ததி மலை புகுதற்கரியது என்பது இதன் பொருளாகும்.

**வை.மு.கோ.வின் உரை**

> *அரனதிகன் உலகளந்த அரியதிகன்*
> *என்றுரைக்கும் அறிவிலார்க்குப்*
> *பரகதி சென்றடைவரிய பரிசேபோல்*

என்ற பகுதிக்கு உரையாசிரியர் வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியார் பின்வருமாறு விளக்கமளிப்பர்:

'திரிவிக்கிரமாவதாரத்தைக் குறிக்கும் உலகளந்த என்ற அடைமொழியைத் திருமாலுக்குச் சேர்த்துக் கூறியதனால் பிரமலோகம் உட்பட எல்லா உலகங்களையும் தன் திருவடிக் கீழ்ப்படுத்திக் கொண்ட சிறப்பையும், சிவபெருமான் தன் சிரமேற் கொள்ளுமாறு திருவடியினின்று கங்கையைப் பயந்த மேன்மையையும் வெளிப்படுத்துதல் மூலமாக அத்திருமாலே பரத்துவமென வெளியிட்டாரென்ப. இவ்வாறு மேன்மையைப் புலப்படுத்தும் அடைமொழியொன்றும் சிவபெருமானுக்குக் கொடுத்துக் கூறாதது கருதத்தக்கது'.[68]

**சமரசம்**

'அரியுஞ் சிவனுமொன்று; அதை அறியாதார் வாயில் மண்ணு' என்னும் பழமொழியை விளக்குவது இச்செய்யுளின் முதற்பகுதி. இதனால் கம்பரின் சைவ வைணவச் சமரசக் கொள்கை புலனாம் என்பர்[69] என்பது மற்றொரு சாரார் கருத்தாகும்.

**திருமாலின் பரத்துவமா?**

சிவன் பெரியவனா? உலகளந்த திருமால் பெரியவனா? என வாதிடுவோர் அறிவில்லாதவரென்றும், அவர் பரகதி சென்று சேர்தல் அரிது என்றும் சுக்கிரீவன் வாக்காகக் கம்பர் கூறியுள்ளார். இதனால் சிவன் தான் பெரியவன், திருமால் தான் பெரியவன் என வாதிடும் இருதிறத்தாரும் அறிவில்லாதவர் என அவர் தெளிவுபடக் கூறியுள்ளமையின் 'அத்திருமாலே பரத்துவம் என வெளியிட்டாரென்ப' என்னும் வை.மு.கோ. அவர்களின் விளக்கவுரை ஏற்குமாறில்லை.

திருமாலை மூவரில் முதல்வன் என நூலுட் பலவிடங்களில் கூறியுள்ளமையின் இங்குச் சமரசத்தை வலியுறுத்த முயன்றுள்ளார் என்பதும் பொருந்தாது.

கவந்தன் இராமனை, '**மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ?**'[70] என்றான். சீதை '**இராமனைச் செங்கண்மால், நான்முகன், சிவன் என எண்ணினாயா?**' என இராவணனை வினவினாள். இராவணன் இராமனைச் '**சிவனோ வல்லன், நான்முகனல்லன் திருமாலாம் அவனோ அல்லன்**' என்றான். இவர்கள் கூறியுள்ள சிவன், நான்முகன், திருமால் ஆகிய மூவரும் முறையே அழித்தல், படைத்தல், காத்தல் தொழிலைச் செய்துவரும் வியூக மூர்த்திகள் ஆவர். மூலப்பொருளாகிய பரநிலையை மறந்து வியூக நிலையிலுள்ள சிவன் பெரியவனா திருமால் பெரியவனா என வாதிடுவோர் அறிவில்லாதவர் என்பதும், அப்பரம்பொருளின் இயல்பு உணராதார் பரநிலை அடைதல் அரிது என்பதும் இதன்மூலம் கம்பர் வலியுறுத்த விரும்பும் கடவுட் கொள்கை என்பது மனங்கொள்ளத் தக்கது.

**ஐவகை நிலைகள்**

திருமாலுக்குரிய ஐவகை நிலைகளுள் பரம் என்பது பரமபதத்தில் நித்திய சூரிகள் புடைசூழ இறைவன் இருக்கும் இருப்பு. வியூக நிலையாவது பாற்கடலில் ஆதிசேடன் மீது அறிதுயில் கொள்ளும் நிலை. இப்பாற்கடற் பெருமானுக்கு வாசுதேவன், சங்கர்ஷ்ணன், அநிருத்தன், பிரத்தியும்நன் என நான்கு வியூக நிலைகள் உள. இந்நால்வருள் பிந்திய மூவரும் வாசுதேவனிலிருந்து வெளிப்பட்டு அழித்தல், காத்தல், படைத்தல் ஆகிய முத்தொழில் புரியும் சிவன், திருமால், பிரமன் ஆகியோராவர்.

பரம், வியூகம் ஆகிய நிலைகளை வைத்து '**அரனதிகன் .......**' எனத் தொடங்கும் பாடலுக்குப் பொருள் காண முயன்றிடின் முரண் தோன்ற வாய்ப்பில்லை எனலாம்.

**கம்பரின் நடுநிலைமை**

கம்பர் திருமாலின் பரத்துவத்தைத் தம் நூலுள் வலியுறுத்தியுள்ளார். எனினும் சிவனை அவர் யாண்டும் இழித்துரைத்தாரல்லர்.

சைவ நெறியினைப் பரப்பிய நாயன்மார்கள் சிவபெருமானே மேலானவன் என்பர், திருஞானசம்பந்தர்,

> '**மாலுஞ் சோதி மலரானும் அறிகிலா வாய்மையான்;**'[71]

என்றார்.

திருநாவுக்கரசர் சிவபெருமானின் அடியும் முடியும் காண்டற்கரியது என்பதை,

'குருந்த மொசித்த மாலுங்குலமலர் மேவினானும்
திருந்து நற்றிருவடியும் திருமுடி காணமாட்டார்'[72]

என உரைத்தார்.

ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் திருமாலை உயர்த்திப் பேசுவன.

'நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான்முகனும் முறையால்
சீரேறு வாசகஞ் செய்யநின்ற திருமாலை'[73]

என்பது பெரியாழ்வார் வாக்கு.

'பெண்ணுலாம் சடையினானும் பிரமனும் உன்னைக் காண்பான்
எண்ணிலா வூழிவூழித் தவஞ்செய்வார் வெள்கிநிற்ப'[74]

என்பர் தொண்டரடிப் பொடியாழ்வார்.

பிரமனும், சிவனும் திருமாலால் படைக்கப்பட்டவர்கள் என்பதைத் திருமழிசை ஆழ்வார்,

'நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்'[75]

என்பர்.

**கம்பர்**

ஆழ்வார்கள் கம்பருக்கு முன்னோடி எனினும் அவர்களைப் போன்று கம்பர் திருமாலை உயர்த்தியும் பிற கடவுளரைத் தாழ்த்தியும் பாடவில்லையென்பது குறிப்பிடத்தக்கது. எனினும் ஆழ்வார்களையொப்பக் கம்பரும் பிரமனும், சிவனும் தேடியும் காணமுடியாதது திருமாலின் திருவடி என ஓரிடத்தில் குறிப்பிடுவர்.

'திறத்து மாமறை அயனோடு ஐம்முகன் பிறர்தேடிப்
புறத் தகத்துணர் வரியதுன் பொன்னடிக் கமலம்'[76]

என்பது கம்பர் வாக்கு. 'இச்செய்யுள் யாங்கண்ட ஏட்டுப் பிரதியொன்றிலும் காணப்படவில்லை'[77] என்பார் வை.மு.கோ. இப்பாடலும் கம்பரால் எழுதப்பட்டது என்பது ஐயத்திற்கிடமின்றி அறியுமாறில்லையாதலின், கம்பர் சைவர்கள் மனம் புண்படும் வகையில் சிவனை யாண்டும் இழித்துரைத்திலர் என்பது நன்கு விளங்குவதாகும்.

திருமாலின் அவதாரமாகிய இராமன் சிவன் வில்லை நாணேற்றி முறித்துவிடுகிறான். சிவபக்தர்களாகிய இராவணனும், வாலியும் இராமனால் ஒறுக்கப்படுகின்றனர். சிவனும் பிரமனும் காப்பியத்தில் நேரே தோன்றி இராமனின் பரத்துவத்தை உணர்த்துகின்றனர். எனினும் சிவநிந்தனை சிறிதுமின்றிக் காப்பியத்தை இயக்கிச் செல்வது கம்பரின் சான்றாண்மையினையும், நடுவு நிலைமையினையும் தெள்ளிதின் உணர்த்தும் எனலாம். இத்தகைய தாக்குரவினை அவர்பால் தோற்றுவித்தவர் நம்மாழ்வார் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

**நம்மாழ்வாரும் கம்பரும்**

கம்பர் ஆழ்வார்களின் அடித்தொண்டர். அவர்களே அவருக்கு முன்னோடி. இதை அவர் பாடல்களே நமக்கு உணர்த்தும்.

நம்மாழ்வார் பாசுரங்கள் கம்பரைப் பெரிதும் கவர்ந்தன. திருவாய்மொழியில் நம்மாழ்வார் திருமாலுக்கு மட்டுமன்றிப் பிரமனுக்கும் சிவனுக்கும் வணக்கம் தெரிவிக்கிறார்.

முனியே நான்முகனே முக்கண்ணப்பா'[78]

என்பது திருவாய்மொழி.

தாம் வீடுபேறடைவதற்குக் காரணமானவர்கள் மும்மூர்த்திகள் என்பதை,

> 'அரியை அயனை அரனை அரற்றி அவாவற்று வீடுபெற்ற
> குருகூர்ச் சடகோபன்'[79]

எனவும் குறிப்பிடுவர். எந்தப் பெயரானால் என்ன? தெய்வம் தெய்வம் தான் என்பது நம்மாழ்வாரின் புதுமைச் சிந்தனை. இச்சிந்தனையில் தம்மை ஈடுபடுத்திக்கொண்ட கம்பர், அவர் வழிநின்று பிற தெய்வ நிந்தனையின்றிக் காப்பியம் புனைந்திருப்பது உளங்கொள்ளத்தக்கது.

> நம்மாழ்வாருக்குத் திருமாலே முழுமுதற் கடவுள். ஆயினும் தாம் கண்ட விதத்தாலன்றி முழுமுதற் பொருளை வேறு கோணங்களில் கண்டவர்கள் இட்டு அழைத்த பெயர்களிலும் அவருக்கு ஆட்சேபம் இல்லை. அதாவது சைவர்களின் சிவப்பெயரும் முழுமுதற் பொருளுக்கே ஆவதால் இதுவும் (இப்பெயரும்) ஆழ்வாருக்கு உடன்பாடே என்பது கருத்து. அயன்மாட்டும் இவ்விதமே கொள்க.

ஏனெனில்,

> அவரவர் தமதமது அறிவறிவகை வகை
> அவரவர் இறைவர் எனவடி அடையவர்கள்
> அவரவர் இறைவர் குறைவிலர் இறையவர்
> அவரவர் விதிவழி அடைய நின்றனரே

> என்ற திருவாக்கில் கடவுளின் பலதரப்பட்ட பெயர், உருவம் குணங்களுள் ஒரு வகையை மட்டும் ஒருவன் மேற்கொள்வது அவன் விரும்பியேயன்றிப் பெரும்பாலும் ஓரிடத்தில் பிறந்துவிட்டதாலேயே. ஆதலால் அவை விதிப்பயனே என்று எடுத்துக் காட்டியுள்ளார். இந்தவகையில் இவருடைய புதிய தாரகம்,

> ஓம் நமச்சிவாய
> நமோ நாராயணாய
> பரப் பிரம்மனே நமஉற

> என்பதுவே. இது காந்தியடிகளின் ஈசுவர அல்லா தேரேநாம் என்பது போன்றதே. இந்த மந்திரங்களில் இரண்டு மூன்று தெய்வங்களல்ல சொல்லப்படுவது. ஓரே தெய்வத்துக்கு அனேக பெயர்கள் மட்டுமே.[80] இச்சமரசச் சர்வோதயத்தின் வழிச் சென்று கலைக்கடல் கம்பர் சிவநிந்தனை சிறிதும் இல்லாமலே இராமாயணப் பாரகாவியம் செய்துள்ளமையை உலகனைத்தும் அறியும்.[81]

கம்பரின் சமயப் பொதுமை அறிஞர்களின் நெஞ்சங்களைக் கவர்ந்துள்ளது.

> 'தாம் ஒரு வைதீக வைணவராயிருந்தும் சைவர்க்கும் வைணவர்க்கும் நேரும் சமயப் பூசல்களைக் குறித்துக் கம்பர் வெறுப்புக் கொண்டவர்.

> எங்கள் சமயமே சிறந்த சமயம் என வாய்ப்பறை அறைந்து திரியும் சமய வெறியர்களுக்கு அவர் சிறிதும் ஆதரவு காட்டவில்லை. உலகத்தில் சமய குரவர்களான பெரியோர்கள் வேறு வேறானவர்களாயினும், அவர்கள் கருத்துக்கள் வேறுபட்டவை எனினும், அவர்கள்

> **செய்துவந்த பிரசாரங்கள் மாறுபட்டன எனினும் பேரின்ப வெள்ளத்தின் பிறப்பிடமாகிய வீடுகுறித்துச் சொல்வதில் அவர்கள் எல்லோரும் ஒன்றுபட்டவர்கள் என்று கம்பர் நமக்கு உணர்த்துகிறார். தங்களுடைய கருத்து வேற்றுமையை விடுத்துச் சமயப் பிரசாரகர்கள் யாவரும் ஒரு பொதுச் சமயத்தையே பிரசாரம் செய்ய வேண்டுமென்பது கம்பர் விருப்பம்'**[8] என்பர்.

நம்மாழ்வாரைப் போன்றே கம்பரும், கடவுள் எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் அவர் ஒருவரே என்னும் கருத்துடையவர் என்பதும், சமயச் சான்றோர்கள் கருத்தால் ஒத்தவர்கள் என்பது அவரது கருத்து என்பதும் ஈண்டு அறியத்தகும்.

**பரம்பொருள்**

கம்பர் இராமனைப் பரம்பொருள் என்பார். இராமன் திருமாலின் அவதாரம் எனவும் நூலுள் பலவிடங்களில் வலியுறுத்தியுள்ளார். ஆதலின் இராமன் வேறு, திருமால் வேறு எனக் கொள்ளமுடியாது.

திருமாலின், ஐந்து நிலைகள் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்பன. பரநிலைப் பெருமான் நேரே அவதாரமெடுப்பதில்லை. அவதாரமெடுப்பவர் பாற்கடற் பெருமானே. பரநிலைப் பெருமானுக்கு அடுத்த நிலையில் உள்ளவர் பாற்கடற் பெருமான். திருமால் ஐந்து நிலைகளிலும் ஒரே காலத்தில் இருப்பவர்.

திருமாலே இராமனாக அவதரித்தான் என்பது கம்பர் கூற்று. அவதாரமெடுப்பது பாற்கடற் பெருமான் ஆதலின், பாற்கடல் விட்டுப் பூமியில் பிறந்தான் என்றார் கம்பர். இராமாவதாரம் பரிபூரண அவதாரம். அதாவது மனித இயல்பு ஓங்கி நின்ற அவதாரம். இராவணன் ஆற்றலில் மேம்பட்டவன். ஆதலின் பரம்பொருள் பெருமானைத் தம்முள் வாங்கிக் கொண்டு இராமனாக அவதரித்தான் எனக் கம்பர் குறிப்பிடுவது பொருத்தமாகும். அதனால் இராவணனை இவனோ தானவ் வேதமுதற் காரணன் எனப் பேசச் செய்தார்.

> **'சிவன், பிரமன் ஆகியோர் இராவணனுக்குக் கொடுத்த வரங்களைத் தவிடுபொடியாக்குவதற்காகவே பாற்கடற் பெருமான் பரம்பொருள் பெருமான் ஆற்றலை மேற்கொண்டு இராமனாக அவதரிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.**

இராமனைத் திருமாலெனச் சொல்லும்போது அவதார நோக்கில் பாற்கடல் பெருமானாகக் கம்பர் குறிப்பிடுகிறார். அவன் ஆற்றலை நோக்கிச் சொல்லும்போது பரம்பொருள் திருமால் எனக் கூறுகிறார்.

இரண்டு நிலைகளிலும் ஒரே பெருமான் என்றாலும் ஆற்றல் வேறுபாடு நோக்கி இராமனை இரு வேறு வகையாகக் கம்பன் குறிப்பிடுவது வைணவ சித்தாந்தப்படி பொருத்தமேயாகும்'[88] என்பர்.

பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலே இராமனாக அவதரித்தான். அப்பாற்கடற் பெருமானும் திருமாலின் ஐந்து நிலைகளில் ஒன்றாதலின் அவனும், பரநிலைத் திருமாலும் வேறல்லர். ஆதலின் திருமாலின் அவுதாரமாகத் தோன்றிய இராமனைப் பரம்பொருள் என்றது பொருத்தமே எனலாம்.

## தொகுப்புரை

கடவுள் என்ற சொல் அனைத்துள்ளும் நின்று அனைத்தையும் கடந்தும் விளங்குகின்ற பரம்பொருளைக் குறிப்பதாகும். இப்பரம்பொருளை ஒவ்வோர் இனத்தாரும் சமயத்தாரும் ஒவ்வொரு பெயரால் குறிப்பிடுவர்.

கடவுளின் உண்மையைக் கம்பர் தம் நூலுள் வலியுறுத்தியுள்ளார். ஒவ்வொரு சமயமும் கடவுளின் ஒவ்வோரியல்பைக் கண்டு நிறைவடைவதாக அவர் கருதுகிறார்.

பல்வேறு சமயங்களும் குறிப்பிடுகின்ற பரம்பொருள் ஒன்றே. அவரவர் அம்மூலப்பொருளை வெவ்வேறு பெயரிட்டு அழைப்பர்.

மும்மூர்த்திகளுள் திருமாலின் முதன்மையை ஆழ்வார் பாடல்களால் அறியமுடிகின்றது. ஆழ்வார்களைப் போன்று கம்பர் திருமாலையும், இராமனையும் மூவர்க்கும் முதல்வன் என்பர். எக்கடவுளுக்கு வழிபாடியற்றினும் அவ்வழிபாடு திருமாலைச் சென்றடையும் என்பது கம்பரது கருத்து. இராமனே அனைவர்க்கும் நாயகன் என்பர்.

இராமன், மும்மூர்த்திகளும் இணைந்து ஒருருவானவன் என்பது கம்பர் வலியுறுத்தும் கொள்கை.

திருமாலின் அவதாரமாகிய இராமன் பரம்பொருள் என்பதைப் பிரமனும், சிவனும் காப்பியத்தில் நேரில் தோன்றி மற்றையோர்க்கு உணர்த்தினர். நரசிம்ம அவதாரத்தை அவர்கள் நேரில் கண்டு வணங்கி வழிபட்டனர்.

மூவரையும் தான் வென்றதாகக் கூறிவந்த இராவணன், இறுதியில் இராமன் வேதமுதற் காரணனாகிய பரம்பொருள் என்பதை உணர்ந்தான்.

சிவன் பெரியவனா? திருமால் பெரியவனா? என்ற வினாக்களை எழுப்பி வாதிடுவோர், பரம்பொருளின் தன்மையை உணராது வியூக நிலையிலுள்ள இரு மூர்த்திகளுள் பெரியவன் யாவன் என வாதிடுவோராவர்.

கம்பர் சிவன், பிரமன் ஆகிய கடவுளரைத் தம் நூலில் இழித்துரைக்காது, திருமாலின் பரத்துவம் தோன்ற நூல் புனைந்திருப்பது அவரது நடுவுநிலை தவறா நெஞ்சத்தைத் தெள்ளிதின் புலப்படுத்தும்.

கம்பர் திருமாலையும், திருமாலின் அவதாரமாகிய இராமனையும் பரம்பொருளெனக் கருதினார். இதனால் ஆழ்வார்களின் கடவுட் கொள்கையே கம்பரது கடவுட் கொள்கை என்னும் முடிவுக்கு வரலாம்.

## சான்றெண் விளக்கம்

1. **கழகத் தமிழ் அகராதி,** *ப. 254.*
2. *சுப்பிரமணியபிள்ளை, கா.,* **தமிழர் சமயம்,** *ப. 70.*
3. **கலைக்களஞ்சியம்,** *தொகுதி - 3, பக். 70 - 71.*
4. **திருக்குறள்,** *கடவுள் வாழ்த்து - 1.*
5. **சிலப்பதிகாரம்,** *வரந்தரு, அடி. 187*
6. *ஸ்ரீநிவாசையங்கார், உ.வே. C.R .* **ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்,** *ப. 370.*
7. *பாண்டுரங்கன், அ.,* **காப்பிய நோக்கில் கம்பராமாயணம்,** *ப. 70.*
8. I *: 20 : 12.*
9. VI *: 4 : 117.*
10. VI *: 18 : 256.*
11. I *: 19 : 19.*
12. *இராசமாணிக்கனார், மா.,* **கம்பர் யார்?** *பக். 50 - 51.*
13. *திருமூலர்,* **திருமந்திரம்,** *ஏழாந்தந்திரம், 30, இதோபதேசம் - 3.*
14. *மேலது, ஐந்தாந் தந்திரம், 20, உட்சமயம் - 2.*
15. **திருவாசகம்,** *போற்றித் திருவகவல், அடி 164 - 165.*
16. **தாயுமானவர் பாடல்கள்,** *42, கல்லாலி. 95.*
17. **திருவருட்பா,** *ஆறாந்திருமுறை, அனுபவமாலை. 88.*
18. **பாரதியார் கவிதைகள்,** *முரசு 12,13.*
19. I *: 1 : 19.*
20. *ஔவை நடராசன்,* **கம்பர் காட்சி,** *ப. 171.*
21. *ஞானசம்பந்தன், அ.ச.,* **கம்பனின் புதிய பார்வை,** *ப. 147.*
22. *திருக்குற்றாலத் தலபுராணம், திருநதிச் சருக்கம். 21,* **கம்பராமாயண சாரம்** *தொகுதி* I, *ப.17.*
23. **தேவாரம்,** *திருமழபாடிப் பதிகம். 4.*
24. *மேலது, திருவிடைமருதூர்ப் பதிகம் - 2.*
25. **கலித்தொகை,** *நெய்தற்கலி. 7.*
26. **சிலப்பதிகாரம்,** *ஆய்ச்சியர், படர்க்கைப் பரவல். 2.*
27. **முதல் திருவந்தாதி,** *15.*
28. **பெரிய திருமொழி,** *4.1.2.*
29. *மேலது, 9.9.1.*
30. **திருக்குறுந்தாண்டகம்,** *6.*
31. **திருவாய்மொழி,** *9.8.9.*
32. *மேலது, 3.6.2.*
33. **பெரியாழ்வார் திருவாய்மொழி,** *4.4.1.*

34. VI *: 18 : 179.*
35. I *: 21 : 69.*
36. I *: 21 : 57.*
37. I *: 5 : 119.*
38. II *: 9 : 100.*
39. I *: 22 : 37.*
40. IV *: 7 : 148.*
41. VI *: 2 : 111.*
42. **திருவாய்மொழி,** *1.1.1.*
43. VI *: 26 : 175.*
44. III *: 8 : 100.*
45. VI *: 6 : 71.*
46. **திருவாய்மொழி,** *4.10.5.*
47. *மேலது, 3.9.6.*
48. III *: 1 : 52.*
49. **திருவாய்மொழி,** *4.10.4.*
50. III *: 1 : 59.*
51. **பரிபாடல்** *- 1. அடி 43 - 46.*
52. *மேலது, 3. அடி 13 - 14.*
53. **திருநெடுந்தாண்டகம்,** *2.*
54. **நான்காம் திருவந்தாதி,** *54.*
55. **திருவாய்மொழி,** *8.8.4.*
56. *மேலது, 4.8.1.*
57. *மேலது, 1.5.4.*
58. II *: 3 : 62.*
59. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *அயோத்தியா காண்டம் - 1, அ.ப. வெளியீடு, ப. 266.*
60. V *: 13 : 80.*
61. IV *: 6 : 16.*
62. VI *: 37 : 102.*
63. VI *: 26 : 143.*
64. VI *: 3 : 161.*
65. VI *: 4 : 49.*
66. VI *: 36 : 135.*
67. IV *: 13 : 24.*
68. **கம்பராமாயணம்,** *கிட்கிந்தா, வை.மு.கோ. பதிப்பு, ப. 635.*

69. **கம்பர் இயற்றிய இராமாயணம்,** *கிட்கிந்தா - II , அ.ப. வெளியீடு, ப. 228.*
70. III *: 10 : 42.*
71. *திருஞானசம்பந்தர் தேவாரம்,* **மூவர் தேவாரம்,** *ப. 366, பாடல் எண். 10.*
72. *திருநாவுக்கரசர் தேவாரம்,* **மூவர் தேவாரம்,** *ப. 375, பாடல் எண். 9.*
73. **பெரியாழ்வார் திருவாய்மொழி,** *4.1.5.*
74. **திருமாலை,** *44.*
75. **நான்முகன் திருவந்தாதி,** *1.*
76. IV *: 3 : 73.*
77. **கம்பராமாயணம்,** *கிட்கிந்தா காண்டம், வை.மு.கோ. பதிப்பு, ப. 133.*
78. **திருவாய்மொழி,** *10.10.1.*
79. *மேலது, 10.10.11.*
80. *குலசேகரன், எஸ். டாக்டர்,* **வைணவத்தில் ஆழ்வார்கள் காலநிலை,** *பக். 304 - 305.*
81. *மேலது, ப. 302.*
82. *ராதாகிருஷ்ண பிள்ளை, மு.,* **கம்பன் கவி அமுதம்,** *பக். 8 - 9.*
83. *இரத்தினம் செட்டியார், பழ.,* **கம்பன் உணர்த்தும் பரம்பொருள் நிலை,** *பக். 33 - 35.*

# முடிவுரை

இவ் ஆய்வு கம்பராமாயணம் வெளிப்படுத்தும் கடவுட் கோட்பாட்டைக் கண்டறிய முயன்றுள்ளது. இவ் ஆய்விற்கு வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியர் உரையெழுதிப் பதிப்பித்துள்ள ஆறு காண்டங்களும் முதன்மை மூலங்களாகக் கொள்ளப்பெற்றன. இந்த ஆய்வில் பெறப்பட்ட உண்மைகள் ஒவ்வோர் இயலின் ஈற்றிலும் தொகுப்புரையில் தரப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் தொகுத்து நோக்கி இவ் ஆய்வின் பயனாக விளைந்த முடிவுகளுள் முதன்மையானவற்றை இவ்வியல் முறைப்படுத்திக் கூறுகிறது.

கம்பர் தம் குடிப் பெயராகிய **'கம்பர்'** என்பதையே தம் பெயராகக் கொண்டிருந்தார். அவர் தாம் இயற்றிய இராமாயணத்திற்கு இட்ட பெயர் **'இராமாவதாரம்'** என்பதாகும். அந்நூல் ஒரு வழிநூல் ஆகும். ஆயினும் முதல் நூல் எனக் கொள்ளத்தக்கச் சிறப்பினை உடையது.

நூலின் பாடுபொருள் அரக்கர் அழிவாகும். இதனைக் கம்பர் நூலினூடே இடம்பெறச் செய்துள்ளார். **'அறம் வெல்லும், பாவம் தோற்கும்'** என்பது நூலின் பாவிகம். அதனைக் கவி காப்பிய மாந்தரின் கூற்றாக வெளிப்படுத்தியுள்ளார்.

கம்பரின் தமிழ்ப்பற்றும், புலமை நலன்களும் நூலில் நன்கு வெளிப்படுகின்றன. **'கவிச்சக்கரவர்த்தி'** என்னும் சிறப்புப் பெயரால் அவர் போற்றப்படுகிறார். முன்னோர் மொழிகளைப் பொன்னே போல் போற்றுவதோடு, அவர் ஓர் ஒருமைப்பாட்டுக் கவிஞராகவும் திகழ்கிறார்.

கம்பர் ஆழ்வார்கள், திருத்தக்க தேவர் ஆகியோருக்குப் பிந்தியவர், அவரது காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டாகும். அவர் காலத்தில் நிலவிய சமயப் பூசலே சமயப் பொதுமைக் கருத்துக்கள் நிரம்பிய காப்பியத்தை அவர் படைக்கக் காரணமாக அமைந்துள்ளது.

தமிழகத்தில் திருமால் வழிபாடு மிகத் தொன்மையானது. கம்பர் தம் திருமால் பக்தியை நூலில் வெளிப்படுத்துவதோடு, திருமாலின் தோற்றம், பல்வேறு அருட்செயல்கள், உறையும் இடங்கள் ஆகியவற்றைத் தம் நூலில் விரிவாக விளக்கியுள்ளார்.

அவர் சிவபெருமானையும் பெரிதும் போற்றுகிறார். அவர் சிவனை மூவரில் முதலிடத்தில் வைத்துள்ளார். இதனால் பெரும்பாலோரின் வழிபாட்டு நெறியினைக் கம்பர் மதித்துப் போற்றியமை புலனாகிறது. பிரமன், இந்திரன், வருணன், முருகன் ஆகியோரும், பெண் தெய்வங்களான திருமகள், உமையம்மை, கொற்றவை ஆகியோரும் நூலுள் இடம் பெற்றுள்ளனர்.

இறைவன் தன் இச்சையால் எடுக்கும் அவதாரங்கள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை பத்தாம். கம்பர் தம் நூலில் மச்சம், வராகம், கூர்மம் ஆகிய அவதாரங்களைக் குறிப்பிட்டுள்ளார். அவர் வான்மீகத்தில் இல்லாத நரசிம்ம அவதாரத்தை '**இரணியவதைப் படலம்**' வாயிலாக விளக்குகிறார். வான்மீகத்தை ஒட்டியே பரசுராம அவதாரம் நூலில் அமைந்துள்ளது. வாமன அவதாரப் பெருமையைக் கம்பர் சிறப்பித்துப் பாடுகிறார்.

பலராம அவதாரத்திற்கு அவர் சிறப்பிடம் தரவில்லை. ஆயினும் கண்ணன் அவதாரத்தில் கொண்ட ஈடுபாட்டினை அவர் '**கண்ணன்**' என்னும் பெயரைப் பலவிடங்களில் இடம்பெறச் செய்வதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். வான்மீகர் போலன்றிக் கம்பர் இவ் அவதாரம் நிகழ்ந்ததற்குப்பின் வாழ்ந்தாராதலின், கண்ணன் அவதாரப் பெருமையைத் தம் நூலில் சிறப்பித்துப் பேச முடிந்தது.

இராமன் திருமாலின் அவதாரம் என்பதைச் சங்கப் பாடல்களும், காப்பியங்களும் விளக்குகின்றன. ஆழ்வார்கள் இராமாவதாரத்தில் பெரும் பற்றுக் கொண்டிருந்தனர்.

இராமன் மானிடனாகப் பிறந்து மானிடப் பண்புகள் நிறைந்து விளங்குகிறான்.

கம்பர் இராமாவதாரச் சிறப்பினைக் கவிக்கூற்றுக்கள், பாத்திரக் கூற்றுக்கள் வாயிலாக நிறுவுகிறார். காப்பியத்தில் அவதாரப் பெருமையினை மானிடப் பாத்திரங்களும், வானரரும், அரக்கரும், முனிவரும், தேவரும், கடவுளரும் போற்றுகின்றனர். முத்தேவரில் பிரமனும் சிவனும் இராமனைத் திருமாலெனவும், பரம்பொருளெனவும் பிறருக்கு விளங்க உரைக்கின்றனர். இதனால் இராமாவதாரச் சிறப்பினை வலியுறுத்துவதே கம்பரின் காப்பிய நோக்கம் என்பது புலனாகிறது.

விசிட்டாதுவைதம் என்பது விசேட அத்துவிதமாகும். இத்தத்துவம் முப்பொருள் உண்மையினையும், அம்முப்பொருள்களுள் ஒன்றாகிய இறைவனை அடையும் வழிகளையும் விளக்குகிறது.

இராமானுசர் இத்தத்துவத்தை வெளிப்படுத்தியவராவார். இத்தத்துவக் கருத்துக்கள் கம்பராமாயணத்தில் விரவிக் கிடக்கின்றன.

நூலிலுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் மற்றும், விராதன், கவந்தன், கருடன் ஆகியோர் துதிகளிலும் விசிட்டாதுவைதம் இடம்பெற்றுள்ளது. **'ஓம் நமோ நாராயணாய'** என்னும் எட்டெழுத்து மந்திரம் நூலில் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

ஈசுவரனின் பல்வேறு குணங்கள் இறைவனின் அவதாரமாகத் தோன்றிய இராமனிடம் பொருந்தியுள்ளன.

காப்பிய மாந்தர்கள் காப்பியத் தலைவனிடம் சரணடைகின்றனர். எனவே இக்காப்பியம் ஒரு சராணாகதிக் காப்பியம் ஆகும்.

கடவுள் என்ற சொல் அனைத்துள்ளும் நின்று அனைத்தையும் கடந்து விளங்குகின்ற பரம்பொருளைக் குறிப்பதாகும். இப்பரம்பொருளை ஒவ்வோர் இனத்தாரும், சமயத்தாரும் ஒவ்வொரு பெயரால் அழைக்கின்றனர்.

கம்பர் கடவுளின் உண்மையைத் தம் நூலுள் வலியுறுத்தியுள்ளார். ஒவ்வொரு சமயமும் கடவுளின் ஒவ்வோரியல்பைக் கண்டு நிறைவடைவதாக அவர் கருதுகிறார்.

கம்பர் ஆழ்வார்களைப் போன்று திருமாலையும், இராமனையும் மூவர்க்கும் முதல்வன் என்கிறார். எக்கடவுளுக்கு வழிபாடியற்றினும் அவ்வழிபாடு திருமாலைச் சென்றடையும் என்பது அவர் கருத்து.

திருமாலின் அவதாரமாகிய இராமன் பரம்பொருள் என்பதைப் பிரமனும் சிவனும் காப்பியத்தில் நேரில் தோன்றி மற்றையோர்க்கு உணர்த்தினர். நரசிம்ம அவதாரத்தை அவர்கள் நேரில் கண்டு வணங்கி வழிபட்டனர்.

மூவரையும் தான் வென்றதாகக் கூறிவந்த இராவணன் இறுதியில் இராமன் வேதமுதற் காரணனாகிய பரம்பொருள் என்பதை உணர்ந்தான்.

கம்பர், சிவன், பிரமன் ஆகிய கடவுளரைத் தம் நூலில் இழித்துரைக்காது திருமாலின் பரத்துவம் தோன்றப் புனைந்துள்ளார். இது அவரது நடுவுநிலை தவறாத நெஞ்சத்தைத் தெள்ளிதின் புலப்படுத்துகிறது.

கம்பர் திருமாலையும், திருமாலின் அவதாரமாகிய இராமனையும் பரம்பொருளெனக் கருதினார். இதனால் ஆழ்வார்களின் கடவுட் கொள்கையே கம்பரது கடவுட் கொள்கை என்பது தெளிவுறும்.

# ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்


**முதன்மை நூல்கள்**

1. **ஸ்ரீ கம்பராமாயணம் பாலகாண்டம்** — *வை. மு. நரசிம்மன், வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி, 17, தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5. 8ஆம் பதிப்பு, 1973.*
2. **ஸ்ரீ கம்பராமாயணம் அயோத்தியா காண்டம்** — ” *ஆறாம் பதிப்பு, 1966.*
3. **ஸ்ரீ கம்பராமாயணம் ஆரணிய காண்டம்** — ” *நான்காம் பதிப்பு, 1965.*
4. **ஸ்ரீ கம்பராமாயணம் கிட்கிந்தா காண்டம்** — ” *ஐந்தாம் பதிப்பு, 1967.*
5. **ஸ்ரீ கம்பராமாயணம் சுந்தர காண்டம்** — ” *ஏழாம் பதிப்பு, 1963.*
6. **ஸ்ரீ கம்பராமாயணம் யுத்த காண்டம் முதற்பகுதி** — *குவை பப்ளிகேஷன்ஸ், 51, பெல்சு சாலை, சென்னை - 5.*
   **” இரண்டாம்பகுதி** — *ஏழாம் பதிப்பு, 1976.*

**துணை நூல்கள் - தமிழ்**

*அண்ணங்கராசாரியர் (உ.ஆ.)* — **திருவாய்மொழி - முதற்பத்து திவ்யார்த்த தீபிகை உரை** *க்ரந்தமாலா ஆபிஸ், காஞ்சீபுரம், 1969.*
**திருவாய்மொழி - இரண்டாம் பத்து திவ்யார்த்த தீபிகை உரை** *க்ரந்தமாலா ஆபிஸ், காஞ்சீபுரம், ஐந்தாம் பதிப்பு, 1974.*

*அரங்க சீனிவாசன், அருட்கவி* — **வைணவத் தத்துவஞான அடிப்படைகள்** *திருவள்ளுவர் பதிப்பகம், அம்மாக்கண்ணு அம்மையார் திருமண மாளிகை, சின்ன செட்டித் தெரு,*

திருச்சிராப்பள்ளி, முதற்பதிப்பு, 1984.

இந்திரா பார்த்தசாரதி
**தமிழ் இலக்கியங்களில் வைணவம்**
தமிழ்ப் புத்தகாலயம்,
58, டி.பி. கோயில் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.
முதற்பதிப்பு, 1992.

இரத்தினம் செட்டியார், முரு. பழ.
சித்தாந்த வித்தகர்
**கம்பன் உணர்த்தும் பரம்பொருள் நிலை**
கம்பன் கழகம், சென்னை,
முதற்பதிப்பு, 1991.

இராகவையங்கார், மு.,
**தெய்வப் புலவர் கம்பர்**
கலைமதி பதிப்பகம், ஞானஒளிவுபுரம்,
மதுரை, முதற் பதிப்பு, 1969.ங

இராசமாணிக்கனார், மா.,
**கால ஆராய்ச்சி**
பாரி நிலையம், பிராட்வே, சென்னை-1.
இரண்டாம் பதிப்பு, 1973.

**கம்பன் யார்?**
சாந்தி நூலகம், 2/122 பிராட்வே,
சென்னை-1, இரண்டாம் பதிப்பு, 1958.

இராமராஜன், எஸ். கே.,
**ஆழ்வார்களும் கம்பனும்**
கம்பன் கழகம், சென்னை - 40.
முதற் பதிப்பு, 1992.

இளங்குமரன், இரா., (ப.ஆ.)
**நன்னூல் காண்டிகை உரை**
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1, முதற் பதிப்பு, 1972.

இளம்பூரணர் (உ.ஆ.)
**தொல்காப்பியம் - பொருளதிகாரம்**
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1, மறுபதிப்பு, 1969.

ஊரன் அடிகள் (ப.ஆ.)
**திருவருட்பா**
சமரச சுத்த சன்மார்க்க ஆராய்ச்சி
நிலையம், சமயபுரம் அஞ்சல்,
திருச்சிராப்பள்ளி மாவட்டம்,
முதற் பதிப்பு, 1972.

| | |
|---|---|
| *கச்சியப்ப சிவாசாரியர்* | **கந்த புராணம்** *(முதற் பகுதி)*<br>*ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள், 1952.* |
| *கம்பர்* | *1.* **கம்பர் இயற்றிய இராமாயணம்**<br>*பால காண்டம், முதற் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், முதற் பதிப்பு, 1963.*<br>*2.* **கம்பர் இயற்றிய இராமாயணம்**<br>*அயோத்தியா காண்டம், முதற் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், முதற் பதிப்பு, 1959.*<br>*3.* **கம்பர் இயற்றிய இராமாயணம்**<br>*அயோத்தியா காண்டம், இரண்டாம் பகுதி, முதற் பதிப்பு, 1963.*<br>*4.* **கம்பர் இயற்றிய இராமாயணம்**<br>*ஆரணிய காண்டம், முதற் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், முதற் பதிப்பு, 1963.*<br>*5.* **கம்பர் இயற்றிய இராமாயணம்**<br>*கிட்கிந்தாகாண்டம்,இரண்டாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், முதற் பதிப்பு, 1967.*<br>*6.* **கம்பர் இயற்றிய இராமாயணம்**<br>*சுந்தர காண்டம், முதற் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், இரண்டாம் பதிப்பு, 1963.*<br>*7.* **சடகோபர் அந்தாதி**<br>*வர்த்தமானன் பதிப்பகம், சென்னை - 34, முதற் பதிப்பு - 1988* |
| *கிருஷ்ணசாமி ஐயங்கார் (ப.ஆ.)* | **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்**<br>*3, புத்தூர் அக்கிரகாரம், திருச்சி - 17. 1988.* |
| *குமரகுருபரன் பிள்ளை, டி.எம்., (ப.ஆ.)* | **மூவர் தேவாரம் - தலமுறை**<br>*ஸ்ரீகுமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1968.* |

குருசாமி, ம.ரா.போ., **இராமாயணச் சிந்தனை**
நரேந்திரசிவம் பதிப்பகம், கோவை-45,
முதற்பதிப்பு, 1989.

குலசேகரன், எஸ்., **வைணவத்தின் ஆழ்வார்கள் காலநிலை**
திருமகள் வெளியீடு, ஈ-193,
16வது குறுக்குத் தெரு, சென்னை - 90.
முதற் பதிப்பு, 1988.

சதாசிவப் பண்டாரத்தார், தி.வை., **பிற்காலச் சோழர் வரலாறு**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
முதற் பதிப்பு, 1974.

சற்குணம், சொ., **சங்க கால இடைக்காலத் தமிழ்**
இலக்கியங்களில் தசாவதாரங்கள்
திருப்பதி வேங்கடவன் பல்கலைக்
கழகம், பிஎச்.டி. ஆய்வேடு, 1982.

சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.)
1. **புறநானூறு**
ஜோதி அச்சுக்கூடம், சென்னை.
நான்காம் பதிப்பு, 1950.
2. **சீவக சிந்தாமணி மூலமும்**
**நச்சினார்க்கினியர் உரையும்**
கபீர் அச்சுக்கூடம், சென்னை.
ஏழாம் பதிப்பு, 1969.
3. **பத்துப்பாட்டு மூலமும்**
**நச்சினார்க்கினியர் உரையும்**
டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்
நிலையம், திருவான்மியூர்.
சென்னை - 41, 1974.

சிவஞானம், ம.பொ.,
1. **வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு**
இன்ப நிலையம், மயிலாப்பூர்,
சென்னை - 4, மூன்றாம் பதிப்பு, 1965.
2. **கம்பரின் சமயக் கொள்கை**
பூங்கொடிப் பதிப்பகம்
14, சித்திரைக்குளம் மேற்கு வீதி,
மயிலாப்பூர், சென்னை - 4,
முதற் பதிப்பு, 1983.

சுந்தரமூர்த்தி, கு., (ப.ஆ.) — **தண்டி அலங்காரம்**
14, தெற்கு வீதி, கும்பகோணம்,
இரண்டாம் பதிப்பு, 1974.

சுப்பிரமணிய பாரதி, சி., — **பாரதியார் கவிதைகள்**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்ட்ரியர் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98,
முதற் பதிப்பு, 1994.

சுப்பிரமணிய பிள்ளை, கா., — **தமிழர் சமயம்**
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்,
சென்னை-1, இரண்டாம் பதிப்பு, 1953.

சுப்பிரமணிய பிள்ளை, ஜி., — **கம்பர் விருந்து**
மணிவாசகர் நூலகம், சிதம்பரம்,
முதற் பதிப்பு, 1965.

சுப்பிரமணிய முதலியார், வெ.ப., — **கம்பராமாயண சாரம் தொகுதி – 1**
மதுரைத் திரவியம் தாயுமானவர்
இந்துக் கல்லூரி வெளியீடு,
இரண்டாம் பதிப்பு, 1953.

சுப்பிரமணியன், ச.வே., — **காப்பியப் புனைதிறன்**
தமிழ்ப் பதிப்பகம்
1, கால்வாய்க்கரைச் சாலை,
அடையாறு, சென்னை - 20, 1979.

சுப்பு ரெட்டியார், ந., — **முத்தி நெறி**
184, பிராட்வே, பாரி நிலையம்,
சென்னை, முதற் பதிப்பு, 1982.

செல்வகேசவராய முதலியார், தி., — **கம்ப நாடர்**
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்
லிமிடெட், 1/40, பிரகாசம் சாலை,
சென்னை, 1974.

செவ்வைச் சூடுவார் — **பாகவதம் – முதல் பாகம்**
திருமலை - திருப்பதி தேவஸ்தான
அச்சுக்கூடம், திருப்பதி, 1953.

| | |
|---|---|
| சேக்கிழார் | **திருத்தொண்டர் புராணம், முதற்பகுதி,** கோவைத் தமிழ்ச் சங்கம், கோயம்புத்தூர், இரண்டாம் பதிப்பு, 1960. |
| சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.) | 1. **மணிமேகலை - மூலமும் உரையும்** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், 1/50, பிரகாசம் சாலை, சென்னை, 1975. |
| | 2. **ஐங்குறுநூறு** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் சென்னை, மறுபதிப்பு, 1975. |
| ஞானசம்பந்தன், அ.ச., | **கம்பன் - புதிய பார்வை** கம்பன் கழகம், சென்னை , முதற்பதிப்பு, 1984. |
| ஞானசுந்தரம், தெ., | **காப்பிய விருந்து** உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம், 33, திருமலை நகர் இணைப்பு, பெருங்குடி, சென்னை - 96, முதற்பதிப்பு, 1986. |
| தாயுமானவர் | **தாயுமான சுவாமிகள் பாடல்** பாரதி புத்தக நிலையம், மதுரை இரண்டாம் பதிப்பு, 1963. |
| திருமூலர் | **திருமந்திரம் 1,2** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969. |
| திருமேனி, கு., டாக்டர் | **கம்பராமாயணத் தோற்றம்** கோவல நிலையம், 14 வீரேச்சுரம், திருச்சி-6, முதற் பதிப்பு, 1982. |
| திருவரங்கத்தமுதனார் | **இராமானுச நூற்றந்தாதி** நாலாயிர திவ்விய பிரபந்தம் பதிப்பு பி.என் தேவநாதன், 1971. |

*துரைசாமிப் பிள்ளை, ஔவை, சு., (உ.ஆ.)*
**பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும்**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை - 1, 1973.*

*தோலாமொழித் தேவர்*
**சூளாமணி முதற் பாகம்**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை - 1, மறுபதிப்பு, 1970.*

*நச்சினார்க்கினியர் (உ.ஆ.)*
**கலித்தொகை**
*பதிப்புத்துறை*
*தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.*

*நடராசன், ஔவை*
**கம்பர் காட்சி**
*சேகர் பதிப்பகம், 66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர் நகர், சென்னை - 78, 1980.*

*நாமக்கல் கவிஞர்*
**கம்பரும் வால்மீகியும்**
*இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை - 4, 1956.*

*நாராயணசாமி ஐயர், பின்னத்தூர் (உ.ஆ.)*
**நற்றிணை நானூறு**
*திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை - 1, நான்காம் பதிப்பு, 1957.*

*பரிமேலழகர் (உ.ஆ.)*
1. **திருக்குறள் - அறத்துப்பால்**
*மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1972.*
2. **திருக்குறள் - பொருட்பால்**
*மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1976.*
3. **திருக்குறள் - காமத்துப்பால்**
*மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1976.*

4. **பரிபாடல்**
கபீர் அச்சுக்கூடம், சென்னை,
நான்காம் பதிப்பு, 1956.

பாண்டுரங்கன், அ., **காப்பிய நோக்கில் கம்பராமாயணம்**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்ட்ரியர் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98,
1989.

பாலசுந்தரம், ச., (உ.ஆ.) **தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்**
ஆராய்ச்சிக் காண்டிகை உரை
தாமரை வெளியீட்டகம்,
367, மேலவீதி, தஞ்சாவூர், 1988.

பிள்ளை, கே.கே., **தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை, திருத்திய பதிப்பு, 1981.

பிள்ளை லோகாசாரியர் **அஷ்டாத சரகசியம்**
ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயங்கார்
ஆசிரியர், ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம்,
38, புத்தூர் அக்கிரகாரம், திருச்சி - 17.
1987.

மாணிக்கவாசகர் **திருவாசகம்**
பி.இரத்தினநாயக்கர் ஸன்ஸ்,
சென்னை, பதிப்பு ஆண்டு இல்லை.

ராதா கிருஷ்ண பிள்ளை, எம்., 1. 'கம்பர்' **கம்பன் கவி அமுதம்**
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்
லிமிடெட், -417, 8, சின்னரெட்டித்தெரு,
எழும்பூர், சென்னை, இரண்டாம்
பதிப்பு, 1965.

2. **அவதாரமும் கம்பரும்**
அல்லயன்ஸ் கம்பெனி,
244 ராமகிருஷ்ண மடம் சாலை,
த.பெ.எண். 617, மயிலாப்பூர்,
சென்னை - 4, மூன்றாம் பதிப்பு, 1987.

ராமநாதன், அரு. (ப.ஆ.) **ஸ்ரீ விஷ்ணு புராணம்**
பிரேமா பிரசுரம், 35, ஆற்காடு சாலை,

கோடம்பாக்கம், சென்னை - 24,
ஏழாம் பதிப்பு, 1990.

ராய. சொ., **கம்பனும் சிவனும்**
அழகப்பா கல்லூரி வெளியீடு
காரைக்குடி, 1966.

லக்ஷ்மணன், கி., **இந்தியத் தத்துவ ஞானம்**
பழனியப்பா பிரதர்ஸ், சென்னை - 14,
மூன்றாம் பதிப்பு, 1980.

வரதராசன், மு., **தமிழ் இலக்கிய வரலாறு**
சாகித்திய அக்காதெமி, புதுதில்லி,
முதற் பதிப்பு, 1972.

வில்லிப்புத்தூரார்
1. **மகாபாரதம்**
ஆதிபருவம்,
வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியார்
கம்பெனி, சென்னை - 5,
ஐந்தாம் பதிப்பு, 1970.
2. **மகாபாரதம்**
உத்தியோக பருவம்,
குவை பப்ளிகேஷன்ஸ், சென்னை-5,
எட்டாம் பதிப்பு, 1976.

வேங்கடசாமி நாட்டார், ந.மு., (உ.ஆ.)
1. **அகநானூறு - களிற்றியானை நிரை**
பாகநேரி த.வை. இளைஞர் தமிழ்ச்
சங்க வெளியீடு, முதற் பதிப்பு, 1947.
2. **சிலப்பதிகாரம்**
பாகனேரி த.வை. இளைஞர் தமிழ்ச்
சங்க வெளியீடு, மறுபதிப்பு, 1968.

வையாபுரிப்பிள்ளை, எஸ்., **கம்பன் காவியம்**
தமிழ்ப் புத்தகாலயம்,
576, பைகிராப்ட்ஸ் ரோடு,
சென்னை - 5, நான்காம் பதிப்பு, 1965.

ஹரிணி (மொ.பெ.ஆ.) **ஸ்ரீமத் பாகவத கதாமிர்தம்**
நியூ பாரதி விஜயம் பிரிண்டர்ஸ்,
49, வெங்கடாசல செட்டித் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5,
பதிப்பு, ஆண்டு இல்லை.

ஸ்ரீநிவாசய்யங்கார், உ.வே.சி.ஆர் (மொ.பெ.ஆ.) — **ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், பாகம்-1**
**ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், பாகம்-2**
தி லிட்டில் பிளவர் கம்பெனி,
நந்திக் கோயில் தெரு, திருச்சி-2, 1984.

**ஆங்கில நூல்கள்**

Aliyar, V.V.S., — ***Kamba Ramayana - A Study***
Bhartiya Vidya Bhavan, Second Edition, Chaupatty, Bombay, 1970.

Nilakanta Sastri, K.A, — ***The Colas***
University of Madras, 1975.

Rajagopalachari, C., — ***Ramayana***
Bhartiya Vidya Bhavan, Bombay, Seventeenth Edition, 1977.

Satya Murthy Iyyangar, S., — ***What is Visishtadavaita System of Philosophy?***
A publication of His Holiness Sri Sriman Narayana Ramanuja Jeeyar, 13, South Uttara St., Srirangam, Trichy - 6.

Swami Chidbhavanda (Publisher) — ***The Bhagavat Gita***
Tapovanam Publishing House, Thirupparaithurai, P.O. Trichy Dt., 1965.

Thirumeni, C. — ***An expoloration of the origin of Kambaramayanam***
Kovala Nilayam. 14, Veereswaram, Trichy - 6, First Editoin, 1981.

**கலைக்களஞ்சியம் - தமிழ்**

அவினாசிலிங்கம், தி.சு., (ப.ஆ.) —
1. **கலைக்களஞ்சியம், தொகுதி-1,**
தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1954.
2. **கலைக்களஞ்சியம், தொகுதி-3,**
தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1956.
3. **கலைக்களஞ்சியம், தொகுதி-4,**
தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை,

*முதற்பதிப்பு, 1956.*

*4.* **கலைக்களஞ்சியம், தொகுதி-8,** *தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1961.*

*5.* **கலைக்களஞ்சியம், தொகுதி-9,** *தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1963.*

*சிங்காரவேல் முதலியார், ஆ.,* **அபிதான சிந்தாமணி** *ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், சி 2/15 எஸ்.டி.ஏ. புதுதில்லி-110016. ஏ.பி.எஸ். மறுபதிப்பு, 1982.*

**ஆங்கிலம்**

CANNEY. M.A., ***An Encyclopadia of Religions*** NAG Publishers, 8, A.V.A3, Jawahar Nahar, Delhi - 110 007, First Reprint, 1976.

Helen Hemingway Benton (Publisher) ***The New Encyclopaedia Britianica,*** Volume - I, Micropaedia Chicago, 15th Edition, 1975.

**அகராதி - தமிழ்**

------------- **கழகத் தமிழ் அகராதி,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், 79, பிரகாசம் சாலை, சென்னை - 108, ஐந்தாம் பதிப்பு, 1985.*

*கதிரைவேற்பிள்ளை, நா.,* **தமிழ்மொழி அகராதி** *ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், சி 2/15 எஸ்.டி.ஏ. புதுதில்லி-110016. முதல் மறுபதிப்பு, 1984.*

**அகராதி - ஆங்கிலம்**

Hawkins, JowceM ***The Oxford Paper Back Dictionary*** Oxford University Press, Third Edition, 1988.

**மலர்கள்**

**கம்பன் மலர்** *-1975, கம்பன் கழகம், சென்னை.*

**காரைக்குடிக் கம்பன் விழா மலர்,** *1991, காரைக்குடி.*



முனைவர் ப சுப்பிரமணியன் தஞ்சைத் தரணியில், வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரிக்கரையில் அமைந்துள்ள பழம்பதியாம் திருக்காட்டுப்பள்ளிக்கு அருகிலுள்ள விண்ணமங்கலம் என்னும் சிற்றூரில் 1941 இல் பிறந்தவர் இவர் ஆசிரியர் திரு ரெ பழநிவேலுப் - புண்ணாக்கியார்-திருமதி ப அன்னபூரணம் தம்பதியரின் மூத்த மகனாவார் தம்துணைவியார் திருமதி சு வள்ளியம்மையாருடன் இல்லறமேற்று நன்மக்களைப் பெற்றுள்ளார் அவர் குடும்பமே ஒரு கல்விக் கழகமாக அமைநதுளளது எனக் கூறுவது சாலப் பொருந்தும்

இவர் திருகாட்டுபபளளி சர சிவசாமி ஐயர் உயர்நிலைப்பள்ளியில் பள்ளிக் கல்வியையும திருசசி தூய வளனார் கல்லூரியில் பட்டப்படிப்பினையும் திருப்பராய்ததுறை விவேகானந்தர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் கல்வியியல் பட்டத்தையும் பெற்றுத் தஞ்சை பிளேக் உயர்நிலைப் பள்ளியில் கணித ஆசிரியராகப் பணிபுரிந்தார் இப்பணியில் இருந்து கொண்டே தமிழில் முதுகலைப பட்டத்தினைப்பெற்றுக் கல்லூரி ஆசிரியப் பணியில் சேர்ந்தார் இவர் 1985-இல் எம்ஃபில் பட்டம் பெற்றார் என் வழிகாட்டுதலில் கம்பராமாயணக் கடவுட் கோட்பாடு என்னும் தலைப்பில் ஆய்வு செய்த இவருக்கு 1995இல் திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகம் முனைவர் பட்டத்தினை வழங்கியது திருவரங்க ராசகோபுரம் என்னும் நூலை 1987இல் வெளியிட்டார்

இவர் 1991-இல் சிங்கப்பூர் பல்கலைக்கழகத்தமிழ்க்கருத்தரங்கில் பங்கேற்றுச் சங்க இலக்கியத்தின் பெற்றியை உலகறியச் செய்தார் இவர் தேர்ந்த சிந்தனையாளர், பாடறிந்தொழுகும் பண்பாளர், சமூகப் பொறுப்பு மிகுந்த எழுத்தாளர், கரையிலாக் கல்வியாளர், அவையறிந்து உரையாற்றும் மாண்பினர், சுருங்கக்கூறின் இவரை ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் எனலாம்

முப்பத்தெட்டு ஆண்டுகள் ஆசிரியப் பணி புரிந்து, நிறைவுபெற்ற பின்னரும் தமிழ்ப்பணியிலும், இறைப்பணியிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தொண்டாற்றி வரும் முனைவர் ப சுப்பிரமணியன் அவர்கள் இந்நூலில் கம்பரின் கடவுட் கோட்பாட்டைச் சாறாகப் பிழிந்து, தெளிவாக்கி, இனிக்கும் வெல்லக்கட்டியாகத் தந்துள்ளமை பாராட்டிற்குரியது இதனைக் கற்று இன்புறுக! பயன் பெறுக!

அன்பன்

முனைவர் அ. இராமரத்தினம்,
தமிழ்ப்பேராசிரியர் (ஓய்வு),
நேரு நினைவுக் கல்லூரி,
புத்தனாம்பட்டி.